வியப்பூட்டும்
சலவைப்
பவுடர்




விலை:
பெரிய
சைஸ்
ரூ. 2/19 ந.பைசா,
சாதாரண சைஸ் ரூ. 1/12 ந.
பைசா; (பிரதேச
வரிகள் உள்ளிட்டாமல்)

நீலநிற

# ஸர்ப்

## உங்கள் துணிகளின்
## வெள்ளைவெளேரென்ற சலவைக்கு

---

கற்பனை செய்திருக்க மாட்டீர்கள் அற்புத சலவைப் பவுடரான ஸர்ப் போன்று மகத்தான வெண்மை தரும் பவுடர் ஒன்றை!

பார்த்திருக்க மாட்டீர்கள் இது போன்று அற்புத நுரை கொழிக்கும் சாதனம் ஒன்றை! எத்தகைய நீரிலும் வெள்ளமெனக் கொழித்தெழும் நுரைவளம்!

உணர்ந்திருக்க மாட்டீர்கள் சலவை இவ்வளவு எளிதென்று! தேய்மானமே கிடையாது; ஊறவிட்டுக் கசக்கி அலசினாலே காரியம் ஆயிற்று!

அடைந்திருக்கவே மாட்டீர்கள் உங்கள் பணத்திற்கு இதுபோன்ற அற்புதமான ஈடு! உங்கள் குடும்பத்தின் சகல துணிகளுக்கும் உகந்தது!

சலவை செய்து பாருங்கள்... வெள்ளைவெளேரென்ற சலவைக்கு – ஸர்ப்

இந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு SU. 25-X29 TM

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 18
இதழ் 44

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

விகாரி௵
வைகாசி மீ 17

# ஹிந்திப் பிடிவாதத்தை விட்டு விடுங்கள்

ராஜாஜி

நமது அருமை ஜனாதிபதி அவர்கள் ஹிந்திப் புலவர்களுக்கும் அந்த மொழியின் வளர்ச்சியில் அக்கறை கொண்ட எல்லாருக்கும் மிக நல்ல புத்திமதிகள் சொல்லுவதைப் பத்திரிகைகளில் படிக்கிறோம். அதைப் போலவே நானும் தமிழ்ப் புலவர்களுக்கும் தமிழ் வளர்ச்சியில் அக்கறை கொண்டவர்களுக்கும் யோசனைகள் கூறலாம். இன்னும் எத்தனையோ பேர் அவரவர் பிரதேசமொழி சம்பந்தமாக அவ்வித ஆலோசனைகள் கூறலாம்.

உண்மை என்னவென்றால், ஹிந்தி இன்னும் நல்ல பிரதேச மொழியளவுகூட உருவெடுக்கவில்லை. இதுதான் அடிப்படையான விஷயம். ஹிந்தி என்று பெயரிடக்கூடிய வெவ்வேறான பல மொழிகள் உண்டு. அவற்றையெல்லாம் ஒன்றுகூட்டி ஒரு நல்ல பிரதேச மொழியாக ஹிந்தி இன்னும் வடிவம் கொண்டு வளரவில்லை. ஆகவே, தமிழைப் போல், மராட்டியைப்போல், வங்க மொழியைப்போல் ஹிந்தியாவதற்கே இன்னும் எவ்வளவோ செய்யவேண்டும். ஆனால் ஹிந்தி அரசாங்க மொழியாக வேண்டும் என்ற அரசியல் மோகம், அதன் இயல்பான வளர்ச்சியைக் கெடுத்து வருகிறது. அவசரமாகப் போட்ட கோலம் அள்ளித் தெளித்ததாக முடிவதுபோல் ஹிந்தியின் வளர்ச்சி பாதிக்கப் பட்டு வருகிறது.

அகராதிகள் தொகுத்துப் புதுச் சொற்கள் சிருஷ்டித்துப் புகுத்தி ஒரு பாஷை வளர்வதில்லை. அதிலும் அவசர சிருஷ்டிகளினால் மொழி வளர்ச்சியடைந்து விடாது. பாஷையின் வளர்ச்சிக்கு இலக்கியமே காரணம். ஒரு பாஷையின் இலக்கியம் எவ்வளவு சிறந்து விளங்குகிறதோ அந்த அளவுக்குத்தான் அந்த மொழியும் அழகும் வன்மையும் பெறும். இலக்கியம் பலவீனமாக இருந்தால் மொழியும் பலவீனமாகத்தான் இருக்கும். எந்த நுட்பமான விஷயத்தையும் நுட்பமாகச் சொல்லக்கூடிய தன்மையை மொழி பெற்றிருக்க வேண்டும். விஷயங்களின் வேறுபாடுகளைச் சரியாக எடுத்துக் காட்டும் லாகவமும் பெற்றிருக்க வேண்டும். ஒரு மொழி சிறப்புற்றுப் பயன்படக் கூடியதாக விளங்க வேண்டுமானால் மேற்கூறிய இரண்டு அம்சங்களும் அம்மொழியில் இருக்க வேண்டும். இந்த இரண்டு அம்சங்களையும் வளர்த்தால்தான் சுருக்கமாகவும் தெளிவாகவும் எந்த விஷயத்தையும் கூற முடியும். ஆனால் இந்த இரு பண்புகளும் ஹிந்தி மொழியில் கொஞ்சக்கூடக் கிடையாது என்பது பல பாஷைகளில் பயிற்சியடைந்த யாவரும் அறிந்ததே!

இந்த நிலையில் அரசியல் துறையில் மத்திய அரசாங்க நிர்வாகத்தில் அது ஆட்சி மொழியாவதற்குத் தகுதி வாய்ந்தது என்று ஹிந்திக்கு ஒரு உயர்ந்த அந்தஸ்தைக் கோருவது அசட்டுத்தனம். அதிலும் பிற மொழிகளைப் பேசுபவர்கள், தங்கள் அறிவு வளர்ச்சிக்கும் இலக்கிய ஆனந்தத்துக்கும், ஞான வளர்ச்சிக்கும், தாம் இதுவரையில் பெற்ற அறிவு வளர்ச்சி பின்னப்படாமல் தொடர்ந்து பெற்று வருவதற்கும் ஆங்கிலமும் சமஸ்கிருதமுமே வேண்டும் என்று கேட்கும்போது, அவர்கள் விருப்பத்தையும் எண்ணத்தையும் புறக்கணித்து ஹிந்தியை ஏற்றுக் கொள்ளச் சொல்வது வெறும் பேதைமை.

பாரத நாடு முழுவதையும் எடுத்துக் கொண்டு, பல பிரதேச மக்கள் இன்று எந்த மொழியில் நடைமுறை நிகழ்ச்சிகளைப் பற்றிய செய்திகள் முதலியவற்றைப் பரிமாறிக் கொள்கிறார்கள், அந்தப் பணியில் ஹிந்தி எந்த ஸ்தானத்தை அடைந்து நிற்கிறது

என்பதை அறிய விரும்பினால் தினப் பத்திரிகைகளின் விற்பனைக் கணக்கு மிகத் தெளிவாக எடுத்துக் காட்டிவிடும்! ஆங்கில தினசரிப் பத்திரிகைகளோடு ஹிந்திப் பத்திரிகைகளின் விற்பனைக் கணக்கை ஒப்பிட்டுப் பார்த்தால் ஆங்கிலம்தான் பல வேறு பிரதேசங்களுக்குப் பொது பாஷையாகப் பயன்பட்டு வருகிறது என்பதையும், ஹிந்திப் பத்திரிகைகளின் எண்ணிக்கை பரிதாபப்படக்கூடிய வகையில் மிகக் குறைவாக இருக்கிறது என்பதையும் காணலாம்.

ஹிந்தி என்ற பொதுப் பெயரில் அடங்கக்கூடிய வெவ்வேறு பிரதேச மொழிகளைத் தாய்மொழியாகக் கொண்ட எழுத்தறிவில்லாத பாமர மக்களின் ஜனத்தொகைக் கணக்கைக் காண்பித்து, 'இந்தியாவில் அவர்கள்தான் பெருவாரியான மக்கள்; ஹிந்தியே, ஆட்சிமொழியாக இருக்கவேண்டும்' என்று வாதிப்பதில் என்ன பொருள்?

இவ்வளவு பெரிய ஜனத்தொகையிருந்தும், ஹிந்தி தினசரிப் பத்திரிகைகள், ஆங்கிலப் பத்திரிகைகளின் விநியோக எண்ணிக்கைக்குப் பக்கத்தில்கூட வர முடியவில்லை. ஹிந்திப் பத்திரிகைகளைவிட இரண்டு மடங்கு அதிகமாக ஆங்கிலப் பத்திரிகைகள் விற்பனையாகின்றன! இரண்டு மடங்கு மக்களுக்கு ஆங்கிலத் தினசரிகள் தொண்டாற்றுகின்றன! சமீபத்தில் வெளியான புள்ளி விவரப்படி, ஆங்கில தினசரிகளின் விற்பனை எண்ணிக்கை பத்து லட்சத்துக்கு மேல் போகிறது. ஹிந்தி பத்திரிகைகளின் விற்பனை நான்கு லட்சத்துக்கும் குறைவு. ஹிந்தியை ஆட்சிமொழிச் சிம்மாசனத்தில் ஏற்றி வைத்துப் பத்து வருஷங்களான பிறகு இத்தகைய நிலைமை! ஏதொரு பலாத்காரமும் பிரசாரமும் இன்றி நடைபெற்று வரும் தினசரிப் பத்திரிகை விநியோகப் போட்டியில் ஹிந்தி தோற்றதைக் காண்கிறோம். தாமாகவே மக்கள் ஆங்கிலப் பத்திரிகைகளை வாங்கிப் படிக்கிறார்கள். இதுவல்லவோ சரியான பரீட்சை.

இந்தத் தோல்விக்குக் காரணம், ஹிந்தி பேசும் மக்களிடை நிலவும் எழுத்தறிவின்மை என்று பதில் சொல்லுவார்கள். ஆனால் எழுதவோ படிக்கவோ தெரியாதவர்களுக்காகவா ஒரு மொழியை அகில இந்திய ஆட்சி மொழி என்ற அந்தஸ்து கொடுத்துச் சிம்மாசனத்தில் ஏற்றுவது?

உண்மையில் ஆட்சிமொழி சம்பந்தமான கொள்கையை நிர்ணயிக்கும்போது, எந்த மொழி அரசாங்க நிர்வாக உபயோகத்துக்குப் பயன்படும் மொழி என்ற அடிப்படைக் கருத்தின் மீதுதான் நிர்ணயிக்க வேண்டும். அரசாங்க விவகாரங்கள், எந்த லிபியில் எந்த மொழியில் நடத்த வேண்டும் என்பதைப் படிப்பு வாசனையே இல்லாதவர்களின் தொகையை வைத்துத் தீர்மானிக்க விடக் கூடாது.

இன்றுள்ள நிலையில், ஹிந்தி மொழி ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்று வற்புறுத்துவது வெறும் பைத்தியக்காரத்தனம்தான். இந்திய ஜனநாயகத்தில் உண்மைக்கும் நியாயத்துக்கும் இடமுண்டானால் ஹிந்தி ஒரு பிரதேச மொழிதான் அதிலும் இரண்டாந்தர மொழிதான் என்று தீர்மானிக்க வேண்டும்.

பலமொழி பேசும் மக்கள், பல மதங்களைச் சேர்ந்த மக்கள், சுதந்திர சுயாட்சியின் கஷ்டங்களைக் கண்டு "நாம் எல்லாரும் ஒரு மொழி பேசுபவர்களாக இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும், நாம் எல்லாரும் ஒரு சமயத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்" என்றெல்லாம் எண்ணுவது இயல்புதான். நாம் கூட ஸ்காண்டிநேவியர்கள்போல உயரமாக இருக்க வேண்டும்; அமெரிக்கர்களைப்போல ஏராளமாக டாலர்கள் பெற்ற 'செல்வந்தர்களாக விளங்க வேண்டும், அல்லது அராபிய தேசம், ஈராக் தேசம் போல் இந்தியாவும் கல்லெண்ணெயில் வளம் பெற்றிருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்றெல்லாம் ஆசைப்படலாம். ஆனால் அந்த அர்த்தமற்ற ஆசைகளுக்கும், எண்ணங்களுக்கும் இடம் தரலாகாது. மாற்ற முடியாத விஷயங்கள் நமது சமுதாயத்தில் எவ்வளவோ இருக்கின்றன. அதை ஞாபகத்தில் கொண்டு அதற்குத் தகுந்தபடி வாழ்க்கையையும் அரசியல் கொள்கைகளையும் அமைத்துக் கொள்ள வேண்டும்.

மேலும் சென்ற இரண்டு நூற்றாண்டு காலத்தில் இந்தியாவில் நிகழ்ந்த சரித்திரத்தையும், அந்தச் சரித்திரம் விளைத்த பயன்களையும் நம்முடைய ஆசைக்கும் ஆணவத்துக்கும் இசைபட அழித்து விட முடியாது. எந்தத் தரமான கல் என்று பார்த்து அதற்குத் தகுந்த, அது தாங்கும்படியான சிற்பம்தான் செய்ய முடியும். சிற்பம் அழகாக இருக்க வேண்டும் என்று கல்லின் தரத்தை மறந்து வேலை செய்வது மடமையாகும். அனைத்துக்கும் மேலான உண்மை ஒன்று உண்டு. நியாயத்தைப் புறக்கணித்தால் நாட்டில் ஒழுங்கும் அமைதியும் குலையும்.

* * *

முப்பது வருஷங்களுக்கு முன்பே, சுதந்திரம் வந்து கொண்டிருப்பதை நான் பார்த்தேன். எதிர்காலத்தில் ஜனநாயகம் என்ற பெயரில் நடக்கவிருக்கும் பைத்தியக்காரத்தனத்தை அப்போதே கண்டேன். சுதந்திரத்தை விரும்பியவன் நான். அமைதியையும் விரும்புபவன். அதனால் என் தென்னக மக்களை எச்சரித்தேன்! பள்ளிக்கூடங்களில் அனைவரும் ஹிந்தி படிக்கவேண்டும் என்றேன். ஹிந்திப் பரீட்சையில் தேறாமற்போனால் அவர்கள் மேல் வகுப்புக்குப் போவதற்கு அது குந்தகமாக இராது என்றேன். என்னுடைய எச்சரிக்கை நல்ல முறையில் எடுத்துக் கொள்ளப்படவில்லை. தோல்வியுற்றது. அதனாலே இன்று என் நாட்டு மக்களை நான் துறந்துவிடலாமா?




மத்திய சர்க்கார் மந்திரிகள் சிலர் நாற்பது நாட்கள் யோகாப்பியாசப் பயிற்சி பெற்றனர் என்று ஒரு செய்தி கூறுகிறது.

என்றென்றும் நிலைக்கக் கூடிய பெருத்த அநீதிக்கு அவர்களை உட்படுத்திவிட நான் ஒப்புக்கொள்ள முடியுமா? முடியாது. ஆனபடியால் இந்த மூடத்தனமான பிடிவாதத்தை ஓயாமல் எதிர்த்துக் கொண்டே வருகிறேன். பெருவாரியான மக்கள் கூட்டத்துக்கு இழைக்கப்படும் அநீதி, முடிவில் பெரிய ஆபத்தில் கொண்டு சேர்த்துவிடும் என்று எனக்குத் தோன்றுகிறபடியால் எதிர்க்கிறேன்.

ஜனநாயகம் என்பது பெரும்பான்மையான மக்களின் ஆட்சி என்பது உண்மை. சிறுபான்மை மக்களின் அபிப்பிராயங்களைப் புறக்கணித்து பெரும்பான்மை மக்களின் அபிப்பிராயப்படி ஆட்சி நடத்தியே ஆகவேண்டும் என்பது உண்மை. ஆனால் அவ்வித புறக்கணிப்புக்கு வரம்புகள் உண்டு. புறக்கணிக்கும் முறையும் நியாயமாக நடைபெற வேண்டும்.

தன் பலத்தைக் கொண்டு தனி மனிதன் ஆட்சி நடத்துவதில் எவ்வளவு கஷ்டம் உண்டோ, அவ்வளவுகஷ்டம் ஜனநாயகத்திலும் உண்டு. பொதுஜன ஆட்சி ஆயிற்றே என்று ஜாக்கிரதையையும் நயத்தையும் புறக்கணித்தால் ஆபத்து விளையும். ஒரு பெரும் பிரதேசத்து மக்களுக்கு கஷ்டம் விளையக் கூடிய காரியங்களை மற்றப் பிரதேசத்தாரின் ஜனத் தொகையின் எண்ணிக்கையின் பேரில் செய்யலாகாது. இருநூறு வருஷங்களாகக் கற்றுப் பயிற்சியடைந்த ஆங்கில பாஷையைத் தள்ளிவிட்டுத் தம்முடைய பிரதேச பாஷையைப் பாரத நிர்வாகப் பாஷையாக அனைவரும் ஒப்புக்கொள்ள வேண்டும் என்று ஹிந்தி பிரதேசத்தார் வற்புறுத்துதல் கூடாது.

ஹிந்தி பேசும் சகோதரர்களே! ஏற்கனவே சொன்னதைத்தானே மீண்டும் சொல்கிறேன் என்று இதைத் தள்ளிவிட வேண்டாம். நான் உங்களுடைய பழைய நண்பன். என் சிநேகத்தை நன்றாக உணர்ந்திருக்கிறீர்கள். அப்படிப்பட்ட நண்பன் திரும்பத் திரும்பச் சொல்லுகிறானே என்று அவன் சொல்லும் யோசனைக்கு அதிக முக்கியத்துவம் அளித்துச் சிந்திக்க வேண்டுகிறேன். தென்னாட்டவர்களாகிய நாங்கள் வெள்ளை மனம் கொண்டவர்கள் ஆயினும் விஷயத்தை மூடி மறைத்துச் சொல்வதைப் புரிந்து கொள்ளக்கூடிய சாமர்த்தியம் எங்களுக்கு இல்லாமற் போகவில்லை. ஹிந்தி திணிப்பதை உங்கள் மனத்தில் உறுதிப்படுத்திக் கொண்டு, அதை எவ்வளவு தான் மூடி மறைத்துச் சர்க்கரை பூசி இனிக்கச் சொன்னாலும் அது எங்கள் உள்ளங்களை நோகத்தான் செய்கிறது. இந்த விஷயத்தில் தைரியமாக உங்கள் மனத்தை மாற்றிக் கொண்டு நியாயமாக நடந்து கொள்ளும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.



# மந்திரி சபைக் குழப்பம்

கொழும்பு, மே. 20உ.

இலங்கையில் இவ்வாரம் ஒரு பரபரப்பான சம்பவம் நடைபெற்றிருக்கிறது. சென்ற மூன்று வருடங்களாகப் பதவியில் இருந்த கூட்டு அரசாங்கம், இரு மந்திரிகளும் ஒரு உதவி மந்திரியும் ராஜிநாமா செய்தபடியால் கவிழ்ந்து விட்டது. இந்த ராஜிநாமாக்கள் சென்ற சில தினங்களாகவே எதிர்பார்க்கப்பட்டவைதான் என்றாலும் மந்திரி சபை நெருக்கடி படிப்படியாக உச்ச நிலையை அடைந்து கூட்டு அரசாங்கம் கலைந்தது மக்களிடையே விசேஷப் பரபரப்பை உண்டு பண்ணியுள்ளது. இனி அடுத்த படி என்ன? இதைத் தொடர்ந்துகாட்டில் குழப்பங்கள் ஏதாவது நடக்குமா என்றே ஒவ்வொருவரும் கேட்கிறார்கள். இலங்கை சம்பந்தப்பட்டமட்டில் மே மாதம் ஒரு பொல்லாத மாதம் போலிருக்கிறது. சென்ற வருட மே மாதத்தில்தான் ஒரு பயங்கரமான வகுப்புக் கலகம் நடைபெற்று நூற்றுக்கணக்கானவர்களுக்கு உயிர்ச் சேதம் ஏற்பட்டது. இந்த வருடம் மே மாதம் கூட்டு அரசாங்கம் கவிழ்ந்து விட்டது.

பண்டாரநாயகாவின் அரசாங்கம் வலது சாரிகளையும் புரட்சிவாத இடது சாரிகளையும் கொண்டதாக 1956-ம் ஆண்டில் அமைக்கப்பட்டது. சோஷலிஸ வேலைத் திட்டத்தில் ஒரு உடன்பாட்டுடன் இவ்விரு கட்சிகளும் ஒன்று சேர்ந்து சென்ற தேர்தலில் போட்டியிட்டு ஜயித்துக் கூட்டு அரசாங்கத்தை அமைத்தன. அதன்பின் நாட்டின் பஸ் போக்குவரத்து, துறைமுகம் ஆகியவை தேசிய மயமாக்கப்பட்டன. விவசாயிகளுக்கு விமோசனமளிக்க நிலச் சீர்திருத்தச் சட்டம் ஒன்றையும் கூட்டு அரசாங்கம் இயற்றியது. இம்மூன்று சோஷலிஸ நடவடிக்கைகளையும் அடுத்து கூட்டுறவு அபிவிருத்தி மத்திய பாங்கு மசோதா ஒன்றைப் புரட்சிவாத இடது சாரிக்கட்சித் தலைவரான உணவு மந்திரி பிலிப் குணவர்த்தன கொண்டுவந்தார். இதை மந்திரி சபையிலுள்ள பத்து வலது சாரி மந்திரிகளும் ஆதரிக்கத் தயாராயில்லை. "ஒன்று, நாங்கள் அரசாங்கத்திலிருக்க வேண்டும். அல்லது புரட்சிவாத மந்திரிகள் அரசாங்கத்திலிருக்க வேண்டும்" என்று வலது சாரி மந்திரிகள் பிரதமருக்கு இறுதி எச்சரிக்கை கொடுத்தார்கள். அவர்களைத் திருப்தி படுத்துவதற்காக ஆட்சேபணைக்குரிய கூட்டுறவு பாங்கு மசோதாவைத் தமது பொறுப்பில் எடுத்துக் கொள்ள உணவு மந்திரியிடமிருந்த கூட்டுறவு




பம்பாய் நகரத்திலும் சென்னை மாநகரிலும் வெற்றிகரமாக நடந்த எ. பி. ஸி. கண்காட்சி சென்ற 22-ம் தேதியிலிருந்து பெங்களூரில் ஒரு வார காலம் நடைபெறுகிறது. உத்தியான வனங்களும் பூங்காக்களும் நிறைந்த பெங்களூரில் லால்பாக் தோட்டத்தின் மத்தியில் அமைந்துள்ள கண்ணாடி மண்டபத்தில் பத்திரிகைகளின் வளர்ச்சியைப் பற்றிப் பல சித்திரப்படங்கள் மூலம் மக்களுக்கு விளக்கி வைக்கப்பட்ட இந்தக் கண்காட்சியில் கல்கி உள்பட நம் நாட்டு பத்திரிகைகள் பல கலந்து கொண்டன. கல்கி ஸ்டாலுக்கு விஜயம் செய்த மைசூர் பிரதமர் திரு பி. டி. ஜட்டியை கல்கி காரியாலயத்தின் விளம்பர மானேஜர் திரு வி. வைத்தியநாதனும், பம்பாய்க் காரியாலயப் பிரதிநிதி திரு ஆர். கண்ணனும் வரவேற்று கல்கியின் வளர்ச்சியைப் பற்றி எடுத்துரைத்தனர்.

இலாக்காவின் பொறுப்பைப் பிரதம மந்திரி எடுத்துக் கொண்டார். ஆனால் இந்த இலாக்கா மாற்றத்தை உணவு மந்திரி அனுமதிக்கத் தயாராயில்லை. உணவு மந்திரி பிலிப் குணவர்த்தனவும் அவரது கட்சியைச் சேர்ந்த கைத்தொழில் மந்திரி திரு வில்லியம் சில்வாவும் உதவி மந்திரி திரு லக்ஷ்மண் ராஜபக்ஷவும் மூன்று எம். பி.க்களும் அரசாங்கக் கட்சியிலிருந்து ராஜீனாமா செய்து விட்டனர். மூன்று வருட காலமாக ஸ்திரமின்றி கடமையாற்றி வந்த கூட்டுச் சர்க்கார் இவ்விதம் கவிழ்ந்து போயிற்று. இப்போது இலங்கை மந்திரி சபையிலுள்ளவர்கள் அனைவரும் வலது சாரியினர்களேயாவர். —ரஜனி

# என்ன சேதி?

## டாக்டர் லோகநாதன் வேண்டுகோள்

நாம் சென்ற வாரம் தலையங்கத்தில் "முக்கியமாகத் தென் ராஜ்யங்கள் ஒன்றுக் கொன்று பலப் பல விஷயங்களில் பிணைந்து நிற்கின்றன. செயற்கைத் தடுப்புக்கள் அமைத்து அல்லற்படுத்தாதிருக்கக் கோருகிறோம்!" என்று எழுதியிருந்தோம்.

நம்முடைய கருத்தையே பொருளாதார நிபுணர் டாக்டர் லோகநாதன் அவர்கள் சென்ற வாரம் சென்னை வர்த்தக சபையில் வெளியிட்டார். அவர் சொன்னதாவது:—

"தென்னகத்திலுள்ள நான்கு அண்டை ராஜ்யங்களும் ஏதோ ஒரு காரணம் அல்லது காரியம் பற்றிப் பல தடவை ஒன்றாக இணைந்து செயலாற்றியிருக்கின்றன என்பதைச் சரித்திரத்தில் பார்க்கிறோம். அதே போல் இப்பொழுதும் பொருளாதார முன்னேற்றத்தில் ஒன்றாக இணைந்து தொழிற்பட வேண்டும். அதற்கு வேண்டிய 'தென்னகம்' என்ற உணர்ச்சியும் லட்சியமும் கொள்ள வேண்டும்."

நாட்டின் வளர்ச்சியில் அக்கறையுள்ள நிபுணர் சொல்வதைச் செவி கொடுத்துச் சென்னை சர்க்கார் கேட்க வேண்டும்.

## கொச்சைத் தமிழ்

சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவர் டாக்டர் சேதுப்பிள்ளை அவர்கள் தமிழ்ப் பெரும் புலவர் என்பது உலகறியும். இரண்டாயிர ஆண்டுகளுக்கு முந்தைய சங்க இலக்கியம் போன்ற பேரிலக்கியங்களில் மூழ்கித் திளைப்பவர். ஆயினும் அவர் இன்றையத் தமிழர்கள் நாவில் நடமிடும் கொச்சைத் தமிழின் சுவையிலும் மனத்தைப் பறிகொடுப்பவர். அவர் "கொச்சைத் தமிழ்" என்ற தலைப்பில் வானொலி நிலையத்தில் பேசிய பேச்சிலிருந்து சில பகுதிகளை, இவ்விதழிலிருந்து தொடர்ந்து வெளியிடுகிறோம். இதை வெளியிட அனுமதி தந்த வானொலி நிலையத்தாருக்கும் பேராசிரியர் டாக்டர் சேதுப்பிள்ளை அவர்களுக்கும் நன்றி தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# ஆகாச வெடி

இந்திய கோவா ரக மாம்பழங்களையே ஐரோப்பிய நாடுகள் பெரிதும் விரும்பிக் கேட்கின்றன. —செய்தி

ஆனால், கோவாவை மட்டும் போர்ச்சுகலுக்கு அளிக்க மாட்டோம்!

★

இப்போதெல்லாம் எந்த மாணவன் பையில் பார்த்தாலும் முகம் பார்க்கும் கண்ணாடி வைத்துக் கொண்டிருக்கிறான். —குன்றக்குடி அடிகளார்

பையிலுள்ள கண்ணாடிகளை அடிகளார் எங்கே பார்க்கப்போகிறார் என்று மாணவர்கள் நினைத்திருக்க வேண்டும்!

★

காகஸஸில் 141 வயதுடைய கிழவர் ஒருவர், துப்பாக்கி சுடும் விளையாட்டில் இளைஞர் பலரைத் தோற்கடித்தார். —பத்திரிகைச் செய்தி

"குழந்தைகளுடன் என்ன விளையாட்டு?" என்று கேட்க இவருக்கு ஒரு பெரியவர் இல்லையா?

பலத்த சப்தத்தோடு அருகில் வெடிகுண்டு வெடித்தும் லெபனான் பிரதமர் அசையவில்லை. —செய்தி

மக்கள் இதைவிட சத்தம் போட்டும் அசையாத மந்திரிகளை இங்கேயே பார்க்கிறோமே!

★

திபேத்திலிருந்து வந்துள்ள அகதிகளில் சிலர் கோவேறு கழுதைகளுடன் வந்திருக்கிறார்கள். இவற்றை விலைக்கு யாரும் வாங்க வேண்டாம். —ஒரு அறிவிப்பு

அவிழ்த்து விட்டதும், இவை வந்த இடத்திற்கே ஓடிவிட்டால் வாங்குபவருக்கும் நஷ்டம்தானே?

★

இரண்டு மாதங்களாகச் சம்பளம் வராதா என்று எதிர்பார்த்து, காமகிரிப் பேட்டை, வட்டத் துவக்க ஆசிரியர்கள் அஞ்சல் நிலையத்துக்கு அலைந்த வண்ணமாயிருக்கிறார்கள். —ஒரு செய்தி

"அஞ்சேல்! வந்து விட்டது!" என்ற சொல் இப்போதாவது வந்ததா?

ஜூன் வெளியீடு!

பொன்னலூரி பிரதர்ஸாரின்

# தெய்வபலம்

பாரதிக்கு மேல் கனரில் (சரித்திரக் கதை)



டைரக்ஷன்
வசந்தகுமார் ரெட்டி



செம்ரியா




84

இடுக்கண் படினும்
இளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.

ஆபத்து காலத்திலும் அதனின்று தப்புவதற்காக இழிவான காரியங்களைச் செய்ய மாட்டார், துணிவான அறிவு அடைந்தவர்.

'ஆபத்துக்குத் தோஷமில்லை' என்பதை முனிவர் ஒப்பவில்லை.

நடுக்கு அற்ற காட்சியவர் - நடுமாற்றம் இல்லாத அறிவு பெற்றவர்; துணிவான அறிவு அடைந்தவர்.

* * *

எற்றென்று இரங்குவ
செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று.

'என்ன செய்து விட்டோம்' என்று செய்த பின் இரங்கச் செய்யும் தன்மையுள்ள காரியங்களைச் செய்யவே வேண்டாம். ஒரு வேளை மயங்கிச் செய்து விட்டாலும் தவறு உணர்ந்து பின்னராவது அத்தகைய காரியங்களைச் செய்யாதிருப்பது நல்லது.

இந்தக் குறள் இரண்டாம் அடிக்குப் பரிமேலழகர் உரை வேறு விதம். பின்னால் வருந்தத் தக்க காரியங்களைச் செய்ய வேண்டாம்; துணிந்து செய்து விட்டால் அதற்காகப் பின்னால் இரங்கித் தன் பழியைத் தானே தூற்றுவது நலனன்று, என்று பொருள் கூறுகிறார். இது முனிவருடைய கருத்து என்று ஒப்புக்கொள்ள இயலாது. ஒரு தடவை தவறு செய்த போதிலும், அந்தச் செயலின் குற்றத்தை அறிந்த பின்னராவது திரும்பச் செய்யாது ஒழிதல், செய்து விட்ட குற்றத்தினால் உண்டான நன்மையாகும் என்பதுதான் முனிவர் கருத்தாக இருந்திருக்க வேண்டும். தம்முடைய உரையின்படி 'அன்ன' என்ற பன்மைக்குச் சமாதானமும் பரிமேலழகர் சொல்லுகிறார். இரங்கும் வினைகள் பன்மை, ஆதலால் இரக்கமும் பலவாயின என்கிறார். இதுவும் சரியென்று தோன்றவில்லை.

ஈன்றாள் பசிகாண்பான்
ஆயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.

சான்றோர் பழிக்கும் வினையை எந்தச் சந்தர்ப்பத்திலும் எந்தக் கஷ்டம் வந்தபோதிலும் வேண்டாம் என்று சொல்வதற்காக, பெற்ற தாய் பசியால் வருந்துவதைப் பார்க்கும் வறுமையிலும் அதைச் செய்யாதே என்றார். வறுமையினால் படும் துக்கங்கள் எல்லாவற்றிலும் தாயின் பசியைத் தீர்க்க வகையில்லாத நிலையல்லவோ பெருந் துக்கம்: அதை வைத்துச் சொல்கிறார்.

* * *

கடிந்த கடிந்துஒரார்
செய்தார்க்கு அவைதாம்
முடிந்தாலும் பீழை தரும்.

நல்லோரால் தகாதன என்று கருதப் பட்ட செயல்களைத் தகாதன என்று செய்யாது ஒழிய வேண்டும். அவ்வாறன்றி ஏதேனும் ஒரு நன்மையை உத்தேசித்துத் தகாத காரியங்களைச் செய்து வெற்றி பெற்றதாக முதலில் எண்ணினாலும் பின்னால் அவை தீமை தருவதைக் காண்போம். நல்ல நோக்கம் கொண்டும் பிழையான முறைகளைப் பின்பற்றலாகாது.

* * *

சலத்தால் பொருள்செய் துஏமம்
ஆர்த்தல் பசுமண்
கலத்துள்நீர் பெய்துஇரீஇ யற்று.

சலத்தால் - தீய வினைகளால், ஏமார்த்தல் — ஏமம் ஆர்த்தல், அதாவது க்ஷேமம் தேடுதல்.

தீய வினைகளால் பொருள் செய்து, அது நமக்குக் காப்பாகும் என்று எண்ணுதல் பசுமண் கலத்தில் தண்ணீர் சேகரித்து வைத்தல் போலாகும். பசுமண் கலம்: சூளையில் சுட்டு எடுக்கப்படாத மண்கலம்.

# கட்டின தாலி



பத்திரனுடைய முழுப்பெயர் ராமபத்திரன். சீமைக்குப் படிக்கப் போனவன் பெயரைக் குறுக்கிக்கொண்டான். தகப்பனுர் அனுப்பிய பணத்தையெல்லாம் எப்படி எப்படியோ லண்டனில் செலவழித்து, படிக்கவேண்டிய படிப்பில் ஒன்றும் தேருமல் கடைசியாக ஊருக்குத் திரும்பிவர வெட்கப்பட்டு அங்கேயே ஒரு ஆபீஸில் வேலைக்கு அமர்ந்து விட்டான்.

ஆபீஸில் யோக்கியமாக வேலை செய்து வந்தான். ஆனால் அவனைப் பிடித்த குடிப் பழக்கம் சம்பாதித்த சொற்பப் பணத்தையெல்லாம் தின்று வந்தது. சீமைக்குப் போவதற்கு முன் தகப்பனுர் சநாதன முறையில் அவனுக்கு விவாகம் செய்து வைத்திருந்தார். தம் ஏழைத் தங்கையின் மகளை அவனுக்குக் கட்டிவைத்தார். அவனும் சம்மதித்தே சந்தோஷமாகவே முடிந்தது. மருமகள் எந்த விதத்திலும் குறைவில்லை. அழகு, குணம் எல்லாவற்றிலும் எப்படி இருக்க வேண்டுமோ அப்படியிருந்தாள். ஆனால் சீமையில் பத்திரன் வேலை செய்து வந்த ஆபீஸில் அவனைப் போலவே வேலை செய்து வந்த பல பெண்மணிகளில் ஒருத்திக்கும் அவனுக்கும் நட்பு ஏற்பட்டது. ஊருக்குத் திரும்பிப் போகும் யோசனை இனி இல்லை என்று தீர்மானித்ததும், வெள்ளைக்காரச் சிநேகிதியையே ஏன் விவாகம் செய்து கொள்ளக் கூடாது என்று எண்ணங் கொண்டான். அதற்கு அவளும் சம்மதித்தாள்.

**சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்**

அப்படியே முடிந்தது. கிறிஸ்து மதத்தில் சேர்ந்து விட்டு ஊரில் தன் மனைவிக்கு கோட்டுக அனுப்பி, அந்தப் பழைய பந்தத்திலிருந்து சட்டப்படி விடுதலை அடைந்த பின்னர் சீமையில் இஸொபெல்லுக்கும் அவனுக்கும் சட்டப்படி விவாகம் நடந்தது.

இஸொபெல்லும் மிக நல்ல பெண்தான். எந்த ஜாதி எந்தக் குலமானுல் என்ன? பெண் உள்ளங்களெல்லாம் ஒன்றே. கணவனிடம் மிகுந்த அன்புடன் வாழ்ந்தாள். பத்திரனை மணந்த பின் மெதுவாகக் குடிப்பழக்கத்திலிருந்து அவனை விடுவித்து விட்டாள். இது பேராச்சரியமாயினும் எப்படியோ இஸொபெல் தன் சாமர்த்தியத்தால் இந்த அற்புதத்தை நிறைவேற்றினுள். அதற்காக அவள் மிகச் சிரமப்பட்டும் இடைவிடாத ஊக்கமும் பொறுமையும் செலுத்தி வெற்றி பெற்றுள்.

பத்திரனும் இந்தக் காரணமாகவே அவளிடம் இருமடங்கு அன்பு கொண்டு இருவரும் மிகச் சந்தோஷமாகவும் சிக்கனமாகவும் வாழ்க்கை நடத்தினர்கள்.

* * *

சீமைக்கு அனுப்பப்பட்ட தம் மகனுடைய நடவடிக்கைகளையறிந்து தகப்பனுருக்குப் பெருங் கோபம் உண்டாயிற்று என்பதைச் சொல்லவேண்டியதில்லை. 'இனி இவன் என் மகன் அல்ல' என்று முடிவு கட்டி விட்டார். ராமபத்திரனுக்கு நான்கு வயதாவதற்குள் பத்மநாபய்யங்கார் தம் மனைவியை இழந்தார். மனைவி இறந்து மூன்ருவது ஆண்டில் மறு விவாகம் செய்து கொண்டார்.

பையன் ரொம்ப முன்னுக்கு வருவான் என்று ஏகப்பட்ட பணம் செலவழித்துப் படிப்பு நடத்தி இருபது வயதானதும் நண்பர் ராமகிருஷ்ணய்யருடைய தூண்டுதலின் மேல் பையனைச் சீமைக்கு மேல்படிப்புக்காக அனுப்பினர். இவ்வளவு செய்த பின் மகன் கெட்டுப் போனுல் எந்தத் தகப்பனுர்தான் கோபமடையமாட்டார்? விவாகம் செய்து கொண்ட மனைவியை — தம் சொந்த சகோதரியின் மகளை - நீக்கி விட்டொழித்து அதற்காக மதமும் மாறி வெட்கமில்லாமல் ஆங்கிலப் பெண்ணை விவாகம் செய்துகொண்டான் என்று தெரிந்த பின் அவருடைய கோபம் அருத சினமும் த்வேஷமுமாகவே உருக்கொண்டு விட்டது.

பத்மநாபய்யங்காரின் இரண்டாம் மனைவி ராமபத்திரனைச் சிறு வயதிலிருந்து தான் பெற்ற குழந்தையாகவே மிகப் பிரியமாகப் பார்த்து வந்தாள். 'சித்தி! சித்தி' என்று அவனும் அவளிடம் மிகப் பிரியமாகவே இருந்தான். இதையெல்லாம் பார்த்துப் பத்மநாப அய்யங்கார் அபார மகிழ்ச்சி அடைந்து வந்தார் அந்தக் காலத்தில். இப்போது கோபம் முற்றிப் போன பின் அந்த மகிழ்ச்சியெல்லாம் அடங்காத கோபமாகி விட்டது. மனைவி அவனைப் பற்றி ஏதேனும் இரக்கத்துடன் பேச ஆரம்பித்தால் அவர் பேரிலும் கோபிப்பார். தம்முடைய தங்கையின் மகளை எண்ணி எண்ணிக் கோபத்தை மேலும் மேலும் வளர்த்துக் கொண்டார். தங்கையின் புருஷன் ஏழை. அந்த ஏழைக் குடும்பத்தை இப்படிக் கெடுத்தானே என்று மகனுடைய குற்றம் மலை போல் உயர்ந்தது பத்மநாபய்யங்காருடைய உள்ளத்தில்.

• • •

சில வருஷங்கள் கழித்துத் தம் சொத்தை இரு பாகமாகப் பிரித்து ஒரு பங்கைத் தன் மனைவிக்கும் ஒரு பங்கை மருமகளான ராமபத்திரனுடைய மனைவிக்கும் எழுதி வைத்து ரிஜிஸ்டர் செய்து விட்டுப் பத்மநாப அய்யங்கார் ஸ்ரீரங்கத்தில் ஒரு சிறிய வீட்டில் வைதிக வாழ்வு நடத்த ஆரம்பித்தார். தனக்கு சிராத்தம் நடத்தி பிண்டம் போட ஒரு பையனை ஸ்வீகாரம் செய்து கொள்வதாக எண்ணினார். ஆனால் பந்துக்களில் அவருக்குஉகந்த சிறு பையனைக் காணவில்லை. அதனால் தாமதப்பட்டது.

நண்பர் ராமகிருஷ்ணய்யர் - அவர் காலேஜில் ஒரு ஆசிரியர்—தம் மகனையும் ராமபத்திரனுடன் சீமைக்கு அனுப்பியிருந்தார். அவன் நன்றாகப் படித்து ஒழுக்கம் கெடா



மல் ஐ. ஸி. எஸ். தேறி ஊருக்குத் திரும்பி வந்து உத்தியோகத்திலிருந்தான். முத்து — அதுதான் அவன் பெயர் — ராமபத்திரனுக்கு அத்தியந்த நண்பன். தன் சிநேகிதன் இப்படிக் கெட்டுப் போனானே என்று மிக வருத்தப் பட்டதுடன் சில வருஷங்கள் கழித்து ஒரு யோசனை செய்தான். தன் தகப்பனாரின் உபதேசத்தினாலல்லவோ ராமபத்திரனைச் சிறைக்கு அனுப்பி பத்மநாபய்யங்காருக்கு இந்த வியாகுலம் நேர்ந்தது; கலியாணம் செய்து கொண்ட மனைவியை அவமானத்துக்கும் தீராத துயரத்துக்கும் ஆளாக்கி விட்டான். இந்த விஷயங்களையெல்லாம் முத்து எண்ணி யெண்ணி யாரும் எதிர்பாராத ஒரு முடிவுக்கு வந்தான்.

முத்துவின் தகப்பனார் பல தடவை அவனுடைய விவாகத்தைப் பற்றி பிரஸ்தாபம் செய்தார். அவன் என்ன காரணமோ "பார்க்கலாம்!" என்று தள்ளிப் போட்டுக் கொண்டே வந்தான். இப்போது அவன் வயது முப்பத்தொன்று. ஒரு நாள் தன் தகப்பனாரிடம் தைரியமாகத் தன் எண்ணத்தை வெளியிட்டான்.

"இந்த அநாதைப் பெண் ராமபத்திரனுடைய மனைவியை அவன் தான் சட்டப்படி கழித்துவிட்டானே. அவளை நான் விவாகம் செய்து கொள்ள உத்தேசித்திருக்கிறேன்" என்று முத்து சொன்னதைக் கேட்டு ராமகிருஷ்ணய்யர் திடுக்கிட்டார்.

இதுவென்ன விபரீதம் என்று முதலில் அவர் நெஞ்சில் பேச்சையே அடக்கி விட்டது. பிறகு கொஞ்சம் கொஞ்சமாக மனம் இளகி முடிவில், "எனக்கு ஆட்சேபணையில்லை. பத்மநாபய்யங்காரும் அவருடைய பந்துக்களும் ஒப்புவார்களா?" என்றார்.

சில நாட்கள் கழித்து விஷயம் பத்மநாபய்யங்காரிடம் பிரஸ்தாபிக்கப்பட்டது. அவரும் "இது வென்ன ஒன்றும் காதில் கேட்காத சமாசாரமாக இருக்கிறது?" என்று முதலில் இது முடியாத காரியம் என்றார். பிறகு தம்முடைய மகன்மேல் உண்டாயிருந்த கோபமே முத்துவின் யோசனைக்குப் பயன்பட்டது. "ஏன் கூடாது? என் மகன் செய்த துரோகத்துக்கு இது ஒரு பரிகாரம்தான்" என்று எண்ணலானார்.

ஒரு மாதம் கழித்துத் தம் தங்கையிடம் விஷயத்தைப் பத்மநாபய்யங்காரே சொன்னார். "இந்த குடும்பத்தில் ஏற்பட்ட பழி எப்படியாவது தீர்வதற்கு வழி ஏற்பட்டால் நல்லது தானே? சாஸ்திரமும் சம்பிரதாயமும் எல்லாம் கடலில் போட்டாயிற்றே. இனி அதைப் பற்றி என்ன தடை? சட்டப்படி கமலம் ஏன் ஒரு குடும்பத்தில் யோக்கியமாக இருக்கக் கூடாது. ராமகிருஷ்ணய்யர் குமாரன் நல்ல வேலையிலிருக்கிறான். இன்னும் பெரிய வேலை கிட்டப் போகிறது. ஜாதிக் கட்டுப்பாடுகள் அவனைத் தீண்டா. இவள் வயதும் அவன் வயதும் இந்தக் காலத்து விவாகத்துக்குச் சரியாகத்தான் இருக்கிறது. தன்னுடைய நண்பனுடைய துர்நடவடிக்கைக்கு இது ஒரு மருந்தும் பிராயச்சித்தமுமாக இருக்கும் என்று பெருந்தன்மையாக முத்து இந்த யோசனை செய்திருக்கிறான். ஒப்புக்கொள்ளலாம்" என்று பத்மநாபய்யங்காரே சமாதானங்கள் எல்லாம் சொல்லி அந்தக் குடும்பத்தின் சம்மதத்தைப் பெற்றார்.

எல்லாம் முடிந்தது என்றிருந்தான் முத்து.

"கமலத்தினிடம் சொன்னீர்களா?" என்று கேட்டான்.

"அவள் சம்மதிப்பதற்கு என்ன சந்தேகம்? நாம் எல்லாரும் முடித்து விட்ட விஷயத்தில் அவள் தடை செய்ய மாட்டாள். தவிர, இதைவிட அவளுக்கு என்ன நல்ல பாக்கியம்? நரகத்தினின்று நீ அவளை மீட்டுவிட்டாய்" என்று பத்மநாபய்யங்கார் முத்துவை ஸ்தோத்திரம் செய்தார்.

"நானே அவளைக் கேட்டு முடிக்கிறேன்" என்றான் முத்து.

* * *

"ஒரு நாளும் முடியாது. அவர் உயிரோடிருக்கும் வரையில் நான் வேறு ஒருவரை மனத்தில்கூட எண்ண மாட்டேன். அவர் எத்தனை பேரை, யாரைக் கட்டிக் கொண்டாலும் அவர் கட்டின தாலி என் கழுத்தில் இருக்கிறது. இது முடியாத காரியம்" என்று கமலம் உறுதியாக மறுத்துவிட்டாள். ராமகிருஷ்ணய்யரும் பத்மநாபய்யங்காரும் எவ்வளவு சொல்லியும் கமலம் கேட்கவில்லை, ஒரே உறுதியில் நின்

றான். எல்லாரும் வருத்தத்தில் மூழ்கினார்கள். முத்து தோற்றான்.

பத்மநாபய்யங்கார் மனைவி மட்டும் "அவன் சொல்லுவது சரிதானே?" என்று கமலம் மறுத்து விட்டதைப் பெரிதும் பாராட்டினாள்.

* * *

"என் வாழ்க்கை முற்றிலும் நாசமாயிற்று. என்னைப் படுகுழியிலிருந்து மீட்ட என் கண்மணி இஸொபெல் நேற்று ஆஸ்பத்திரியில் உயிர் நீத்தாள். தகப்பனார் என்மேல் கோபித்த சாபம் இது. நான் துரோகிகளுக்குள் துரோகி. பகவான் என்னைக் கைவிட்டு விட்டார்" என்று ராமபத்திரனிடமிருந்து சித்திக்கு எழுதிய கடிதத்தில் இருந்ததை அவன் பத்மநாபய்யங்காருக்குக் காட்டினான். அவனுக்கு மட்டும் ராமபத்திரன் அவ்வப்போது கடிதம் எழுதுவான்.

"கமலத்தை முத்துவின் யோசனையை ஒப்புக் கொள்ளச் சொல். இது என் விருப்பம். என் கோரிக்கை. என் அன்பான ஆசி என்று அவளுக்குச் சொல்" என்றும் எழுதியிருந்தான்.

இந்தக் கடிதத்தைக் கண்டு பத்மநாபய்யங்கார் மனமும் கொஞ்சம் இளகிற்று. பையன் மேல் இருந்த கோபம் கரைய ஆரம்பித்தது.

* * *

"மாமா! நான் சீமைக்குப் போக வேண்டும். எப்படியாவது ஏற்பாடு செய்யுங்கள்" என்று வேண்டிக்கொண்டாள் கமலம். "என்னத்துக்கு? இது வென்ன காரியம்? அந்தத் துஷ்டனைப் பற்றி இன்னும் ஆசைவைத்திருக்கிறாயே?" என்றார் பத்மநாபய்யங்கார்.

"இல்லை, மாமா! எனக்கு பகவான் வாக்குக் கொடுத்திருக்கிறார். நான் சென்று எப்படியாவது சம்மதிக்கச் செய்து மறுபடியும் ராமபத்திரனுடன் வாழ்க்கை நடத்தப்போகிறேன்" என்றாள் கமலம்.

* * *

பிளேனில் முத்துவும் கமலமும் சீமைக்குச் சென்றார்கள். இருவரும் ராமபத்திரனைச் சந்தித்தார்கள். "இந்தப் பாவியை நீ இன்னும் ஒரு பொருளாக மதிக்கிறாயா?" என்றான் ராமபத்திரன்.

கமலம் அழுது அவன் காலில் வீழ்ந்தாள். அவனும் அவளை எடுத்துக் கட்டிக் கொண்டான்.

இஸொபெல்லின் படத்தைக் காட்டி அவள் குணங்களையும் சாமர்த்தியத்தையும் கதையாகச் சொன்னான் ராமபத்திரன்.

"மாண்டு விழ இருந்த என்னை மாயாமல் காத்த தெய்வம் இவள்" என்றான் ராமபத்திரன்.

கமலம் இஸொபெல்லின் படத்தைக் கண்களில் ஒத்திக்கொண்டாள்.

"என் புருஷனை எனக்காகக் காப்பாற்றிய தெய்வமே இவள்!" என்று படத்தைப் பல தடவை கண்களில் ஒத்திக்கொண்டாள்.

* * *

ஒரு வருஷம் முடிந்த பின் சட்டப்படி சீமையிலேயே கமலத்துக்கும் ராமபத்திரனுக்கும் புது விவாகம் ரிஜிஸ்டர் ஆயிற்று. முத்து சாட்சிக் கையெழுத்திட்டான். பத்மநாபய்யங்காரும் ஆசீர்வாதக் கடிதம் எழுதினார். ராமபத்திரனும் கமலமும் ஊருக்குத் திரும்பினார்கள்.



# பாத யாத்திரை



வேலையின் விளைவாக 8 மணிநேரம் நாற்காலியின் வடிவமும், ஓய்வின் விளைவாக 9 மணி நேரம் கட்டிலுக்கேற்ற வடிவமும் பூண்டு உயிர் வாழுகிறது கந்தையாவின் உடம்பு. மீதியிருக்கும் 7 மணி நேரத்தில் அது 'என் என்னுல் என்னையாக' ஏதும் செய்துவிடுவதாகச் சொல்ல முடியாது—உட்கார்ந்து சாப்பிடும் அபிநயம் நீங்கலாக.

அன்று மாலை வழக்கப்படி தமது கார்யாலய நாற்காலியிடமிருந்து சமாதி நீங்கியபின், அவர், புதுமண வாழ்வு புகுந்த நண்பரொருவர் வழங்கிய சிற்றுண்டியை வயிற்றில் இறக்குமதி செய்துவிட்டு, நண்பர்கள் புடைசூழ பஸ் க்யூவைச் சரணடைந்தார். ஒரு மணி நேரம் கழிந்தும் பஸ்ஸே தென்படாததால் அவர் உடம்புக்கு நெடுநேரம் லாந்தல் கம்பத்தின் வடிவம்!

"இதைவிட நடந்தே போய்விடலாம், நடராஜா!" என்று குரல் கொடுத்தார் கந்தையாவின் மேலதிகாரி சுந்தரமூர்த்தி. ஆனால் இப் 'பாத யாத்திரைப் பிரேரணை' நடைமுறை'க்கு வருவதற்கு முட்டுக்கட்டையாக, கந்தையாவின் கால்கள் தயங்கின. சுந்தரமூர்த்தி சொன்னார்:

"ஒங்க காலிலே தெம்பு இல்லாமலில்லே, கந்தையா. இருக்கற தெம்பை உபயோகிக்கறதில்லே நீங்க. உங்களைச் சொல்றதைவிட, மனுஷனை சோம்பேறியாக்கிட்ட இந்தப் பாழும் பஸ், ரெயில், ஆட்டோரிக்ஷா நாகரிகத்தைத்தான் கொறை சொல்லணும்; இன்னைத் தேதிக்கி இந்தப் புண்ணிய பூமியிலே நடந்தாலே 'பாத தாமரைகள் நோந்திடுமோ'ன்னு ஆயிப்போச்சு மனுஷன் கதி!"

"சொன்னதும் நெனப்பு வருதே. எங்க சங்கத்திலே ஒரு தரம் 'பாத யாத்திரை'ங்கற தலைப்பிலே பிரசங்கம் செய்யவேண்டிய புண்ணியவான் ஒருவர் மூணு மணி நேரம் லேட்டா வந்து பஸ் கிடைக்காததைச் சாக்காகச் சொன்னார்!" என்று கூறி, க்யூவில் கலகலப்பை உண்டுபண்ணினன் நையாண்டி நடராஜன்.

"புறப்படலாமா?" என்று நெருக்கினர் மேலதிகாரி சுந்தரமூர்த்தி; கந்தையாவோ "... வந்து ... தம்ப வீட்டிலே பொன்சாதிக்கு உடம்பு சொகமில்லே, அதனலே, போனதும் நானே சமையல் செய்தாகணும். 8 மணி நேரம் வேலை செய்துட்டு 2 மைல் நடந்த பெறவு எப்படி நான் ...?" என்று இழுத்த வண்ணம் தகரானர்.



DL/P.1A-19 TM

"நடையை வேகமாப் போடுங்க, கந்தையா. உங்க காலிலே தெம்பு இல்லாமலில்லே, பால் சாப்பிடற பழக்கமுண்டா ?" என்றார் சுந்தரமூர்த்தி.

"எருமைப் பால் சாப்பிடுகிறாரோ ஒருவேளை, இவ்வளவு சோம்பேறியாக இருக்க? என்று இடைவெட்டினான் நையாண்டி. கந்தையா சொன்னார் :

"எங்க வீட்டுக்கு ஒரு சைக்கிள்தான் வந்து பால் கொடுத்துட்டுப்போகுது!"

எதையோ திடும்மென்று நினைத்துக்கொண்ட மேலதிகாரி "ஒரு விஷயம், நடராஜ். நம்ப கந்தையாவுக்குக் கல்யாணம் ஆனபோது நம்ப ஆபீசுக்காரங்க அவருக்கு ஒரு சைக்கிளைப் பரிசாக் கொடுத்திருக்கணும் . . ." என்றார்.

"கரெக்டு! அதை விட்டுவிட்டு ஒரு வெள்ளித் தட்டையும் ஒரு கட்டிலையும் கொடுத்த பலன், மனுஷன் தினமும் சாப்பிடறான், தூங்கறான்! சைக்கிளைக் கொடுத்திருந்தோம்னா ஆபீசுக்காவது நேரத்திலே வருவாரில்லே, பஸ் மேலே பழியைப் போடாமே!" என்று நடராஜன் சளசளத்துவிட்டுக் கந்தையாவிடம் திரும்பி "இப்பத்தான் காண்டிபிடிக்கக் கிளம்பிவிட்டீங்களே, கந்தையா, ஆகார விஷயத்திலேயாவது தூங்கிடாம முழிப்பா இருங்க!" என்றான்.

"மெய்தான், கந்தையா. நீங்க சாப்பிடற சாப்பாட்டுலே நல்லநல்லதா நாலுவித சத்தும் வைட்டமின்களும் கலந்திருந்தா, உடம்புலே தெம்பில்லேங்கற பல்லவிக்கே இடமிருக்காது" என்றார் சுந்தரமூர்த்தி.

"மருந்துக் கடைக்காரர் கொடுத்தால்தான் நமக்கு வைட்டமின் என்கிறதில்லே. காய்கறிக் கடைக்காரரிடமும் கிடைக்குது, பலசரக்குக் கடைக்காரரிடமும் கிடைக்குது!" என்றான் நையாண்டி.

"பலசரக்குக் கடைக்காரரிடமா ?" கந்தையாவின் முகத்தில் கேள்விக் குறி!

"சரியாப் போச்சு! பலசரக்குக் கடைக்காரரிடம் கிடைக்காதா 'டால்டா' வனஸ்பதி?" என்று எதிர்க் கேள்வி போட்டுக்கொண்டு விளக்கலானார் சுந்தரமூர்த்தி: "எல்லாவித சமையலுக்கும் உபயோகப்படற உயர்தர தாவரக் கொழுப்பான 'டால்டா'விலே வைட்டமின்கள் சேர்க்கப்பட்டிருக்கு—நோய்நொடிகளை எதிர்த்து நிற்கத் தெம்பு தருகிற வைட்டமின் ஏ, பல்லுக்கும் எலும்புக்கும் வலிவு தருகிற வைட்டமின் டீ, இரண்டும் சேர்க்கப்பட்டிருக்கு!



"அப்போ நான் கால் ராத்தல் வாங்கிப் பார்க்கட்டுமா ?" என்று கேட்டுக்கொண்டார் கந்தையா. மேலதிகாரி சிரித்துவிட்டுக் கூறினார்: "அப்படியெல்லாம் கிடைக்காது கந்தையா. சீல் செய்த டின்களிலேதான் கிடைக்குது 'டால்டா' பிராண்ட் வனஸ்பதி. தூசி படிய, ஈ மொய்க்க, திறந்த டின்களிலே விற்கக்கூடியதல்ல 'டால்டா'. 'டால்டா'ன்னு சொல்லி எதையாவது கொடுத்தனுப்பக் கூடாதுன்னு கடைக்காரன்கிட்ட கண்டிப்பா சொல்லிப்புடுங்க. டின் மேலே பேரீச்ச மர அடையாளம் இருக்கான்னு பார்த்து வாங்குங்க!" சிந்தனைப் பாதையில் நடை போட்டது கந்தையாவின் மனது!

"எங்கேய்யா போயிகிட்டே இருக்கீங்க, கந்தையா. வீடு வாசல், சிக்குப் பொன்சாதி, சமையல் எல்லாத்தையும் தாண்டி எங்கே நழுவறீங்க ?" என்ற நையாண்டி நடராஜனின் எக்காளக் குரலும், இரும்புப் பிடியும் கந்தையாவை சிலிர்க்கச் செய்தன; இதென்ன ஆச்சரியம்! வீட்டு வாசலுக்கே அல்லவா வந்துவிட்டார், எப்படி நடந்துவிட்டார் இரண்டு மைல்களை! அந்த உற்சாகத்திலே, "எங்கே போகிறேனா ? கடைக்குப் போகிறேன் ஒரு 'டால்டா' டின் வாங்க, இது தெரியவில்லையா!" என்று வெடுக்கென்று கந்தையா அந்த நையாண்டியின் நாக்கை அடக்கியபோது ஆளே மாறிப்போயிருந்தார்: பேச்சிலே ஒரு துடுக்கு, நடையிலே ஒரு மிடுக்கு!

# வீரபாண்டியக் கட்டபொம்மன்

நம் தமிழ் நாட்டில் கட்டபொம்மனைப் பற்றி அறியாதவர்களே இருக்க மாட்டார்கள். அதுவும் பாரத நாடு சுதந்திரம் பெற்ற பிறகு கட்டபொம்மன் புகழ் அதிகம் பரவிவிட்டது. அந்நிய ஆட்சியை எதிர்த்து முதல் முழக்கம் செய்த வீரன் அல்லவா அவன்?

மேலும், கட்டபொம்மன் புகழ் அதிகமாகப் பரவுவதற்குத் தேவையான முயற்சிகளை இன்னும் பலர் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். 'கட்டபொம்மன் கொள்ளைக்காரன்' என்றும், 'தேச விடுதலைக்கு முதல் முழக்கம் செய்த வீரன் அவன் அல்ல' என்றும் ஓயாமல் எழுதி, கட்டபொம்மனுக்குக் களங்கம் கற்பிக்க முயன்று, மறைமுகமாகக் கட்டியங் கூறி வருகின்றனர்.

சிவாஜி நாடக மன்றத்தாரின் வீரபாண்டியக் கட்டபொம்மன் நாடகம் பார்த்த போதே எனக்கு மெய்சிலிர்த்தது. வீர உணர்ச்சியையே பிரதானமாகக் கொண்ட இந்நாடகத்துக்கு இருக்கும் பிரமாதமான வரவேற்பைக் கண்டு மனம் பூரித்துப் போனேன்.

ஆனால் அந்த வீரன் வரலாறு படமாக்கப் பட்டால் எப்படியிருக்குமோ என்ற பயம் என்னுள்ளத்தில் எழுந்தது. நூறு நாடகங்கள் நடத்திப் பல்லாயிரம் மக்களால் பார்க்கப்பட்ட ஒரு நாடகம் சினிமாப் படமாகி வந்து வெற்றிபெற முடியுமா என்ற சந்தேகம்தான் பயத்துக்குக் காரணம். ஆனால் படம் பார்த்ததும் அது வீண் ஐயம் என்பது உறுதியாகிவிட்டது. நாடகத்தைவிடப் பன்மடங்கு சிறப்போடு பல விசேஷக் காட்சிகளோடு கட்டபொம்மன் படம் வெளிவந்திருக்கிறது.

புதுப்படம் எது வந்தாலும், திரைக் கதையைப் பற்றிக் கொஞ்சம் குறிப்பிட வேண்டிய அவசியம் ஏற்படும். இந்தப் படத்துக்கு அது அவசியமில்லை.

கட்டபொம்மனாக வரும் சிவாஜிகணேசன் கட்டபொம்மனுக்கே புகழ்தேடித் தரும் வகையில் அபாரமாக நடித்திருக்கிறார். வீரம் ததும்பும் அவர் பேச்சும், தீரம் மிகுந்த அவர் பார்வையும், நடையும் மிகவும் பொருத்தமாயிருக்கின்றன. அவர் நடிப்பில், குடிமக்கள்மீது கட்டபொம்மன் கொண்டிருந்த பரிவும், தேச பக்தியும், அவன் கடைப்பிடித்து வந்த பண்பும், அவனது சகோதர வாஞ்சையும், குழந்தைப் பாசமும், முருக பக்தியும், பிரமாதமாக வெளிப்படுகின்றன.

ஊமைத்துரையின் மகளாக வரும் பேபி காஞ்சனா வீரபாண்டியனையே தன் கண்ணீரால் கரைத்து விடுகிறாள். நல்ல நடிப்பு.

கட்டபொம்மன் கதையில் ஒரு குறையுண்டு. சினிமாவுக்கு இன்றியமையாத காதல் காட்சிகளுக்கு அந்தக் கதையில் இடம் இல்லை. வீரமுழக்கம் செய்யத்தான் அவகாசம் இருந்ததே தவிரக் கட்டபொம்மனுக்குக் காதலிக்க அவகாசம் இருந்ததாகத் தெரியவில்லை. சிவாஜி நாடக மன்றத்தாரின் கட்டபொம்மன் நாடகத்தில்கூட இந்தக் குறை சற்று உள்ளத்தை உறுத்தியது. ஆனால் பத்மினி பிக்சர்ஸாரின் "வீரபாண்டியக் கட்டபொம்மன்" படத்தில் அந்தக் குறை பரிபூரணமாக நீங்கி விட்டதுமல்லாமல், மிகப் பொருத்தமாகவும் அமைந்திருக்கின்றன காதல் காட்சிகள்.

காதலிக்கவும் தகுந்த ஜோடியாகப் பார்த்துப் போட்டிருக்கிறார்கள்.

தளபதி வெள்ளையத் தேவனாக ஜெமினி கணேசனும், அவனது வீர பத்தினி





வெள்ளையம்மாளாகப் பத்மினியும் வருகிறார்கள் என்றால் போதும். தமிழ்ப் பட ரசிகர்கள் அவர்களது காதல் காட்சிகளின் தரத்தைச் சரியாக அவர்களே ஊகித்து விடுவார்கள்!

வெள்ளையம்மாளையுடைய வெள்ளையத் தேவன் அவள் வளர்த்த முரட்டுக் காளையுடன் பொருது பணியவைக்கும் காட்சி மிக நன்றாகப் படமாக்கப் பட்டிருக்கிறது. சாதாரணமாகத் தமிழ்ப் படங்களில் இத்தகைய வம்புச் சண்டைகளுக்குப் போகும் வழக்கம் இல்லை! அப்படியே துணிந்து போனாலும் ஒரு முறை 'க்ளோஸப்' காட்சியில் முக்கிய நடிகனையும் காளையையும் காட்டிவிட்டு, பிறகு அதைத் தொலைவுக் காட்சியாக்கி, நடிகனுக்குப் பதிலாக மாட்டுக்காரனை வைத்துக் கொண்டு மேற்படி காட்சியை ஜமாய்த்து விடுவார்கள்! ஆனால் இந்தப் படத்தில் காளைச் சண்டையைத் தத்ரூபமாகப் படமெடுத்திருக்கிறார்கள். அந்தக் காட்சியில் ஜெமினி கணேசனும், காளையும் கரகோஷம் பெற்று விடுகிறார்கள்.

வீரம், தீரம், காதல் எல்லாக் கட்டங்களிலும் ஜெமினி கணேசன் பாராட்டத் தக்க முறையில் நடித்திருக்கிறார். வெள்ளையத் தேவன் பாகம் அவருக்கு மிகவும் பொருத்தமாயிருக்கிறது. வெள்ளையம்மாளின் கண்ணீரில் கரைந்து விடாமல் அவளை உதறிவிட்டுப் போருக்குச் செல்லும் இடத்தில் ஜெமினி கணேசனின் நடிப்பு உயர்ந்து விடுகிறது.

பானர்மன் துரையாக வரும் ஜாவர் சீதாராமன், சிறிது நேரமே வந்தாலும் தாம் சிறந்த நடிகர் என்பதை நிரூபித்து விடுகிறார்.

துள்ளித்திரியும் புள்ளிமான் போல வரும் பத்மினி இந்தப் படத்தின் வெற்றிக்குப் பெரும் அளவில் காரணம் என்றால் மிகையாகாது. போர், சதி, படையெடுப்பு என்று சதா பீதிகரமான விஷயங்களே நிறைந்திருக்கும் கட்டபொம்மன் படத்தில் பத்மினி வரும் காட்சிகள் தென்றலின் இனிமையையும், வீணையின் நாதத்தையும், மலரின் மணத்தையும் பரப்பிக் கடைசியில் கண்ணீர் வெள்ளத்திலும் தள்ளிவிடுகின்றன. "போகாதே போகாதே என் கணவா" என்று டி. வி. ரத்னமாலா பாடும் பாட்டுக்கு ஏற்ற நடிப்புடன் பத்மினி கண்ணீர் விடுவதைக் காணும்போது நம்மையும் அறியாமல் கண்ணீர் பெருகுகிறது.

கட்டபொம்மன் தேவியாக எஸ். வரலட்சுமி வந்து நன்றாய் நடித்திருப்பதுடன் தமது சொந்தக் குரலில் அழகாகப் பாடியும் இருக்கிறார்.

வெள்ளையம்மா, ஜக்கம்மா, சுந்தரவடிவு மூவரும் போடும் புதிர்கள் நன்றாயிருக்கின்றன. கு. மா. பாலசுப்ரமண்யத்தின் பாடல்கள் நன்றாயிருக்கின்றன. சுந்தரவடிவாக வரும் ராகினி சுந்தர வடிவமாகவே திகழ்கிறார்.

சக்தி கிருஷ்ணசாமி கட்டபொம்மனுக்குக் கதை - வசனம் எழுதியிருக்கிறார். கதையின் தரத்துக்கு ஏற்ப வசனம் சக்தியோடு அமைந்திருக்கிறது.

கும்பினியாரும் கட்டபொம்மனும் போரிட்ட கட்டங்கள் தத்ரூபமாயிருக்கின்றன. நிஜ ராணுவத்தை உபயோகித்துப் போர்க் காட்சிகளுக்கு உயிர் ஊட்டியிருக்கிறார்கள்.

பி. ஆர். பந்துலுவின் டைரக்ஷன் நன்றாயிருக்கிறது. சிறந்த நடிகரும், டைரக்டருமான அவரே இந்தப் படத்தைத் தயாரித்திருக்கிறார். முழு நீள வர்ணப்படமான "வீரபாண்டியக் கட்டபொம்மன்" நடிப்பில் சிறந்த, கவர்ச்சி நிறைந்த, உணர்ச்சியில் உயர்ந்த படம்.




## 39. பிரமன் புரிந்த மாயை

"பாம்பின் வாயிலிருந்து தாம் தப்பியதை ஆயர்பாடிச் சிறுவர்கள் தங்கள் பெற்றோரிடம் ஓராண்டு சென்ற பிறகு சொன்னார்கள்" என்றார் சுகர்.

"இதென்ன விந்தை? இதுவும் ஹரியின் மாயையா? ஒரு வருடம் அவர்கள் ஏன் நடந்ததைச் சொல்லாமல் சும்மா இருந்து விட்டார்கள்? முனிவரே! கண்ணனுடைய கதையைக் கேட்கும் நானே பாக்கியசாலி. மீண்டும் கண்ணன் பெருமையை எனக்கு எடுத்துரைக்க வேண்டும்" என்று மன்னவன் முனிவரிடம் வினவினான்.

சுகர் மேலும் பாகவதக் கதையைப் பரீக்ஷித்துக்கு உரைக்கலானார்:

"அரசே! நன்கு வினவினை. பரமன் பெருமையை ஓயாது செவியுற்று அதன் பின் நீங்கள் கேட்கும் கேள்விகள் பொருத்தமாக இருக்கின்றன. நல்லோர் நாடுவது நிகரற்ற பொருளே. இளைஞருக்குப் பெண் பேச்சில் எவ்வளவு ஆசையோ, அவ்வளவு ஆசை தொண்டருக்குத் திருமால் பேச்சில். நான் கூறப் போகும் ரகசியத்தைக் கவனித்துக் கேளுங்கள்.

"தன்னுடைய நண்பர்களையும் கன்றுகளையும் அசுரனிடமிருந்து காப்பாற்றி யமுனைக் கரைக்கு அவர்களை அழைத்து வந்த கண்ணன் அவர்களிடம் 'நண்பர்களே! இந்த நதிக்கரை மெல்லிய மணல் பாய்ந்து, மரங்களால் சூழப் பெற்று, மலரும் தாமரையை நாடிச் செல்லும் வண்டினத்தின் ரீங்கார எதிரொலி நிரம்பியதாய் விளங்குகிறது. நமது பகல் உணவை இவ்விடத்தில் உட்கொள்வோம். பொழுது கடந்து வருகிறது. நாமும் பசியால் வருந்துகிறோம். கன்றுகள் அருகிலே நீர் அருந்திப் புல் மேய்ந்திருக்கட்டும்' என்றான். பையன்களும் சரி என்று ஒப்புக்கொண்டு தங்கள் உணவு வைத்திருந்த பைகளை அவிழ்த்தார்கள்.

கண்ணன் நடுவிலே நிற்கச் சுற்றி அனைவரும் வட்டமிட்டு உட்கார்ந்து கொண்டார்கள். அந்தச் சுந்தரத் தோற்றம் தாமரையின் காயைச் சுற்றி இருக்கும் இதழ்களென விளங்கியது. இதைச் சுகர் அழகான ஒரு செய்யுளில் மன்னவனுக்கு எடுத்துரைத்தார். பாகவதத்தில் எத்தனையோ காட்சிகளை ஓவியம் தீட்டியது போல் நம் கண்முன் நிற்குமாறு வியாசர் பாடியிருக்கிறார். அவைகளுள் கண்ணன் தன் தோழர்களோடு கானகத்தில் அன்னம் அருந்திக் கொண்டு சிரிக்கச் சிரிக்கப் பேசியது ஒன்று.

**" மடியிற் செருகிய குழலழகும்,**
**கை அடியிற் செருகிய கொம்பழகும்**
**இடகரமேற் தாங்கிய தயிரமுதும்,**
**விரலிடையே செருகிய கனிவகையும்**
**இடைச்சிறுவர்கள் சூழ்ந்த மரத்தின்**
**நடுவே நின்று நகைத்தழகும்,**
**தேவர் கண்டு வியப்புறவே**
**பாலகரோடாடின பேச்சழகும்,**
**கண்ணப் பெருமான் கோபாலகனாய்**
**வந்தாடிய விந்தைக் கிணையிலையே !"**

இவ்விதம் கண்ணன் காண்பிக்கும் வேடிக்கையில் சிறுவர்கள் ஈடுபட்டிருக்கையில் கன்றுகள் பசும்புல்லைத் தேடி வெகு தூரம் சென்று விட்டன. பையன்கள் கன்றுகளைக் காணோமே என்று பயந்து போயினர். "பயப்படாதீர், உங்கள் உணவை அருந்துங்கள்; நான் சென்று கன்றுகளை ஓட்டி வருகிறேன்" என்று உரைத்து விட்டு, தன் கைத்தலத்தில் உணவை வைத்துக் கொண்டே கண்ணன் காட்டிலும் குகையிலும் கன்றுகளைத் தேடிச் சென்றான்.

பிரமனுக்குக் கண்ணனுடைய மாயைகளைப் பார்த்துப் பார்த்துப் போதும் என்று தோன்றவில்லை. கண்ணன் வெளியேறியதும் பிரமன் கன்றுகளையும் மற்ற ஆயர்பாடிச் சிறுவரையும் ஓரிடத்தில் ஒளித்து வைத்து விட்டுக் கண்ணன் என்ன செய்கிறான் என்று பதுங்கிப் பார்த்திருந்தார். கண்ணன் காடெல்லாம் சுற்றியும் கன்றுகளைக் காணவில்லை; பையன்கள் இருந்த இடத்துக்குத் திரும்பியபோது பையன்களையும் காணவில்லை. இது பிரமன் செய்த செயலென்று அறிந்தான். அத்தனை கன்றுகளாகவும் அவைகளை ஓட்டி வந்த சிறுவர்களாகவும் தானே மாறினான். ஹரியைத் தவிர வேறில்லை என்பதை எடுத்துக் காட்டினான் போலும்! அதே கன்று, அதே பையன், அதே குழல், கொம்பு, துணி, மணி, வயது, நடத்தை - இவ்விதம்

பலவாகப் பெருகின. ஒவ்வொரு கோபியும் தன் மகனென்றே கருதிக் கண்ணனுக்குப் பால் ஊட்டி அலங்கரித்து ஆனந்தம் அடைந்தாள்.

மாலையில் புழுதி படிந்த மேனியோடு திரும்பிய கண்ணனை ஒவ்வொரு கோபியும் நீராட்டிக் களபம் பூசி நெற்றியிலே பொட்டிட்டு அன்னம் அளிப்பாள். கொட்டிலில் கட்டிய கன்றுகளைப் பசுக்கள் அன்போடு நாக்கினால் நக்கிச் சுரக்கும் பாலைக் கொடுக்கும். கன்றிடம் பசுவுக்கும் தனயனிடம் தாய்க்கும் அன்பு ஓங்கி வளர்ந்தது. இவ்வாறு தனித்தனியாய் வீடு வீடாய் ஓராண்டு முழுதும் நாடகம் நடத்தினான் நாராயணன்!

ஒரு வருடம் முடிவதற்கு ஐந்தாறு நாட்கள் பாக்கியிருந்த பொழுது கண்ணனும் பலராமனும் கன்றுகளை மேய்க்கக் கானகம் சென்றனர். கோவர்த்தனகிரியின் மேல் பாகத்தில் மேய்ந்து கொண்டிருந்த பசுக்கள், தூரத்தில், ஊருக்கு அருகில் தங்கள் கன்றுகள் மேய்ந்து கொண்டிருப்பதைப் பார்த்தன. கன்றுகளைக் கண்ணுற்ற பசுக்கள், அடக்க முடியாத ஆசையால் தூண்டப்பட்டு கன்றுகளை நோக்கித் திரண்டோடி வந்தன. கன்றுகளை நெருங்கிப் பால் பருகச் செய்தன. பசுக்களைப் பின்பற்றி கோபர்களும் அங்கு ஓடிவந்தார்கள். அவர்களும் தம் குமாரர்களைக் கண்டு சந்தோஷம் கொண்டு உச்சி முகர்ந்து, ஆனந்தக் கண்ணீர் சொரிந்தனர்.

"எப்பொழுதும் இருப்பதைவிட இப்பொழுது தாய்க்கு மகனிடத்திலும், பசுவுக்குக் கன்றிடத்திலும் கோபர்களுக்குத் தம் சிறுவரிடத்திலும் புதிதாக ஒரு அன்பு வளர்ந்திருக்கிறதே. கண்ணனிடம் வைத்திருக்கும் அன்பு, எனக்கு எல்லோரிடமும் தோன்றுகிறதே! இதென்ன மாயம்? இது யாருடைய செயல்? என்னையும் மயங்கச் செய்வதால் இது கண்ணனுடைய மாயையாகத்தான் இருக்க வேண்டும்" என்று பலராமன் தீர்மானித்துத் தன்னுடைய ஞானக் கண்ணால் சேயினத்தையும் பாலர்களையும் நோக்கினான். எல்லாம் விஷ்ணுவாக இருப்பதை அறிந்தான். கண்ணன் பக்கம் திரும்பி, "இந்தக் கோபாலச் சிறுவர்கள் ஆயர்பாடியில்பிறந்த விண்ணவர் அல்ல; இந்தப் பசுங் கன்றுகள் முனிவரும் அல்ல. தேவரீரே பல உருவோடு தோன்றியிருக்கிறீர்கள்" என்றான். நடந்ததை யெல்லாம் கண்ணனும் அண்ணனுக்கு எடுத்துரைத்தான்.

* * *

ஓராண்டு முடிந்தது. பிரமன் பிருந்தாவனத்துக்கு வந்தார். கண்ணனும் தோழரும் எப்பொழுதும் போல் விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டார். தான் எல்லாக் கன்றுகளையும், பிள்ளைகளையும் ஒளித்து வைத்திருக்க, அவர்கள் இவ்விடத்தில் எவ்வாறு கூடியிருக்கின்றனர் என்று வியப்புற்றுக் காரணம்



தெரியாது கலங்கினார். மாயனை மயக்க பிரமனால் முடியுமா? பனி பெய்து மூடும் இருள் இரவின் பேரிருளோடு கலந்தாற்போலவும், மின்மினுப் பூச்சியின் ஒளி கதிரவன் ஒளியில் மறைந்தாற்போலவும் பிரமனின் மாயம் மாயத்துக்கே ஈசனை கண்ணனுடைய மாயையில் மங்கி மறைந்து போயிற்று. பிரமன் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே சிறுவராக இருந்த அனைவரும் சங்கு சக்கரம், கதை, தாமரை, இவைகளைக் கையில் ஏந்தி, கருமுகில் வண்ணத்துடன் குண்டலமும் வனமாலையும் திகழ விஷ்ணுவின் உண்மை உருவுடன் தோன்றினார்கள். பிரமனுக்கு இந்த ஜோதியைப் பார்க்க முடியாமல் கண் கூசிற்று. பதுமை யென வாய் மூடி நின்றான். பிரமன் பரிதவிப்பதை அறிந்த கண்ணன் தன் மாயையை விலக்கினான். இறந்தவனுக்கு உயிர்வந்தாற்போல் பிரமன் கண் விழித்து எங்கும் நோக்கினான். பிருந்தாவனத்தைக் கண்டான். பகை கொண்ட விலங்குகள் பகை துறந்து கூடி வாழ்வதைக் கண்டான். அருவமான பரம்பொருள் உருவமோடு தோன்றிச் சிறு பாலகனாய் கைத்தலம் நிறையத் தயிரமுதை வைத்துக் கொண்டிருப்பதைக் கண்டான்.

உடனே தனது அன்னப் பறவை வாகனத்திலிருந்து குதித்துக் கண்ணனை தாள் தொட்டுத் தண்டமிட்டான். பிறகு எழுந்து கைகூப்பி கண்ணனைப் பல விதம் தோத்திரம் செய்தான்.

ஆயர்குல மைந்தனே! உன்னை வணங்குகிறேன். பக்தி இல்லாப் படிப்பிலே பயன் இல்லை. உமியை இடித்தால் வலிதான் மிஞ்சும். என்னே! எனது பேதைமை! மாயையின் மாயனை மயக்க வந்தேனே! தீயுடன் போட்டிக்கு வந்த பொறியெனத் தீர்ந்தேன். ஆனால் கருவிலிருக்கும் சிசுவானது தாய் வயிற்றைத் தன் காலால் உதைப்பதில் தவறேதும் உளதோ? உன் உதரத்துக்கு வெளியே உண்டென்றும் இல்லை என்றும் எண்ணுவதற்கு ஏதுமே இல்லை. ஆயர் குலத்தவர் என்ன தவம் செய்தனரோ?

“எப்பிறவி எய்தினால் இப் பிருந்தாவனத்திலே ஜடமாகத் தோன்றி, வேதங்களும் அறியாத கண்ணனை உயிரென்று கருதி வரும் ஆயர்குல மாந்தரின் கால் புழுதி உடலெங்கும் படுமோ, அத்தகைய பிறவி கோருகின்றேன்.”

இவ்விதம் புகழ்ந்து விட்டுப் பிரமன் கண்ணனை வலம் வந்தான். திரும்பவும் வணங்கிவிட்டுப் பிரமலோகம் சென்றான்.

பிரமனின் மாயையால் மயங்கிக் கிடந்த கன்றுகளும் சிறுவர்களும் திரும்ப



● தென்னகத்தில் புகழ் படைத்த டி. வி. எஸ். ஸ்தாபனத்தின் மூல புருஷர் திரு டி. வி. சுந்தரம் அய்யங்காரின் மனைவி மாது ஸ்ரீலக்ஷ்மி அம்மாள் சென்ற 20-ம் தேதி தமது 78வது வயதில் காலமானார் என்று அறிந்து வருந்துகிறோம்.

பழைய தலைமுறையைச் சேர்ந்த லக்ஷ்மி அம்மாள் இந்து தர்மத்திலும், பண்பாட்டிலும் ஊறித் திளைத்தவர். தனது 8வது வயதிலேயே மணம்புரிந்து குடும்ப நிர்வாகத்தில் ஈடுபட்டு மகத்தான பொறுப்புக்களை ஏற்று வெற்றிகரமாக நிறைவேற்றியவர். பிறந்த வீட்டுச் செல்வமும் புகுந்த வீட்டுத் தனமும் ஆரம்ப காலத்தில் வியாபாரத்தின் மந்த கதியில் கரைந்துபோன காலத்திலும் கூடத் தமது கணவருடைய எதிர்கால உயர்வில் சற்றேனும் தளராத நம்பிக்கையுடன் குடும்பத்தை நடத்தி வந்தவர். டி. வி. எஸ். ஸ்தாபனம் அடைந்துள்ள மேன்மைக்கும் தமது புதல்வர்களின் சிறப்பான ஒற்றுமைக்கும் உழைப்புக்கும் ஸ்ரீ லக்ஷ்மி அம்மாளின் உன்னத லட்சியங்களும் பண்பாடும்தான் காரணம். தமது மக்கள் சீரும் சிறப்புமாய் விளங்குவதைக் கண்டு களித்துத் தமது கடமையைப் பூரணமாக நிறைவேற்றி விட்ட மனத் திருப்தியுடன் காலமான லக்ஷ்மி அம்மாளின் ஆத்மா சாந்தியடைவதாக. அன்னாருடைய குடும்பத்தினர்களுக்கு மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். ●

வும், ஆற்றின் கரையில் விழித்துக் கொண்டார்கள். அன்று பிற்பகல் உணவருந்தக்கூடி நின்ற வேளையென்றே கருதினர். ஓராண்டு சென்றதை அவர்கள் அறியவில்லை. ''கண்ணா! நீ திரும்பவில்லையே என்று காத்திருந்தோம். பார் ஒரு கவளம்கூட நாங்கள் இன்னும் அருந்தவில்லை'' என்று கன்றுகளைத் தேடிச்சென்ற கண்ணனை வரவேற்றனர். கண்ணன் நகைத்தான். தோழருடன் கூடி உணவருந்தினான். அன்று மாலையில் ஆயர்குலச் சிறுவர்கள் தங்கள் பெற்றோரிடம், ''இன்று கண்ணன் ஒரு மலைப் பாம்பைக் கொன்று எங்களைக் காப்பாற்றினான்'' என்று கூறினர்.

*   *   *

கண்ணனுக்கு ஆறு வயது ஆயிற்று. பசுக்களை மேய்ப்பதற்குத் தகுதியைக் கண்ணனும் பலராமனும் அடைந்தனர். கார்த்திகை மாதத்து வளர்பிறையன்று கண்ணன் மாடு மேய்க்க ஆரம்பித்ததாக வேறு புராணத்தில் உரைக்கப்பட்டுளது. இத்தினத்துக்கு 'கோபாஷ்டமி' என்று பெயர் வழங்குகின்றனர். கண்ணன் தாள் பட்டுப் பிருந்தாவனமெல்லாம் புண்ணியம் பெற்றது. இடையர் பலர் சூழ்ந்து தன் பெருமையைப் பாட, பலராமரோடு கண்ணன் குழலூதிக் கொண்டே பிருந்தாவனம் சென்றான். விலங்கும் பறவையும் அங்கு சத்தமிட்டுக் கொண்டிருந்தன. பெரியோர் மனதென மாசற்ற நீர் நிறைந்த ஒரு ஏரி அங்கு இருந்தது. தாமரையின் நறுமணம் கலந்த காற்று அவ்விடத்தில் வீசிக் கொண்டிருந்தது. வழியெல்லாம் கனி நிறைந்த மரங்கள் குனிந்து கால் தொட்டு வணங்குவது போல் தோன்றின. இந்த இயற்கை அழகைக் கண்டு களிப்புற்ற கண்ணன் பலராமனிடம் அதைக் குறித்து உரையாடினான். ''தாவரப் பிறவியெடுத்த இம்மரங்களைப் பார். கடைத்தேற எண்ணங் கொண்டு பழங்களைத் தலையில் ஏந்தி உன்னை வணங்குகின்றன. இவ்வண்டுகள் உன்னைப் பின்பற்றி உன் பெருமையைப் பாடி வருகின்றன. இவைகள் உண்மையில் முனிவர்களே. மயில் மனம் குளிர்ந்து ஆடுகிறது; ஆயர் மங்கையரைப் போல் பெண் மான்கள் உன்னையே உற்று நோக்குவதைப் பார். குயிலினம் தம் வீடு வந்த உன்னைப் பாடி வரவேற்கிறது. உன் உடலோடு தொடர்பு பெற்ற இப்பூமியே புண்ணியம் பெற்றிருக்கிறது'' என்றான் கண்ணன்.

அனைவரும் கோவர்த்தன மலையின் அருகில் பசுக்களை மேய்த்து வந்தனர். அங்கு கண்ணன் செய்த விந்தை விளையாட்டுக்கள் எண்ணற்றவை.

ஸ்ரீ தாமன் என்ற சிறுவன் ஒருநாள் கண்ணனிடம் பின்வாறு மொழிந்தான். ''பலராமா! கண்ணா! இவ்விடத்துக்குச் சிறிது தூரத்தில் ஒரு பெரிய காடு இருக்கிறது. அங்கு அனேகம் பனைமரங்கள் இருக்கின்றன. பழங்கள் உதிர்ந்து கிடக்கின்றன. ஆனால் அங்கே போவது மிகவும் கஷ்டம். தேனுகன் என்ற ஓர் அரக்கன் அக்கானகத்தைக் காத்து வருகிறான். கழுதை வேடம் பூண்டவன். தன்னைப்போல் வேடம்பூண்ட பலரோடு கூட அங்கு வசித்து வருகிறான். மனித மாமிசத்தில் பிரியம் கொண்டு அண்டினவரை இரையாக்கி விடுகிறான். ஆனால் அங்கிருக்கும் பழங்களின் மணம் இங்கு கூடக் கமழுகிறது பாருங்கள். அவைகளை எப்படியாவது எங்களுக்கு அளிப்பாய்'' என்றான்.

இதைக்கேட்ட பலராமனும் கண்ணனும் நகைத்தனர். எல்லோருமாகக் கூடிப் பனங்காட்டுக்குச் சென்றனர். காட்டுக்குள் நுழைந்ததும் பலராமன் சிற்றானையைப் போல் மரங்களைக் குலுக்கிப் பழங்களை உதிர்த்தான். இந்த அரவத்தைக் கேட்ட தேனுகன் ஓவென்று அலறிக் கொண்டு பலராமனை எதிர்த்து ஓடி வந்தான். பின்காலால் உதைத்தான். பலராமன் கழுதையின் காலைப் பிடித்துக் கொண்டான்; கறகறவென்று சுற்றி ஒரு பனைமரத்தின் முட்டில் ஓங்கி அடித்தான். அரக்கன் உயிர் துறந்தான். பனைமரமும் பக்கத்து மரத்தின்மீது சாய்ந்தது. மரத்தின்மீது மரம் சாய்ந்து புயல்காற்று அடித்தாற்போல் மரங்கள் எல்லாம் ஆடி அசைந்தன. மற்றக் கழுதைகளைக் கண்ணனும் பலராமனும் ஒவ்வொன்றாகக் கொன்றார்கள். பூமி எல்லாம் இறந்த கழுதையும் உதிர்ந்த பழமுமாய் மேகம் மூடிய வானத்தை ஒத்திருந்தது.

தாமரைக் கண் படைத்த கண்ணனும் மற்ற கோபாலச் சிறுவர்களும் வீடு திரும்பினர். கூட வந்தவர் புகழ்பாட, கொண்டையில் மயில்பீலி அணிந்து, சுருண்ட குழல் புழுதிப் படிந்திருக்கப் புன்னகை தவழ் வதனத்துடன் குழல் ஊதி வரும் கண்ணனைக்காண ஆயர்குலமங்கையர் ஆவலோடு முன் வந்தனர். கண்ணனென்ற மலரை வண்டெனப் பருகி, நாள் முழுவதும் காணாது பொங்கிய வருத்தத்தைத் தணித்துக் கொண்டனர்.

வீடு திரும்பிய கண்ணனுக்கும் பலராமனுக்கும் யசோதையும் ரோகிணியும் நீராட்டிக் களபம் பூசி, மாலை சூட்டி விருந்திட்டு உறங்க வைத்தனர்.

ஜூன் 12ம் தேதி முதல் தமிழ்நாடெங்கும்

அக்னிப் பிழம்பாய் அவதரித்து
அலைகடலாய் அல்லற்பட்டு
முடிவில் தியாகத் தீபமாய் மறைந்த
தீரனின் சோக வரலாறு.



மாடர்ன் தியேட்டர்ஸ்

# தலை கொடுத்தான் தம்பி

டைரக்ஷன்
டி.ஆர்.சுந்தரம்

கதை, வசனம்
முரசொலி.மாறன்.எம்.ஏ

இசை
விஸ்வநாதன், ராமமூர்த்தி

# கண்கள்

## அத்தியாயம் 8

## வெட்கத்தில் சிவந்த முகம்

மரகதத்தம்மாளும் மாலாவும் தண்ணீர் எடுத்துக் கொண்டு திரும்பிக் கொண்டிருந்தனர். அப்பொழுது மாலை ஐந்தரை மணிக்குச் சமீபம் ஆகிவிட்டது. கிராமத்துப் பெண்டிர் தண்ணீர் எடுக்க வரும் நேரம் அதுதான்.

ஐந்தரை மணிக்குத் தொடரும் அவர்கள் படையெடுப்பு இருட்டிச் சிறிது நேரமாகும் வரையில் நீடிக்கும். இவர்களுக்கு எதிரே இந்தப் படையின் முதற் குழு வந்து கொண்டிருந்தது. ஏழெட்டுப் பெண்மணிகள், மாலை வெய்யிலில் தங்கள் மஞ்சள் பூசிய முகம் தங்க மெனப் பளபளக்க, ஊர்க் கதைகளைப் பேசியவாறு ஒய்யார நடை நடந்து வந்து கொண்டிருந்தனர்.

மாலாவின் மனம் அவள் இடுப்பிலிருந்த குடத்தைப் போல் நிறைந்திருந்தது. சுந்தரத்துக்கு எப்படி இருந்தாலும் அவள் வரையில் மரகதத்தம்மாளே தங்கள் சந்திப்பைப் பார்த்து விட்டதில் மகிழ்ச்சிதான். ஆமாம், விஷயம் ஊரெல்லாம் தமபட்டம் அடிக்கப்பட்டு, கண் மூக்கு—காது வைத்துத் தங்கள் வீட்டாருக்கு எட்டுவதை விடச் சம்பந்தப்பட்ட ஒருத்தியே அதைப் பார்த்துத் தெரிந்துகொண்டு விட்டது நல்லதில்லையா?

மாலா பெரிய படிப்பொன்றும் படித்தவள் இல்லை. நகரத்து நாகரிகங்களும் அவளுக்கு அவ்வளவாகத் தெரியாது. நடை, உடை, பாவனைகள் எல்லாவற்றிலும் அவள் கிராமியப் பெண்தான். எங்கோ ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பால் ஒரு சமஸ்தானத்தில் பிறந்தாலும், அந்தச் சமஸ்தானத்து மன்னரும் ராணியும் அவர்கள் குடும்பத்தினர் போலவே பழகி வந்ததால், வீணாவுக்குப் பெயர் சூட்டியது போல் ராணி ஊர்மிளா தேவியே இவளுக்கும் மாலா என்ற நாகரிகப் பெயரைச் சூட்டி விட்டாள். இல்லா விட்டால், 'சுப்பு', 'குப்பு' என்பது போன்ற ஏதாவது ஒரு சாதாரணக் கிராமாந்திரத்துப் பெயரே மாலாவுக்கு வைத்திருப்பார்கள்.

கேசவபுரத்தில் பத்தாவது வகுப்புவரை உள்ள பள்ளி ஒன்று இருக்கிறது. ஆனால் மாலா ஏழாவது வகுப்புக்கு மேலே படிக்கவில்லை. அவளுக்கு ஆர்வம் இருந்தது. தைலம்மாள்தான் அவளை நிறுத்தி விட்டாள். அப்பொழுது சச்சிதானந்தம் பிள்ளைகூட ஊரோடு வந்து விட்டார். "குழந்தை ஆசைப்படுது. படிக்கட்டுமே தைலம்மா. உன்னைப்போலே உன் மகளும் ஒண்ணும் தெரியாதவளாகவே இருக்கணுமா?" என்று அவர் சிபாரிசு செய்தார். ஆனால் தைலம்மாள், "நீ சும்மா இரு, தம்பி! அதெல்லாம் உங்க பட்டணக் கரைக்குச் சரி. இந்த ஊரிலே இனிமேல் இவளைப் படிக்க அனுப்பினா, சனங்க நாலும் பேசுவாங்க" என்று கூறி விட்டாள். அவள் இப்படிப் பிடிவாதமாகப் பேசியதற்குக் காரணமும் இருந்தது. மாலாவுக்கு வயதை மிஞ்சிய வளர்ச்சி. நான்கு வருஷங்களுக்கு முன் இந்தச் சம்பவம் நடந்த

மாயாவி

# உறங்காவோ?



போது அவள் குழந்தைதான்; ஆயினும்' எச்சமயமும் 'பெரியவள்' ஆகிவிடலாம் என்று நினைக்கும்படியாக இருந்தது அவள் வளர்ச்சி. கிராமங்களில் பெரியவளாகும் பிராயத்தை எட்டி விட்ட பெண்களைப் படிக்க அனுப்புவார்களா?

ஆகையால் மாலாவின் படிப்பு அரைகுறையாகவே நின்று விட்டது. ஆனால் சச்சிதானந்தம் பிள்ளையைப் போன்ற அறிஞரின் பார்வையில் வளர்ந்ததால் அவளுடைய அறிவு நன்கு விரிவடைந்தது. சச்சிதானந்தம் பிள்ளை தமது ஓய்வு காலத்தைப் பழம்பெரும் இலக்கியங்களைப் படிப்பதில் செலவிட்டு வந்தார். ஆதலால் அவர் முதலில் அவளுக்கு அந்த இலக்கியங்களில் பரிச்சயம் ஏற்படுத்தி வைத்தார். பிறகு உலக அறிவையும் அவள் பெற வேண்டுமென்று சில தமிழ்த் தினசரிகளுக்கும், மாத-வாரப் பத்திரிகைகளுக்கும் சந்தாச் செலுத்தி வரவழைத்துப் படிக்கச் செய்தார். அவருடைய இத்தகைய முயற்சிகளால் மாலா நிறையப் படித்த பெண்ணாக இல்லாவிட்டாலும், உலகம் அறியாதவளாக இருக்கவில்லை.

ஆயினும், யார் எதைப் படித்தாலும், அவரவர் வயதுக்கேற்ற விஷயங்களில் தான் அவரவர்களுக்குச் சுவை ஏற்படுகிறது. மாமாவிடம் கம்பராமாயணத்தையும், சிலப்பதிகாரத்தையும், சிந்தாமணியையும் மணிமேகலையையும்பாடம் கேட்கும் மாலாவின் மனம் அவற்றின் காப்பியச் சுவையைவிட, அக்காப்பியங்கள் வெளிப்படுத்தும் காதல் சுவையில் தான் அதிகமாக ஈடுபடும். மாமாவுக்குத் தெரியாமல் அந்த நூல்களில் வரும் அப்பகுதிகளை அவள் மீண்டும் மீண்டும் படித்து இன்புறுவாள். ஆகையால், தமிழ்க் காப்பியங்களே அவள் உள்ளத்தில் முதன் முதலாகக் காதலின் வித்தை ஊன்றின என்று சொல்ல வேண்டும். அவை ஊன்றிய காதல் விதைக்குப் பத்திரிகைக்

## அருள் வாக்கு

மஹாவிஷ்ணு லோகம் முழுவதையும் காப்பாற்றுகிறார். அவர் திரிபுவன சக்கரவர்த்தி. பரமசிவன் உன்மத்த சேகரன். இருவர் உடம்பிலும் எத்தனை பொருள்கள் இருக்கின்றன என்று கணக்குப் பார்ப்போம். இரண்டையும் ஏலத்துக்கு விட்டால் இருவருடைய பொருளும் விலை போகாது. இந்தப் பைத்தியக்கார சிவனிடம் சாம்பல்; மண்டையோடு; எருக்கப் பூ: தும்பைப்பூ: ஊமத்தம்பூ. இவற்றை யாராவது விலை கொடுத்து வாங்குவார்களா? மஹா விஷ்ணுவிடம் கௌஸ்துபம்; பீதாம்பரம்; சங்கு; சக்கரம்; கதை; எல்லாவற்றிலும் உயர்ந்த லக்ஷ்மி மார்பில் வசிக்கிறாள். இவைகளை விலை மதிக்க முடியுமா? விலை மதிப்பற்ற ஒப்பற்ற பொருள்கள். ஆகையினால் இருவருடைய பொருளுக்கும் விலை இல்லை என்று முடிவாகிறது.

-ஸ்ரீ சங்கராச்சார்யார், காஞ்சி காமகோடி பீடம்

கதைகள் உரமிட்டன. தக்க சமயத்தில் சுந்தரம் அவள் வாழ்க்கையில் புகுந்து அவ்விதைக்கு நீர் பாய்ச்சி, தளிர்த்துத் தழைக்கச் செய்தான்.

அறிவு தெரிந்த நாள்தொட்டு மாலா சுந்தரத்தை அத்தான் என்றுதான் அழைத்து வந்தாள். ஆயினும், மரகதத்தம்மாளை அத்தை என்று அழைத்ததையொட்டியே அவன் மாலாவுக்கு அத்தான் ஆனானேயன்றி, உறவு முறையிலும் அப்படி ஆகக்கூடிய சந்தர்ப்பம் ஏற்படுமென்று அவன் அன்று கருதியிருக்கவில்லை. அவர்களிடையே இரண்டு வருஷங்களுக்கு முன் வரையில் அண்ணன் தங்கை உறவுதான் இருந்து வந்தது. ஆனால் இரும்பும் காந்தமும் எட்டி இருந்தால் ஒன்றும் ஆகிவிடாது. அவை நெருங்கி யிருந்தால்...? அதோடு பருவக் காற்று வேறு அங்கே பாங்குடன் வீசத் தொடங்கினால்...?

ஒன்றரை வருஷங்களுக்கு முன் ஒரு நாள் இதே புங்கனூற்றுப் படித்துறையில், கிட்டத்தட்ட இதே மாலை நேரத்தில் தான் அவர்கள் காதல் முளை விட்டது.

சுந்தரம் ஒரு பத்திரிகைப் பித்து; புத்தகப் புழு. தமிழிலும் ஆங்கிலத்திலும் அவன் வாங்காத பத்திரிகைகள் கிடையாது; படிக்காத புத்தகங்கள் கிடையாது. ஏராளமாக வாங்குவான்; எப்பொழுதும் படித்தவாறே இருப்பான். ஆனால் படித்த பிறகு ஒன்றைக்கூட வீசி எறிந்துவிட மாட்டான். அல்லது மூர் மார்க்கெட்டுக்குத் தள்ளி விட்டுவிட மாட்டான். ஒவ்வொரு லீவுக்கும் ஊருக்கு வரும்போது மூட்டை கட்டி எடுத்து வருவான். மாலாவுக்குப் படிக்கக் கொடுப்பான். பிறகு அவற்றை வீட்டில் ஓர் அலமாரியில் பத்திரப்படுத்தி வைத்து விட்டுப் போவான்.

அந்தத் தடவை இப்படித்தான் அவன் லீவுக்கு ஊருக்கு வந்திருந்தான். வழக்கம் போல் ஒரு பத்திரிகைக் கட்டும், புத்தகக் கட்டும் அவனுடன் வந்தன. கொண்டு வந்தவற்றில் ஒவ்வொன்றாக மாலாவுக்குப் படிக்கக் கொடுத்தான். ஒரு நாள் அவன் கொடுத்த புத்தகம் ஒன்றைப் படித்து முடித்த மாலா அதைத் திருப்பிக் கொடுத்துவிட்டுப் புதிய புத்தகம் வாங்கிப் போக வந்தாள். அவள் வந்த சமயத்தில் சுந்தரம் ஏதோ ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தான். மாலாவைக் கண்டதும் அவன் புத்தகத்தை மூடி வைத்து விட்டு, "வா, மாலா!" என்று வரவேற்றான்.

"என்ன படித்துக் கொண்டிருக்கிறீர்கள்?" என்று அவள் தான்கொண்டு வந்த புத்தகத்தை மேசையின்மீது வைத்துவிட்டு, அவன் மூடி வைத்த புத்தகத்தைக் கையில் எடுத்தாள்.

சுந்தரம் வெடுக்கென்று அதை அவளிடமிருந்து பிடுங்கிக் கொண்டு, "இது வேறு புத்தகம். உனக்கு இதில் ஒன்றும் விளங்காது" என்றான்.

விளங்காத விஷயங்களை விளக்கிக் கொள்ள வேண்டுமென்ற ஆர்வம் பிறக்கும் பிராயமல்லவா மாலாவுக்கு? அவள், "ஏன், தமிழ்ப் புத்தகந்தானே இது?" என்று கேட்டவாறு அவன் கையில் இருந்த அப்புத்தகத்தின் தலைப்பைக் குனிந்து நோக்கினாள். சுந்தரம் புத்தகத்தை மறைத்துக் கொள்ள முயன்றான். ஆயினும் மாலா அதற்குள் அதைப் படித்து விட்டாள் — "காதலும் கலியாணமும்!" அவள் குபீரென்று சிரித்து, "ஓஹோ!" என்று தலையை மேலும் கீழும் ஆட்டினாள்.

சுந்தரத்துக்கு வெட்கமாகப் போய்விட்டது. இருந்தாலும் அதைக் காட்டிக் கொள்ளாமல், "என்னடி சிரிப்பு? மனிதன் என்றால் நாலும் தெரிந்துகொள்ள வேண்டியதுதானே!" என்று விட்டுக் கொடுக்காமல் பேசினான்.

"யார் தெரிந்து கொள்ளக்கூடாது என்றார்கள்? ஆனால் நான் சொல்வது, உங்களுக்கு இருக்கும் அதே ஆர்வம் எனக்கும் இருக்காதா என்பதுதான்!"

"என்ன?" சுந்தரம் திடுக்கிட்டு அவளை நோக்கினான்.

ஆனால் மாலா திடுக்கிடவும் இல்லை; வெட்கப்படவும் இல்லை. "ஆமாம்; காதலும் கலியாணமும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் பொதுத்தான்!" என்றாள்.

அவளை இதுவரையில் பச்சைக் குழந்தையாகவே நினைத்திருந்தான் சுந்தரம். ஆகையால் இத்தகைய பேச்சைக் கேட்டதும் வியப்பினால் அவனால் பேசவே முடியவில்லை. ஒன்றும் சொல்லத் தோன்றாமல்

அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"என் முகத்தைப் பார்த்தது போதும். சொல்லுங்கள், இந்தப் புத்தகத்தை எனக்குப் படிக்கத் தருவீர்களா, மாட்டீர்களா? இப்பொழுதே தரவேண்டாம். நீங்கள் படித்து முடித்த பிறகு......"

"வேண்டாம், மாலா! உங்கள் வீட்டில் யாருக்காவது தெரிந்தால் ஆபத்து!"

"இதென்ன அவ்வளவு மோசமான புத்தகமா?"

"மோசமான புத்தகம் என்று சொல்ல மாட்டேன். இந்த ஆசிரியர் கேவலமான முறையில் எழுதக் கூடியவர் இல்லை. ஆயினும் ஒரு வயசுப் பையன் வயசுப் பெண்ணுக்கு இதைப் படிக்கக் கொடுத்தான் என்று தெரிந்தால் பெரியவர்கள் வித்தியாசமாக நினைத்து விடுவார்கள்."

"இல்லை, இல்லை. உங்களுக்கு மனமில்லை. அதற்காக இப்படி எது எதையோ சொல்லி என் வாயை மூடப் பார்க்கிறீர்கள்."

"இல்லை, மாலா! உண்மையாகத்தான் சொல்லுகிறேன். ஏற்கெனவே ஒரு தடவை இந்த மாதிரித் தவறைச் செய்து சூடு வாங்கியவன் நான்."



"ஒரு பொய்யை மறைக்க மற்றொரு பொய்யா! ஒரு சாதாரணப் புத்தகத்தை ஒரு பெண்ணுக்குப் படிக்கக் கொடுத்ததற்காக ஒருவர் சூடு கொடுத்தாரென்றால், அது சிறிதும் நம்பக் கூடியதாக இல்லையே, அத்தான்!"

"நீ நம்பினால் நம்பு; நம்பாவிட்டால் போ! ஆனால் நான் சென்னையில் தங்கியிருக்கும் வேலாயுதம் பிள்ளையின் வீட்டுக்கு, அவருடைய தங்கை மகளாம், தங்கம் என்றொரு பெண் தன் தாயாருடன் கிராமத்திலிருந்து வந்திருந்தாள். உன்னுடன் பழகுவதுபோல், நான் அவளுடனும் சகஜமாகப் பழகிக் கொண்டிருந்தேன். அவளும் உன்னைப்போல் என்னிடமிருந்து புத்தகங்களும் பத்திரிகைகளும் வாங்கிப் படிப்பாள். இந்தப் புத்தகத்தை வாங்கி வந்த அன்றும் அப்படித்தான், நான் அதைத் திறந்து கூடப் பார்க்கவில்லை; அவள் என்னிடமிருந்து பிடுங்கிக் கொண்டு போய்விட்டாள்.

"இரண்டு நாட்களுக்குப் பிறகு தங்கத்தின் அம்மா கோபத்தோடு என்னிடம் வந்து, புத்தகத்தை என் முகத்தில் அடிப்பதுபோல் வீசி விட்டு 'ஏண்டா தம்பி! உனக்குக் காதலுக்கும் கலியாணத்துக்கும் ஆசையா யிருந்தா நீ படிச்சுக்கிடு; நீ தெரிஞ்சுக்கிடு. என் மகளின் மனசைக் கெடுத்திடாதே, தம்பி. உனக்குப் புண்ணியமாப் போகுது. நாங்க கிராமத்திலே இருக்கிறவங்க' என்று பொரிந்து தள்ளி விட்டுப் போனாள்.

"நல்ல வேளை! அவள் இதை வேறு யாரிடமும் சொல்லவில்லை. சொல்லியிருந்தால் நான் வேலாயுதம் பிள்ளையின் வீட்டிலிருந்தே மூட்டை கட்டும்படி நேர்ந்திருக்கும். எனக்கு அப்பொழுது ஏற்பட்ட அவமானத்தில் புத்தகத்தை உடனே பெட்டிக்குள் எடுத்துப் போட்டு விட்டேன். படித்துக்கூடப் பார்க்கவில்லை. இன்றுதான், அதுவுங்கூட அரைமணி நேரத்துக்கு முன்புதான், வாங்கின புத்தகத்தைப் படித்தாவது பார்ப்போம் என்று படித்துக்கொண்டிருந்தேன். நீ வந்து விட்டாய்!

"புத்தகத்தின் உள்ளடக்கம் மிகவும் உயர்தரமாகத்தான் இருக்கிறது. ஆனால் அதன் தலைப்பு பெரியவர்களைப் பயமுறுத்தும் வண்ணம் அமைந்திருப்பதால், உனக்கு அதைப் படிக்கத் தந்து விட்டு, உன் அம்மாவின் வாயிலும் அகப்பட்டுக் கொண்டு விழிக்க எனக்குப் பிரியமில்லை, மாலா. தயவு செய்து இந்தப் புத்தகத்தை மட்டும் கேட்காதே!" என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டான்.

இதையெல்லாம் கேட்டபோது அவளுக்கு அப் புத்தகத்தைப் படிக்க வேண்டுமென்று ஆர்வம் இன்னும் அதிகமாயிற்று. ஆனால் அவன் கருத்தை வற்புறுத்தவில்லை. படித்த பிறகு இங்கே தானே வைத்து விட்டுப் போவார். லீவு முடிந்து இவர் பட்டணத்துக்குப் போன பிறகு அத்தையிடம் அலமாரிச் சாவியை

வாங்கி, எடுத்துப் படித்துக் கொள்ளலாம் என்று இருந்து விட்டாள்.

ஆனால் அவள் அத்தனை நாட்கள் காத்திருக்க வேண்டியிருக்கவில்லை. இது நடந்த மறுநாளே புஷ்பவனம் பிள்ளையும் சுந்தரமும் உறவினர் ஒருவர் வீட்டுக் கலியாணத்துக்காக வெளியூருக்குச் சென்று விட்டனர். அன்றே மாலா மரகதத்தம்மாளிடம் புத்தக அலமாரியின் சாவியை வாங்கி, அப் புத்தகத்தைத் தேடி எடுத்து, வீட்டுக்குக் கொண்டு போய், ஒரே மூச்சில் படித்து முடித்து விட்டாள். அந்தப் புத்தகம் ஒன்றும் பெண்கள் படிக்க முடியாதபடி மோசமான முறையில் எழுதியிருக்கப்படவில்லை. கண்ணியமான முறையில், காதல் மனத்தின் பல்வேறு கோணங்களையும், அதன் கோளாறுகளையும் சித்திரித்ததோடு, காதலை எப்படி ஒழுங்காக வளர்க்க வேண்டும்; எவ்வாறு அது கலியாணத்தில் வந்து முடியும்படி செய்ய வேண்டும் என்பவைகளை விளக்கியது.

புத்தகத்தைப் படித்து முடித்து விட்டு, அதை முன்பு இருந்த இடத்திலேயே திருப்பி வைத்துவிட வந்தபோது மாலாவுக்குச் சுந்தரத்தைக் கொஞ்சம் கேலி செய்ய வேண்டுமென்ற ஆசை எழுந்தது. உடனே அவன், அவன் மேசையிலிருந்து காகிதமும் பென்சிலும் எடுத்து, பட்டணத்துக்கு வந்திருந்த அந்தக் கிராமத்துப் பெண் தங்கம் எழுதியதுபோல் சுந்தரத்துக்கு ஒரு காதல் கடிதம் எழுதினாள்; அதைப் புத்தகத்தின் கடைசிப் பக்கத்தில் வைத்து மூடினாள்; பிறகு புத்தகத்தை இருந்த இடத்திலே வைத்து விட்டுப் போய் விட்டாள்.

மறுநாள் சுந்தரம் வந்து விட்டான். பிற்பகலில் ஆற்றுக்குத் தண்ணீர் எடுக்கப் போகும் வழியில் அவன் வீட்டுக்கு வந்தாள் மாலா. அப்பொழுதுதான் அவன் திரும்பி விட்டது அவளுக்குத் தெரிந்தது. சீக்கிரமாகத் தண்ணீர் கொண்டு போய் வீட்டில் வைத்துவிட்டுத் திரும்பி வந்து அவனைக் கேலி செய்ய வேண்டுமென்று அவள் ஆற்றுக்கு நடந்தாள். தண்ணீர் மொண்டு கொண்டு படியேறுகையில், சுந்தரமே எதிரே வந்து விட்டான். 'தனியிடத்தில் வசமாகச் சிக்கிக் கொண்டிருக்கிறார்; சரியான படி மாட்டி வேடிக்கை பார்க்க வேண்டும்!' என்று அவள், குடத்தைப் படியில் வைத்து விட்டு, "உங்களைப் பார்க்க வர வேண்டுமென்றுதான் நான் இப்பொழுது அவசரம் அவசரமாகக் கிளம்பிக் கொண்டிருந்தேன்!" என்றாள்.

"எதற்கு?" என்று கேட்டான் சுந்தரம்.

"உங்களிடம் ரகசியமாகச் சில விஷயங்கள் பேச வேண்டும்."

சுந்தரம் ஒரு விநாடி திடுக்கிட்டவன் போல் அவள் முகத்தை வெறித்து நோக்கினான். பிறகு மாலா குடத்தை வைத்திருந்த படியில் உட்கார்ந்து கொண்டு, "என்ன மாலா? என்ன விஷயம்?" என்று ரகசியமான குரலில் கேட்டான்.

அவன் பார்வையும் பேச்சும் வழக்கம் போல் இல்லாததைக் கண்டு அவள் உள்ளூறச் சிரித்துக் கொண்டே, "உங்கள் 'காதலும் கலியாணமும்' புத்தகத்தைப் படித்துவிட்டேன், அத்தான்! உங்களுக்கு அவப் பெயர் ஏற்படக் கூடாதென்று நீங்கள் ஊரில் இல்லாதபோது அத்தையிடம் சாவி வாங்கி எடுத்துப் படித்தேன். படித்த பிறகுதான், நீங்கள் அதை அன்று எனக்குத் தர மறுத்ததன் ரகசியம் தெரிய வந்தது!" என்றாள்.

"ரகசியமா?"

"ஆமாம்; பொல்லாத புத்தகம் அது. படித்த உடனே ஒரு பெண்ணின் மனத்தை அது இவ்வளவு தூரம் கிளறுமென்று நான் நினைக்கவில்லை!" மாலா ஒருவிதமாகச் சிரித்தாள்.

"நீ சொன்னது சரிதான், மாலா. அது பொல்லாத புத்தகந்தான். பெண்ணின் மனத்தை மட்டுமில்லை, ஆணின் மனத்தையும் அது ஆட்டத்தான் ஆட்டி விட்டது!" என்று கூறிய சுந்தரம் சுற்றுமுற்றும் ஒரு தடவை பார்த்து விட்டுச் சட்டைப் பையிலிருந்து இரண்டு கடிதங்களை வெளியே எடுத்தான். அவற்றில் ஒன்றைப் பிரித்துப் பார்த்துத் திரும்பிப் பைக்குள்ளேயே வைத்துக் கொண்டு மற்றொன்றை மாலாவிடம் நீட்டினான்.

"என்ன இது?"

"படித்துப் பாரேன்." அவன் அசட்டுச் சிரிப்புடன் கடிதத்தை அவள் கையில் திணித்தான்.

மாலா ஒன்றும் விளங்காமல் அதைப் பிரித்துப் பார்த்தாள். அதில் மொட்டையாகச் சில வாக்கியங்களே காணப்பட்டன. பெயர் கையொப்பம் கூட இடப்படவில்லை. எனினும் அவள் அதைப் படித்தாள்:

"நான் ஒரு முட்டாள்! பெண்களின் மனத்தைப் புரிந்து கொள்ளத் தெரியாத அசடு! அன்று நீ அவ்வளவு வெளிப்படையாகப் பேசியும் உன்னை நான் புரிந்துகொள்ளவில்லையே! ஏன், அந்தக் கடிதத்தின் மூலம் உன் மனத்தைக் கோடி காட்டியிராவிட்டால் இன்னுங்கூட எனக்குப் புரிந்திராது. என்ன இருந்தாலும் பெண்கள் கெட்டிக்காரிகள் தான்! துணிச்சல்காரிகள்தான்! சரி, உன் மனம் எனக்கு விளங்கி விட்டது. என் மனம்? அதை இந்தக் கடிதத்தைப் படித்ததுமே புரிந்து கொண்டிருப்பாயே! என்னைப்போன்ற அசடா நீ?"

"இதெல்லாம் என்ன?" என்று திடுக்கிட்டுக் கேட்டாள் மாலா.

சுந்தரம் பல்லை இளித்துக் கொண்டே, "உன் கடிதத்துக்குப் பதில்" என்றான்.

"என் கடிதமா?"

"ஆமாம்; 'காதலும் கலியாணமும்' புத்தகத்தின் கடைசிப் பக்கத்தில் வைத்திருந்தாயே, அந்தக் கடிதம்."

"ஏது? காதல் பைத்தியம் உங்கள் கண்களையே குருடாக்கி விட்டதுபோலிருக்கிறதே! அது உங்களுக்கு அந்தப் பெண் தங்கம் எழுதிய கடிதம், அத்தான்;

கான் எழுதியதில்லை!" சுந்தரத்தை மாட்டவேண்டிய சமயம் வந்து விட்டதென்று மாலா தயாரானாள்.

"என்ன? என்ன சொன்னாய்? தங்கம் எழுதிய கடிதமா?" சுந்தரம் திகிலோடு சட்டைப் பையில் வைத்துக் கொண்ட கடிதத்தை எடுத்துப் பிரித்தான். பிறகு சிரித்துக்கொண்டே, "ஓ! விளையாடுகிறாயா?" என்றான்.

"விளையாட்டா? என்ன உளறுகிறீர்கள்?" என்றாள் மாலா.

"உளறவில்லை மாலா! இதோ, நீயே பார்த்துக் கொள்ளேன்!"

அவள் அந்தக் கடிதத்தை அவனிடமிருந்து பிடுங்கிப் பார்த்தாள். பார்த்தாளோ இல்லையோ, கையிலிருந்த இரண்டு கடிதங்களையும் தூர வீசிவிட்டு, குடத்தைத் தூக்கிக் கொண்டு ஒரே ஓட்டமாக ஓடி விட்டாள்! ஆம், அவளை அறியாமலே அவள் மனம் தன்னைக் காட்டிக் கொண்டு விட்டது! ஆலோசித்து ஆலோசித்து, காதல் சுவை ததும்ப அழகாக ஒரு கடிதத்தைத் தங்கம் எழுதியது போல் எழுதி விட்டுக் கடைசியில் கையொப்பம் இடும்போது தன்னை மறந்து தன் கையொப்பத்தையே போட்டுவிட்டாள் மாலா!

இதன் பிறகு இரண்டு மூன்று நாட்கள் அவள் சுந்தரத்தின் கண்களிலே படவில்லை. தினம் இரண்டு தடவைகள், "அத்தை! அத்தை!" என்று அவன் வீட்டுக்கு ஓடிவரும் அந்தப் புள்ளிமான் அப்பக்கமே தலைகாட்டவில்லை. சுந்தரத்துக்கு இப்பொழுது அவள் செய்ய முயன்ற தந்திரமும் தெரிந்து விட்டது; அவள் உள்ளமும் தெரிந்து விட்டது. 'பாவம்! வெட்கம் போலும்! ஆண் பிள்ளையான நமக்கே இவ்வளவு வெட்கம் இருக்கையில் அவளுக்கு இராதா, என்ன?' என்று அவன் நினைத்துக் கொண்டான்.

இருந்தாலும் அவளை மீண்டும் சந்திக்க வேண்டும் என்ற ஆர்வம் மட்டும் அவனிடத்தில் வளர்ந்துகொண்டே வந்தது. முன்போல் இருந்திருந்தால் அவனே அவள் வீட்டுக்குப் போயிருப்பான். அவளைக் கூப்பிட்டு வைத்துப் பேசியிருப்பான்; வம்புக்கு இழுத்திருப்பான். ஆனால் இப்பொழுது அவனுக்கும் அங்கே போவதற்கு வெட்கமாக இருந்தது.

நான்காவது நாள் காலை எட்டு மணியிருக்கும். சுந்தரம் பலகாரம் சாப்பிட்டு விட்டு வழக்கம்போல் மாடியில் புத்தகம் படித்துக் கொண்டிருந்தான். மரகதத்தம்மாள் தோட்டத்தில் இருந்தாள். புஷ்பவனம் பிள்ளை சச்சிதானந்தத்தின் வீட்டுக்குப் போயிருந்தார். இந்த 'அபாயமான' சமயத்தில் மாலாவின் குரல் கீழே கேட்டது! "அத்தை! அத்தை!"

சுந்தரம் துள்ளி எழுந்து கீழே பாய்ந்தான். ரேழியைக் கடந்து முற்றத்தில் நுழைந்து கொண்டிருந்த மாலா, அவன் தட-தடவென்று கீழே இறங்கி வந்த சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்து விட்டு வெட்கம் மேலிடக் கொல்லைக்கு ஓட எத்தனித்தாள். ஆனால் சுந்தரம் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து அவளுடைய தாவணி நுனியைப் பிடித்துக் கொண்டு விட்டான்.

"ஐயோ! விட்டு விடுங்கள். அத்தை பார்த்துவிடப் போகிறாளே!" என்று பதறினாள் மாலா.

துணியை விட்டு விட்டு, "உன்னோடு பேச வேண்டும். மாடிக்கு வா சிறிது நேரம்" என்றான் அவன்.

"ம்ஹூம். மாட்டேன்" என்று அவள் குழைந்தாள்.

"மரியாதையாக வருகிறாயா, அம்மாவிடம் நீ எழுதிய காதல் கடிதத்தைப் படித்துக் காட்டி விடட்டுமா?"

"வேண்டாம். வேண்டாம்."

"அப்படியானால் வா."

"அத்தை வந்து விடுவார்களே?"

"வந்தால் என்ன? அடேயப்பா! ரொம்பத்தான் பயப்படுகிறாயே! இதற்குமுன் நீ மாடிக்கு வந்து என்னுடன் பேசிக் கொண்டிருந்ததே இல்லையோ?"

"அது முன்னால். இப்பொழுது......?" அவள் தலையைத் தாழ்த்திக் கொண்டாள்.

"சரி! மாடிக்கு வரப் போகிறாயா? அல்லது இங்கேயே பேச ஆரம்பித்து விடட்டுமா?"

"நீங்கள் திடீரென்று மிகவும் பொல்லாதவராக மாறி விட்டீர்கள்!"

''சுந்தரம் அவள் கையைப் பிடித்துக் கரகர வென்று மாடிக்கு இழுத்துச் சென்றான். நாற்காலியைஇழுத்துப்போட்டு உட்கார்த்தினான். அலமாரியிலிருந்து ஒரு புத்தகத்தை எடுத்து விரித்து அவள் கையில் திணித்தான். தானும் ஒரு புத்தகத்தை எடுத்து விரித்துக் கொண்டு கட்டிலில் அமர்ந்தான். பிறகு சிரித்தபடியே, ''நாம் இப்பொழுது புத்தகம் படித்துக் கொண்டிருக்கிறோம், தெரிகிறதா?'' என்றான்.

மாலா தன் தலையை நிமிர்த்தி அவனை நோக்கி ஒரு முறுவலைச் சிந்திவிட்டு மீண்டும் தலையைக் குனிந்து கொண்டாள்.

சுந்தரம் பேச ஆரம்பித்தான்: ''ஆமாம், அன்று என்ன அப்படி ஓடி விட்டாய்?''

மாலா ஒன்றும் சொல்லவில்லை. குனிந்த தலையை நிமிர்த்தாமல் தன் கால் கட்டை விரலால் தரையில் கோலம் வரைந்து கொண்டிருந்தாள்.

''சொல்லேன். வெட்கமா? பயமா? அல்லது......?'' அவன் அவள் முகத்தை நிமிர்த்தினான்.

அவள் அவன் கையை மெதுவாக விலக்கி விட்டு, ''என்னை மன்னித்து விடுங்கள். நான் ஏதோ விளையாட்டுப் போக்காய் செய்து விட்டேன்'' என்றாள்.

''விளையாட்டோ,விபரீதமோ? இந்தக் குழந்தை மாலாவுக்குள்ளே ஒளிந்து கொண்டிருக்கும் பெரிய மாலாவை காட்டிக் கொடுத்து விட்டாய்!''

''ஐயய்யோ! அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை. நீங்கள் என்னைத் தவறாக......''

''தவறொன்றும் இல்லை, மாலா: சரியாகத்தான் புரிந்து கொண்டிருக்கிறேன். சொல், நீ என்னை விரும்பவில்லையா?''

''அம்மாடியோ! இந்த ஆண் பிள்ளைகளுக்கு எப்படித்தான் இப்படி வெளிப்படையாகக் கேட்கத் தோன்றுகிறதோ?''

''அப்பாடியோ! இந்தப் பெண் பிள்ளைகளுக்கு எப்படித்தான் இப்படிபெல்லாம்வெளிப்படையாகத் தங்கள் மனத்தில் இருப்பதை எழுதத் தோன்றுகிறதோ?''

''காதல் உங்களைப் போக்கிரியாக்கி விட்டது, அத்தான்; படுபோக்கிரியாக்கி விட்டது!''

''ஏன்? உன்னைக்கூடத்தான் அது மாற்றிவிட்டது! இல்லாவிட்டால் எங்கிருந்தம்மா வந்தது உனக்கு இத்தனை வெட்கமும் சங்கோசமும்?''



பிரபல பாங்கரும் கன்னிவாடி மிராசுதாருமான திரு ஆர். ராம்ஜிதாஸ் அய்யரின் ஷஷ்டியப்த பூர்த்தி மகோத்சவம் சென்னை பூந்தமல்லி நெடுஞ் சாலையிலுள்ள ''ஜூல்வில்லா'' என்னும் அவருடைய பங்களாவில் அவருடைய புதல்வர்களால் வெகு விமரிசையாக சென்ற 6-5-59ல் கொண்டாடப்பட்டது. அவ்வைபவத்தை யொட்டிக் காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் திரு ராம்ஜிதாஸ் தம்பதிகளுக்கு ஆசிச் செய்தி யனுப்பி அனுக்ரஹித்தனர். ஏராளமான நண்பர்களும் உறவினர்களும் பிரபலஸ்தர்களும் இந்த வைபவத்திற்கு வந்திருந்து சிறப்பித்தனர்.

சிறிது நேரம் இருவரும் ஒருவர் கண்களை மற்றவர் பருகினர்; பிறகு ஒரே சமயத்தில் 'களுக்'கென்று சிரித்தனர்.

மூன்று நாட்களுக்கு முன் முளைவிட்ட காதல் செடி இன்று இரு தளிர்களையும் விட்டுவிட்டது. பிறகு அது மேலும் மேலும் இலை விட்டது; வளர்ந்தது.

இப்படி வளர்ந்த காதல் கனிந்து பலன் தரும் காலம் நெருங்கி விட்டதென்றால் எந்தப் பெண்ணின் மனம்தான் மகிழ்ச்சியினால் நிறைவு பெறாது?

இது மாலாவின் மனநிலை. ஆனால் மரகதத்தம்மாளின் மனநிலை என்ன?

அவளும் மாலாவைப்போல் ஏறக்குறைய மகிழ்ச்சிக் கடலில்தான் மூழ்கியிருந்தாள். தன் மகனும் மாலாவும் காதல் கொண்டிருப்பார்கள் என்று அவள் சந்தேகித்ததுகூட இல்லை. சில சமயம் மாலாவைப் போன்ற 'சுட்டி' யான பெண்தான் தனக்கு மருமகளாக வாய்க்க வேண்டும் என்று அவள் எண்ணியதுண்டு. ஆயினும் அப்பொழுதுகூட மாலாவைக் கையிலிருக்கும் வெண்ணெயாக அவள் கருதியது இடையாது. ஆகையால் இன்று அவர்கள் சந்திப்பை அறிந்து, கையும் களவுமாகப் பிடிக்க வேண்டுமென்றோ, தன் சந்தேகத்தை உறுதி செய்து கொள்ள வேண்டுமென்றோ, அவள் இந்த வேளை கெட்ட வேளையில் ஆற்றுக்கு வரவில்லை. மாலையில் விருந்தை அமைத்து வருமாறு தன் கணவரிடம் கூறியிருந்தாள்.

அவள் வந்தால் சிறிது நேரம் பேசிக் கொண்டிருக்க வேண்டியிருக்கும்; பொழுது இருட்டி விடும்; பிறகு தண்ணீர் கொண்டுவர முடியாமற் போனாலும் போய்விடும் என்றே முன்னதாக வந்தாள். உண்மையிலேயே சுந்தரம் ஆற்றுக்கு வந்தது கூட அவளுக்குத் தெரியாது. அவன் வீட்டில் இருப்பதாகத்தான் நினைத்துக் கொண்டிருந்தாள். எனவே எதிர்பாராதபடி அவர்களை இங்கே ஒன்றாகப் பார்த்ததும் அவளுக்கு முதலில் அதிர்ச்சிதான் உண்டாயிற்று. ஆனால் கூடவே சந்தோஷமும் அவளுக்கு ஏற்பட்டது.

ஆம்; மகனுக்குவேலைகூட ஆகிவிட்டது; கலியாணத்தை விரைவில் முடித்துவிட வேண்டும் என்ற எண்ணம் அவளுக்குத் தோன்றிய அன்றே, தனக்குப் பிடித்தமான பெண் கைக்குள் இருப்பதும் தெரிந்துவிட்டால் ஒரு தாயின் மனம் குதூகலிக்காமல் விசனிக்கவா செய்யும்?

மாலா-சுந்தரம் காதல் விஷயம் அவளுக்கு மகிழ்ச்சியை அளித்ததோடு பல் வேறு சிந்தனைகளையும் கிளப்பி விட்டது. சுந்தரம் அவளுடைய ஒரே மகன். ஆகையால் அவன் திருமணந்தான் தங்கள் வீட்டில் நிகழும் ஒரே பெரிய விசேஷமாக இருக்கும். அதை ஊரே மெச்சும்படி எப்படி விமரிசையாக நடத்துவது என்பதைச் சிந்திப்பதில் ஈடுபட்டாள்.

சிந்தனை மனிதரைத் தம்மை மறக்கச் செய்துவிடும் என்பது எவ்வளவு உண்மை! சிந்தனையில் மூழ்கியவாறு வந்து கொண்டிருந்த மரகதத்தம்மாளும் மாலாவும் தெற்குத் தெருவைத் தாண்டி நடுத்தெருவில் நுழைந்தபோதுதான் சுய நினைவு பெற்றனர். அதுவும் எதிரே தண்ணீர் எடுக்கப் போய்க் கொண்டிருந்த நடுத் தெருக்காரி ஒருத்தி, "எங்கே மரகதத்தம்மா, தண்ணிக் குடத்தோட நடுத் தெருவுக்குக் கிளம்பிட்டீங்க?" என்று கேட்டபோதுதான்!

இருவரும் திடுக்கிட்டு நின்றனர். மாலா சிரித்தாள். "என்ன அத்தை? நான்தான் கவனமில்லாமல் எங்கோ நினைவாக வந்துட்டேன்னு, நீங்ககூட......"

மரகதத்தம்மாள் சாதுரியமாக நிலைமையைச் சமாளித்தாள். "கவனம் இல்லாம ஒண்ணும் இல்லே, மாலா. தண்ணிகூடக் கொண்டாந்தாச்சு; சமையலும் முடிஞ்சு போச்சு. வீட்டிலே சும்மாத்தானே இருக்கணும்; விருந்தைப் பார்த்துட்டு வந்துடலாமேன்னுதான் வந்தேன்" என்றாள்.

"அது சரிதான், அத்தை. ஆனால் அதுக்குத் தண்ணிக் குடத்தோடயே நேரா வந்துட்டீங்களே!"

"அதுவும் வேணுமின்னுதான் அப்படியே வந்தேன், மாலா. சுமங்கலி நிறை குடத்தோட ஒருத்தர் வீட்டுக்கு வந்தா, அந்த வீட்டிலே கலியாணம் வரும் என்பாங்க; தெரியாது உனக்கு?" மரகதத்தம்மாள் மாலாவை விஷமமாகப் பார்த்துச் சிரித்தாள்.

மாலாவின் முகம் வெட்கத்தால் குங்குமமாகச் சிவந்தது! (தொடரும்)



கையிலிருந்த மூக்குக் கண்ணாடியைத் துடைத்துக் காதில் மாட்டிக்கொண்டு, சாளரத்துக்குக் கீழே விழுந்துகிடந்த செய்தித் தாளை எடுத்துப் பிரித்தார் சிதம்பரம்.

"இந்தக் கதையைக் கேட்டீர்களா?" என்று அங்கலாய்த்துக் கொண்டே அவரை நோக்கி வந்தாள் அவருடைய மனைவி சிவகாமி.

"ஊர்க் கதைகளையெல்லாம் கேட்டுக் கொண்டிருக்க உனக்கு நான்தானா கிடைத்தேன்? போய் வேலையைப் பார்!"

"இது ஒன்றும் ஊர்க் கதை இல்லை; உங்கள் வீட்டுக் கதைதான்!"

"அது என்ன கதை?"

"எல்லாம் உங்கள் சிகாமணியின் கதை தான்!"

"அவன் எங்கே இப்பொழுது சிகாமணியாயிருக்கிறான்? அவன்தான் 'முடிமணி'யாய்ப் போய்விட்டானே!"

"முடிமணியா! அது என்ன மணி?"

"அதை வெளியே சொல்லும் அளவுக்கு என்னை இன்னும் வெட்கம் விட்டுவிட்டுப் போய்விடவில்லை; அவனுடைய தமிழ்ப் பற்று அத்துடனாவது நின்றதே, அதைச் சொல்லு!"

"அதுதான் இல்லை! அந்த முந்திரித் தோட்டம் முத்தையாவின் மகள் முல்லைக்கு, 'உனக்கேற்ற குட்டிச் சுவர் நான்; எனக்கேற்ற கழுதை நீ!' என்று இவன் காதற்கடிதம் எழுதுகிறானாம், காதற் கடிதம்!"

"சரிதான்; காதற் கடிதத்திலும் 'கருத்துக் குவிய'லைக் கொட்டிக் கலக்க ஆரம்பித்துவிட்டான் போலிருக்கிறது!"

"கருத்துக் குவியலோ, கண்ணராவிக் குவியலோ! நமக்கு இருப்பவன் இவன் ஒருவன்தானே? காலாகாலத்தில் இவனுக்கு ஒரு கல்யாணத்தைச் செய்து விட்டு மறு வேலை பாருங்கள்!" என்றாள் சிவகாமி.

"உத்தரவு!" என்றார் சிதம்பரம்.

***

சிவதானபுரத்தைச் சேர்ந்த சிதம்பரம் எதையுமே வேடிக்கையாக எடுத்துக் கொள்பவர்; இன்பத்தில் துன்பத்தையும், துன்பத்தில் இன்பத்தையும் காண்பது அவருடைய இயல்பு.

இந்த இயல்பு சிவகாமிக்கும் பிடித்தே இருந்தது — கல்யாணத்துக்கு முன்னால் காதலை வளர்த்துக் கல்யாணத்துக்குப் பின்னால் காதலைக் கொல்லாமல் இருந்ததால்!

ஆனால் சிகாமணிக்கோ இதெல்லாம் பிடிப்பதில்லை. அவன் எடுத்ததற்கெல்லாம் சிந்தித்தான், சிந்தித்தான், சிந்தித்துக் கொண்டே இருந்தான். இந்தச் சிந்தனையின் காரணமாகக் கலாசாலையில் காலடி எடுத்துவைத்ததும் அவன் முதன் முதலாகக் கண்டு பிடித்த உண்மை, 'அப்பா ஒரு முட்டாள்; அம்மா ஓர் அசடு!' என்பதாகும்.

அந்த முட்டாளும் அசடும் சேர்ந்து தனக்குக் கல்யாணம் செய்வதை அவன் விரும்புவானா? விரும்பினால் 'பகுத்தறிவு மிக்க அவன் பள்ளி நண்பர்கள்' அவனைப் பற்றி என்ன நினைப்பார்கள்? அவர்களை வெள்ளிப் பாத்திரங்களென்றும், அந்த வெள்ளிப் பாத்திரங்களின்மேல் படியும் அறியாமை என்னும் அழுக்கை எளிதில் துடைத்து விடலாமென்றும், அவர்களுடைய பெற்றோர் பித்தளைப் பாத்திரங்களென்றும், அந்தப் பித்தளைப் பாத்திரங்களின்மேல் ஏறியிருக்கும் அறியாமை என்னும் களிம்பை அகற்றுவது அவ்வளவு எளிதல்லவென்றும், அந்தப் பணியை மேற்கொள்ளும் இளைஞர் சமுதாயம் அதைப் படிப்படியாகத்தான் அகற்ற முடியுமென்றும் அடிக்கடி விளக்கி வரும் அரும் பெரும் தலைவர் ஆசிரியர் அறிவழகனார்தான் அவனைப்பற்றி என்ன நினைப்பார்?

சிந்தித்தான், சிந்தித்தான், சிந்தித்துக் கொண்டே இருந்தான் சிகாமணி— இல்லை, முடிமணி!

"இன்னும் என்ன யோசனை? நான் தான் அந்த முல்லையையே உனக்குக் கல்யாணம் செய்து வைத்துவிடுகிறேன் என்கிறேனே?" என்றார் சிதம்பரம்.

"கல்யாணம், கல்யாணம் என்று சொல்லாதீர்கள், அப்பா! காதில் ஈயத்






**பழைமை புகன்றார் தந்தை ; புதுமை புகன்றார் தலைவர். இரண்டையும்கேட்ட இளவலோ....**

தைக் காய்ச்சி ஊற்றுவது போலிருக்கிறது !''

'' சரி, தேனைப் பாயும் திருமணம்தான் செய்து கொள்ளேன் !''

'' திருமணம் என்றால் ' திருந்திய திருமணம் ' தான் செய்து கொள்வேன் ; சம்மதமா ?''

'' அது என்ன திருமணம் ?''

'' பழைய சடங்குகளையும் பழைய சம்பிரதாயங்களையும் உடைத்தெறியும் திருமணமாம் !''

'' அப்படியென்றால் புதிய சடங்குகளையும் புதிய சம்பிரதாயங்களையும் உருவாக்கும் திருமணமா ?''

'' சிக்கலான கேள்வி ; சிந்திக்க வேண்டிய கேள்வி !''

சிகாமணி உட்கார்ந்தான்.

'' சிந்திக்க ஆரம்பித்து விட்டாயா, என்ன?'' என்றார் சிதம்பரம், திடுக்கிட்டு.

'' ஆம்; சிந்திக்கிறேன், சிந்திக்கிறேன், சிந்தித்துக் கொண்டே இருக்கிறேன்!'' என்றான் சிகாமணி.

'' நானும் போகிறேன், போகிறேன், போய்க் கொண்டே இருக்கிறேன் !'' என்று சொல்லிக்கொண்டே குடையை எடுத்துக்கொண்டு வெளியே கிளம்பினார் சிதம்பரம்.

'' எங்கே போகிறீர்கள் ?'' என்றான் சிகாமணி, விசுக்கென்று எழுந்து.

'' புரோகிதர் வீட்டுக்கு !''

'' புரோகிதர் வீட்டுக்கா ! திருந்திய திருமணத்தில் அவருக்கு ஏது இடம் ? ஆசிரியர் அறிவழகனார் வீட்டுக்கு வேண்டுமானால் போய்விட்டு வாருங்கள்!''

'' ஏன், அவரே இப்பொழுது புரோகிதராகிவிட்டாரா ?''

'' இது சிக்கலான கேள்வி ; சிந்திக்க வேண்டிய கேள்வி !''

சிகாமணி உட்கார்ந்தான்.

'' சிந்திக்க ஆரம்பித்து விட்டாயா, என்ன ?'' என்றார் சிதம்பரம், மறுபடியும் திடுக்கிட்டு !

'' ஆம் ; சிந்திக்கிறேன், சிந்திக்கிறேன், சிந்தித்துக் கொண்டே இருக்கிறேன் !'' என்றான் சிகாமணி.

'' ஆஆஆ !'' என்றார் சிதம்பரம் தமது கை விரல்களைச் சொடுக்கிக் கொண்டே.

'' என்ன அப்பா, அது ?'' என்றான் அவன், சிந்தனையைச் சற்றே கலைத்து !

'' ஒன்றுமில்லை ; கொட்டாவி விடுகிறேன், விடுகிறேன், விட்டுக்கொண்டே இருக்கிறேன் !''

'' ஏன் கொட்டாவி விட வேண்டும் ? ஆசிரியர் அறிவழகனாரை வேண்டுமானால் நானே பார்த்துக்கொள்கிறேன்; அதற்குமேல் ஆகவேண்டிய காரியங்களை நீங்கள் கவனிக்கலாமே?''

'' சரி, கவனிக்கிறேன் !'' என்று சொல்லிக்கொண்டே கிளம்பினார் சிதம்பரம்.

'' எங்கே போகிறீர்கள் ?'' என்றான் சிகாமணி, மறுபடியும் விசுக்கென்று எழுந்து.

'' தாலி வாங்க !''

'' வேண்டேன் தாலி ; பெண்களுக்கு அது வேலி !''

'' வேறு என்னதான் செய்யவேண்டும் ? அதையாவது சொல்லேன் !''

'' சொல்கிறேன் அப்பா, சொல்கிறேன். என்னுடைய திருமணத்துக்கு மிகவும் முக்கியமாகவேண்டியது மைக் !''



"மைக் என்று சொல்லாதே; 'ஒலி பரப்பும் கருவி' என்று சொல்லு !"

"வரவேற்கிறேன் அப்பா, வரவேற்கிறேன்; தமிழில் உங்களுக்குள்ள தணியாத ஆர்வத்தை நான் தலைவணங்கி வரவேற்கிறேன். ஒலிபரப்பும் கருவிக்கு அடுத்தாற்போல் என்னுடைய திருமணத்துக்கு வேண்டியது திரைப்பட இசைத் தட்டுக்கள் !"



"ஐயோ, அது வேண்டாண்டா !"

"ஏன், அப்பா ?"

"அந்த இசைத் தட்டால்தான் நிலவொளி வீட்டுத் திருமணம் நின்றுவிட்டதாம் !"

"இசைத் தட்டுக்கும் நிலவொளி வீட்டுத் திருமணம் நின்று விட்டதற்கும் என்ன சம்பந்தம்?"

"தலைவிக்கு மாலையிடத் தலைவன் எழுந்த போது, 'நெனெச்சது ஒண்ணு, நடந்தது ஒண்ணு, அதனாலே முழிக்குதே அம்மாப் பொண்ணு !' என்ற இசைத் தட்டை ஒலி பரப்பாளர் வைத்து விட்டாராம்; அதைக் கேட்டதும் தலைவி திடுக்கிட்டு விழிக்க, ஐயமுற்ற தலைவன் பைய நழுவிவிட்டானாம் !"

"அறிந்தேன் உண்மையை; அதற்காகக் கலங்க மாட்டான் இந்தக் காளை ! எந்தையே, என் அருமைத் தந்தையே ! எங்கள் சிந்தனை செயல்படும்போது இம் மாதிரியான சில பல தவறுகள் நேருவது ஏராளம், ஏராளம்! அந்தத் தவறுகளைத் தாங்குவதற்கு நாங்கள் கொண்டுள்ள கடமை, கண்ணியம், கட்டுப்பாடு தாராளம், தாராளம் !"

இந்தச் சமயத்தில் சிதம்பரம் கை தட்ட, "என்னப்பா, இது? ஏன் கை தட்டுகிறீர்கள் ? இப்பொழுது நான் மக்கள் மன்றத்திலா உரையாடிக்கொண்டிருக்கிறேன் ?" என்றான் சிகாமணி.

"இல்லையா, இப்பொழுது நீ மக்கள் மன்றத்தில் உரையாடவில்லையா ?" என்றார் சிதம்பரம், ஏதும் அறியாதவர் போல.

"இல்லை, அப்பா ! என்னுடைய உணர்ச்சியில் ஒரு சொட்டு இங்கே உதிர்ந்துவிட்டது; என்னுடைய சிந்தனையில் ஒரு துளி இங்கே சிதறிவிட்டது; அவ்வளவுதான் !"

"சரி, அப்புறம் ?"

"அடுத்தாற் போல் என்னுடைய திருமணப் பந்தலில் நீங்கள் அவசியம் கட்ட வேண்டும், கறுப்புத் துணி !"

"அத்துடன் சங்கும் ஊதி, திருவாசகமும் பாடவேண்டுமா ?"

"ஒரு வாசகமும் வேண்டாம்; இடையிடையே கொட்டு மேளம் முழங்கட்டும் — அது எங்களுக்கு உடன்பாடே !"

"இவ்வளவுதானா, இன்னும் ஏதாவது உடன்பாடு உண்டா ?"

"உண்டு; இரண்டு ரோஜாப்பூமாலைகள் !"

"ரோஜாப்பூ மாலை என்று சொல்லாதே; இரோசாப்பூ மாலை என்று சொல்லு !"

"வரவேற்கிறேன் அப்பா, வரவேற்கிறேன். தமிழில் உங்களுக்குள்ள தணியாத ஆர்வத்தை நான் தலை வணங்கி வரவேற்கிறேன். ஆனால் இரண்டு இரோசாப்பூ மாலைகள் மட்டும் போதாது, என் திருமண விழாவுக்கு ! இன்னும் சில பல மாலைகள் வேண்டும், வாழ்வு வளம் பெற வாழ்த்துரை வழங்குவோருக்கு !"

"ஐயோ, இது மூடநம்பிக்கையாச்சே ! பிறருடைய வாழ்த்துரையில் உன்னுடைய வாழ்வு வளம் பெறும் என்று நீ நம்பலாமா? அன்னையும் பிதாவும், ஆன்றோரும் சான்றோரும் செய்யும் 'ஆசீர்வாத'த்தை நம்பாத நீ, அவர்களுடைய 'வாழ்த்துரை'யை மட்டும் நம்பலாமா? பகுத்தறிவுக்குப் பாதகமாச்சே ! ஏன் இந்த வார்த்தைப் புரட்சி? இதனால் ஏற்படுமா, வாழ்க்கைப் புரட்சி ?"

"சிக்கலான கேள்வி; சிந்திக்க வேண்டிய கேள்வி; சிந்தித்தாலும் என் சிற்றறிவுக்கு விடை கிடைக்காத கேள்வி ! வருகிறேன் அப்பா, வருகிறேன் !"

சிகாமணி கிளம்பினான்.

"எங்கே போகிறாய் குழந்தாய், எங்கே போகிறாய் ?"

"பேரறிவு படைத்த பெருமகனாரின் உறைவிடத்துக்கு !"

"நன்று, சென்று வருக !"

சிதம்பரம் திரும்பினார்.

அவர் திரும்பினாரோ இல்லையோ, "ரொம்ப அழகாய்த்தான் இருக்கிறது ! அவன் ஏதோ தத்துப் பித்து என்று உளறுகிறான் என்பதற்காக நீங்களுமா அவனுடன் சேர்ந்து கொண்டு உளறுவது? கூப்பிடுங்கள், அவனை !" என்றாள் சிவகாமி.

"குழந்தாய், அன்னை உன்னை அழைக்கிறாள் !" என்றார் சிதம்பரம்.

சிகாமணி வந்தான்; "தாயே, தலை வணங்குகின்றேன்!" என்றான்.

"என்னடா இது, நாடகத்திலே வேஷம் போடும் கூத்தாடிப் பயல்கள் மாதிரி? பின்னேயா, லட்சணமாப் பேசேன்!"

"வருந்துகின்றேன் அன்னையே, வருந்துகின்றேன்; செந்தமிழின் சுவை அறியாச் சிற்றம் குறித்து வருந்துகின்றேன்!"

"வருந்தற்க மகனே, வருந்தற்க!" என்று அவனைத் தேற்றினார் சிதம்பரம்.

"இதிலே ஒண்ணும் குறைச்சல் இல்லே, முதல்லே நீங்கள் போய் முகூர்த்தத்துக்கு நாள் பார்த்து வாருங்கள்!" என்றாள் சிவகாமி.

"நாள் என் செய்யும், கோள் என் செய்யும்?"

"கோளோ தேளோ, எனக்கு வேண்டியது நாள்!" என்றாள் சிவகாமி, அழுத்தந் திருத்தமாக.

"அப்பா வெள்ளிப் பாத்திரமே, இந்தப் பித்தனைப் பாத்திரத்தைத் திருப்தி செய்வது எப்படி?"

"அதற்கும் எங்களிடம் திட்டம் இருக்கிறது; அந்தத் திட்டத்தின் முதல் விதி நாளைக் குறித்தாலும் கோளைக் குறிக்கக் கூடாது என்பதுதான்!"

"அப்படியே குறித்தாலும் அதைத் திருமண அழைப்பிதழில் குறிக்கக் கூடாது; அதுதானே உங்கள் குறிக்கோள்?"

"ஆம், ஆம்!"

"அருமையான திட்டம்; அந்தத் திட்டத்தில் அடியேனும் ஒரு திருத்தம் கொண்டு வரலாமோ?"

"என்ன திருத்தம், எந்தையே?"

"நான் பார்க்கும்போது ஒரே நாளில் இரண்டு முகூர்த்தங்கள் உள்ள நாளாகப் பார்த்துவிட வேண்டியது. அப்படிப் பார்க்கும்போது ஒன்று 1½-3 கும்ப லக்கினம் என்று இருந்தால், இன்னொன்று 9-10½ சிம்ம லக்கினம் என்று இருக்கும். அறியாமை மிக்க அன்னையின் திருப்திக்காக 1½-3 முகூர்த்தத்தில் யாருக்கும் தெரியாமல் தாலியைக் கட்டிவிட வேண்டியது; அறிவு மிக்க ஆசிரியர் பெருமகனாரின் திருப்திக்காக 9-10½ முகூர்த்தத்தில் முகூர்த்தம் என்று சொல்லாமல் மாலை மாற்றிக் கொண்டு விட வேண்டியது. இதுவே திருத்தம், என் இன்னுயிர் இளவலே!"



"தேவையில்லாத திருத்தம்; எங்கள் திறமைக்கு மாசு கற்பிக்கும் திருத்தம்! எந்தையே, இது எங்கள் திட்டத்தின் இரண்டாவது விதி; ஏற்கெனவே எங்களால் திருத்தம் கொண்டு வரப்பட்டு, எங்கள் தலைவரால் ஏற்றுக்கொள்ளப்பட்ட விதி!"

"என்னே என் அறியாமை! இதற்குத்தான் பகுத்தறிவு வேண்டும்போலும்!"

"உங்களைப் போன்றவர்கள் அதைப் படிப்படியாக அடைய வேண்டுமென்பதற்காகவே இந்த அந்தரங்க விதி!"

"விதியோ, சதியோ! நீங்கள் போய் வேலையைப் பாருங்கள்!" என்றாள் சிவகாமி.

அதற்குமேல் சிதம்பரம் அங்கே நிற்கவில்லை; "வாழ்க, திருத்தம்! வாழ்க, சீர்திருத்தம்!" என்று முழங்கிக் கொண்டே புரோகிதரின் வீட்டை நோக்கி நடையைக் கட்டினார்.

***

அன்று மாலை சிந்தனைப் புயலில் சிக்குண்டு வந்த சிகாமணியை நோக்கி, "என்ன தம்பி, என்ன?" என்று வினவினார் அண்ணா அறிவழகனார்.

"திருந்திய திருமணத்தில் ஓர் திடீர் ஐயம்!"

"திடீர் ஐயமா, அது என்ன ஐயம்? தெரிவித்தால் விளக்குகிறேன்!"

இந்தச் சமயத்தில் கையில் விளக்குமாற்றுடன் உள்ளே நுழைந்த வேலைக்காரி, "நான் இருக்கிறப்போ நீங்க ஏன் சாமி, விளக்கணும்? கொஞ்சம் எழுந்திருங்க, நானே விளக்கிட்டுப் போயிடறேன்!" என்றாள்.

'அறிவற்ற மக்கள், ஆட்டுமந்தையொத்த மாக்கள்!' என்று தம்மை மறந்து, தம்முடைய ஆதரவாளர்களை 'விமர்சனம்' செய்தவாறே ஆசிரியர் அறிவழகனார் மாடிக்குச் சென்றார்; சிகாமணி அவரைப் பின் தொடர்ந்தான்.

"என்ன ஐயம், எடுத்தியம்புவாய்!"

"எந்தப் பழைய சடங்குகளையும், எந்தப் பழைய சம்பிரதாயங்களையும் இருந்தாத திருமணத்திலிருந்து நாம் ஒழிக்கப் பார்க்கிறோமோ, அதே சடங்குகளையும் அதே சம்பிரதாயங்களையும் திருந்திய திருமணத்தில் புதிய உருவில் நாம் புகுத்தப் பார்க்கிறோம் என்பது என் தந்தையாரின் கூற்றாயிருக்கிறது.

அந்தக் கூற்றை நான் மறுப்பது எங்ஙனம்?''

"சிக்கலான கேள்வி; சிந்திக்க வேண்டிய கேள்வி!''

"அது மட்டுமல்ல; இருந்திய திருமணத்தில் நீங்கள் இன்று வழங்கும் வாழ்த்துரை, இருந்தாத திருமணத்தில் அன்னையும் பிதாவும், ஆன்றோரும் சான்றோரும் அன்று வழங்கிய ஆசிர்வாதந்தானே? 'ஆசிர்வாத'த்தில் இல்லாத நம்பிக்கை 'வாழ்த்துரை'யில் மட்டும் இருக்கலாமா? ஏன் இந்த வார்த்தைப் புரட்சி? இதனால் ஏற்படுமா, வாழ்க்கைப் புரட்சி?' என்றும் அவர் கடாவுகிறார். அதை நான் எதிர்ப்பது எங்ஙனம்?''

"சிக்கலான கேள்வி; சிந்திக்க வேண்டிய கேள்வி!''

"சிந்தித்தேன்! சிற்றறிவுக்கு எட்டவில்லை; பேரறிவைத் தேடி ஓடி வந்தேன். தங்களுக்கும் அது சிக்கலான கேள்விதானா? தங்களுக்கும் அது சிந்திக்க வேண்டிய கேள்விதானா?''

"ஆம் தம்பி, ஆம்!''

"முடிவு?''

"இந்த முடிவற்ற உலகத்தில் முடிவு காண நான் யார், நீ யார்? நடப்பது நடக்கும்; கிடைப்பது கிடைக்கும். உண்மையை உள்ளது உள்ளபடி உனக்கு மட்டும் சொல்கிறேன், கேள்: கொள்கை எதுவாயிருந்தாலும், கோட்பாடு எதுவாயிருந்தாலும் அதை உருவாக்குவது காலம்: உடைத்தெறிவதும் காலந்தான்! அந்தக் காலத்தையொட்டி நாம் கடைத்தேற வழி கோலுவோம்; முடிவைப் பற்றிய கவலையில்லாமல் 'மூட நம்பிக்கைகள் ஒழிக!' என்று ஒரே மூச்சில் முழங்குவோம், முழங்குவோம், முழங்கிக்கொண்டே இருப்போம்!''

"அங்ஙனம் முழங்குவது சுயமரியாதைக்கு விரோதமில்லையா, தன்மானத்துக்குப் பங்கமில்லையா?''

அவன் குமுறினான்; கொந்தளித்தான்.

"சிக்கலான கேள்வி; சிந்திக்க வேண்டிய கேள்வி!''

அவர் பாடினார்; சொன்னதையே சொல்லிச் சொற்சிலம்பமாடினார்.

"போதும், இந்தப் பல்லவி! வருகிறேன், வணக்கம்!''

'க்க'த்துக்கு ஓர் 'அழுத்தம்' கொடுத்துவிட்டு வெளியே வந்தான் சிகாமணி—இல்லை, முடிமணி!

இனி என்ன?

இந்தக் கேள்வி எழுந்தது அவன் உள்ளத்தில்; நின்றான்.

வீட்டைக் கூட்டிய வேலைக்காரி குட்டையைக் கொண்டு வந்து வெளியே கொட்டினாள்.

அதிலிருந்த ஒரு கரித் துண்டு அவனுடைய கவனத்தைக் கவர்ந்தது. எடுத்தான்; எழுதினான் — அந்தக் கணமே அவன் கண்ட முடிவைத்தான்!

***

மறு நாள்......

சிகாமணி கண்ட முடிவைச் சிதம்பரம் கண்டார்; சிவகாமியும் கண்டாள் — ஏன், ஊர் கண்டது; ஊராரும் கண்டார்கள்.

அது என்ன முடிவு என்கிறீர்களா? — அதுதான் இருந்திய திருமணத்தின் திடீர் முடிவு; ஒருவருக்கும் தெரியாமல் முல்லையை இழுத்துக்கொண்டு முடிமணி ஓடிவிட்ட முடிவு!

இந்த முடிவு தெரிந்ததும், "உங்கள் முடிமணிதான் எங்கள் முல்லையை இழுத்துக்கொண்டு ஓடி விட்டான்!'' என்றாள் பெண்ணைப் பெற்றவள்.

"உங்கள் முல்லைதான் எங்கள் முடிமணியை இழுத்துக் கொண்டு ஓடிவிட்டாள்!'' என்றாள் பிள்ளையைப் பெற்றவள்.

இவர்கள் இருவருக்குமிடையே சிக்கிக் கொண்ட சிதம்பரம் என்ன செய்வார், பாவம்! ஆசிரியர் அறிவழகனாரைச் சந்தித்து, "மூட நம்பிக்கையை ஒழிப்பதற்கு முன்னால் முடிமணியை ஒழித்து விட்டீர்களே, அவன் எங்கே போயிருக்கிறான் என்பதாவது தெரியுமா?'' என்று உசாவினார்.

"அவன் எங்கே போயிருந்தால் என்ன? அறிவில் என்னையும் மிஞ்சி விட்டான் அவன்! அது மட்டுமல்ல; பழைய சடங்குகளையும், பழைய சம்பிரதாயங்களையும் உடைத்தெறிந்ததோடு, புதிய சடங்குகளையும் புதிய சம்பிரதாயங்களையும்கூட உடைத்தெறிந்து விட்டான் அவன்! அதோ பாருங்கள், அவன் எழுப்பியிருக்கும் புதிய கோஷத்தை வழு, புதிய குரலை!'' என்று முழங்கிக் கொண்டே எதிர்வீட்டுச் சுவரைச் சுட்டிக் காட்டினார் அவர்.

சிதம்பரம் பார்த்தார்; படித்தார்:

"இருந்திய திருமணம் வீழ்க; இருட்டுத் திருமணம் வாழ்க!''

அறிவழகனார் அறையலுற்றார்:

"இதையே 'காதல் வாழ்க, களவழி வாழ்க!' என்று 'வள்ளுவன் பாணி'யில் எழுதியிருந்தால் இன்னும் சிறப்பாயிருந்திருக்கும், இல்லையா?''

சிதம்பரம் சிரித்தார்.

"ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று கேட்டார் அறிவழகனார்.

"சிக்கலான கேள்வி; சிந்திக்க வேண்டிய கேள்வி!'' என்றார் சிதம்பரம்.

---

இக்கதையில் வரும் ஒரு சம்பவத்தைத்தான் இவ்வார அட்டைப்படமாகச் சித்திரித்திருக்கிறார் ஓவியர் வினு.

செல்லப்பன் சந்தர்ப்பத்துக்காக ஒரே ஒரு தவறு செய்தான். சந்தர்ப்பமோ, அவனை என்றுமே அதே தவற்றைச் செய்யும்படி விதித்து விட்டது.

# செல்லப்பன்



இழிவான காரியம் செய்கிறோமே என்று எண்ணிச் செல்லப்பன் உருகினான் என்று சொல்ல முடியாது. சிறிது வருந்தினான். அதை விடவும் போலீஸுக்குப் பயந்தான் என்று சொல்லலாம். வேறு எந்த வேலையும் கிடையாமற் போனதால்தான் இந்த வேலையை ஏற்றுக் கொண்டான் அவன். இந்த வேலையைச் செய்து கொண்டே வேறு வேலை விசாரித்துக் கொண்டுதானிருந்தான். விசாரித்தும் வேறு வேலை ஏதும் கிட்டாமற் போகவே, போலீஸுக்குப் பயந்து கொண்டு இந்த வேலையைச் செய்ய வேண்டியிருந்தது.

போலீஸ் பயம் அவசியமே இல்லை என்று தான் அவனுடைய முதலாளி சொன்னார். அடிக்கடி இதைச் சொன்னார். அவருக்கு என்ன? சொல்லலாம். அநுபவசாலி. கடந்த பல ஆண்டுகளாக இதே தொழிலை வெற்றிகரமாகச் செய்து வருகிறார். அவர் பயப்படத் தேவை இல்லை. ஒவ்வொரு மாதமும் ஐந்நூறு ரூபாய்க்கு மேல் லஞ்சம் கொடுக்கிறவர். யாருக்கு அஞ்ச வேண்டும்? செல்லப்பன் நிலை அப்படியா? அவனுக்கு இந்தத் தொழில் புதிது. மேலும் அவன் போலீஸ் என்றால் போலீஸ் என்றே நினைத்துக்கொண்டிருந்தான்.

முன்னால் லாரியில் கையாளாக வேலை பார்த்து வந்தான் செல்லப்பன். கடுமையான வேலை. எப்பொழுதும் லாரியில் சுற்ற வேண்டும். அபூர்வமாகத் தன் வீட்டுத் திண்ணையில் உட்காரும்படி நேர்ந்தாலும், ஓடுகிற லாரியின் ஓசை அவன் காதில் ஒலித்துக் கொண்டிருக்கும். இராப்பகல் நித்திரை கிடையாது. எனவே உட்கார்ந்து தூங்கக் கற்றுக் கொண்டான். நின்று கொண்டும் நடந்து கொண்டும் தூங்கக் கற்றுக் கொண்டான். அவனுக்கு ஒருபெரிய ஆசை. கையைக் காலை நீட்டி, நிம்மதியாக இரண்டு நாட்கள் தூங்க வேண்டும். அதற்குச் சந்தர்ப்பம் கிடைக்க வேண்டுமே என்பது அவனுடைய பிரார்த்தனை.

செல்லப்பன் ஒரு நாள் கனவு கண்டான். சாண் உயரத்தில் ஒரு மெத்தை. வெல்வெட் உறை. அதில் பிச்சிப்பூ கூடை கூடையாய்க் கொட்டப்பட்டிருக்கிறது. காலுக்கும், கைக்கும் இரண்டிரண்டு தலையணைகள். படுத்துத் தூங்குகிறான் அவன். இந்த ஆனந்தக் கனவில் லயித்திருக்கும்போது, சைக்கிள் ஒன்று குறுக்கிட்டதால் டிரைவர் திடீர் 'பிரேக்' போடவும், கண்விழித்த செல்லப்பன் லாரி மதுரை ரோட்டில் போய்க் கொண்டிருப்பதைக் கண்டான்.

# சுந்தர ராமசாமி

மறுநாள் பங்கஜாட்சியிடம் கண்ட கனவைச் சொன்னான். முதலாளி சுந்தர வடிவேலு வீட்டில் வீடு கூட்ட நேரமாகி விட்டது. செல்லப்பன் சொல்லியதற்குப் பதில் சொல்லாமல் அவள் வேலைக்குப் போய் விட்டாள்.

செல்லப்பன் லாரி முதலாளி வீட்டுக்குச் சென்று 'ஷெட்' டைப் பார்த்தபோது அங்கே லாரியைக் காணவில்லை. வரி பாக்கிக்காகக் கோர்ட்டிலிருந்து லாரியைப் பறிமுதல் செய்து விட்டார்களாம். லாரி முதலாளி ஒரு லாரிக்குத்தான் முதலாளி. எனவே செல்லப்பன் வீட்டுக்கு வந்து நிம்மதியாகப் படுத்துத் தூங்கினான்.

மத்தியானம் சோற்றுப் பாத்திரத்துடன் உள்ளே நுழைந்த பங்கஜாட்சி திடுக்கிட்டுப் போய் விட்டாள். அந்த நேரத்தில், அதற்கு முன் தன் கணவனை அவள் வீட்டில் பார்த்ததே கிடையாது.

"இதென்ன இது, அனந்தசயனமா?"

"கனவு பலித்தது" என்றான் செல்லப்பன், சிரித்துக் கொண்டே. மாலையில் வீடு கூட்டச் சென்றபோதும் செல்லப்பன் வீட்டிலேயே இருந்ததைக் கண்டு 'ஏன்?' என்று தூண்டிக் கேட்டபோதுதான் அவளுக்கு விஷயம் தெரிய வந்தது. சிறிது நேரம் அழுதாள். ஆனால் அழுதுகொண்டேயிருக்க நேரமில்லை. வேலைக்குச் செல்லப் பொழுதாகிவிட்டது! சோற்றுப் பாத்திரத்தைச் சுமந்து கொண்டு அவள் போய் விட்டாள்.

செல்லப்பன் ஒவ்வொரு நாளும் காலையில் எழுந்திருந்து மனைவி கொடுக்கும் காப்பிக் கஷாயத்தைக் குடித்துவிட்டுத் தூங்குவான். வெய்யில் ஏறியதும் எழுந்திருந்து காக்கிச் சட்டையை அணிந்து கொள்வான். எண்ணெய் போட்டுத் தலையைப் பின்புறமாக வாரி விட்டுக் கொள்வான். நெற்றியில் ரோஸ் குங்குமப் பொட்டு வைத்துக்கொண்டு வெளியே கிளம்பி விடுவான், வேலை தேடி. இரண்டு வாரங்கள் ஆயின. வேலை ஒன்றும் கிடைக்கவில்லை.

நாலைந்து நாட்கள் வீட்டில் சாப்பிடவில்லை. 'ஓட்டலில் சாப்பிட்டேன்' என்று சொன்னான். 'காசு ஏது?' என்று கேட்டபோது 'அண்ணாச்சி வாங்கிக் கொடுத்தார்' என்றான். 'எந்த அண்ணாச்சி?' என்று அவள் கேட்கவில்லை. முதலாளி வீட்டிலிருந்து கொண்டு வரும் சோறு அவனுக்குக் கண்டு மிஞ்சும்.

மிஞ்சும் சோறு செல்லப்பன் வயிற்றுக்குப் பறுது. செல்லப்பன் வயிறு நிரம்பச் சாப்பிட்டால் மிச்சமே இராது. கொஞ்ச நாட்களாகவே அரை வயிற்றுக்குச் சாப்பிட்டு வந்தான் அவன். அரை வயிறு சாப்பிட்டதால் அவனும் அரை வயிற்றுக்குச் சாப்பிட்டான். அதனால் அவன் உடம்பு மிகவும் பலவீனமடைந்து விட்டது என்று செல்லப்பனுக்குத் தோன்றியது. 'அவள் பாடு படுகிறவள், அவளே சாப்பிடட்டும்' என்று அவன் நினைத்தான். அதனால்தான் பசி வயிற்றைக் கிள்ளுகிறபோதே 'அண்ணாச்சி சாப்பாடு வாங்கிக் கொடுத்தார்' என்று அவன் சொல்லி வந்தான்.

ஆனால் இப்படிச் சொன்ன பிறகு அவனுக்கு விசித்திரமான யோசனை ஒன்று தோன்றியது. அவன் ஓட்டல் வாசலில் நிற்க ஆரம்பித்தான். இப்படி நின்று கொண்டிருந்தால் சில வேளைகளில் 'லக்கி சான்ஸ்' அடிக்கும். தெரிந்த கண்டக்டரோ, டிரைவரோ 'வா' என்று அழைத்தாலும் அழைப்பார்கள்; அழைத்துமிருக்கிறார்கள்.

இப்படி நின்று கொண்டிருக்கும்போதுதான் ஒரு நாள் மருந்துக் கடை முதலாளி 'வா' என்று அழைத்தார். செல்லப்பன் அவர் கடை வாசலில் சென்று நின்றான். 'உள்ளே வா' என்றார். உள்ளே சென்றான். 'இந்தப் பெட்டியை உடை' என்றார். கத்தியையே அவன் கையில் கொடுத்தார்.

பெட்டியின் மேல் 'கண்ணாடிச் சாமான்: கவனம்' என்று எழுதப்பட்டிருந்தது. கவனமாக உடைத்தான். கண்ணாடிச் சாமான்கள் தான் உள்ளே இருந்தன. கண்ணாடிச் சாமான் புட்டி புட்டியாக இருந்தது. புட்டிகளினுள் கன்னங்கரேல் என்று திராவகம் இருந்தது. வைக்கோலை இழுத்து வெளியே தள்ளிவிட்டுப் புட்டிகளைத் தரையில் பரப்பினான் செல்லப்பன்.

முதலாளிக்கு விசாலமான மனசு. இரண்டு சோடா வாங்கி வரச்சொன்னார் செல்லப்பனிடம். வாங்கி வந்தான். அவர் ஒரு கிளாஸ் குடித்தார். செல்லப்பனுக்கும் அரை கிளாஸ் கொடுத்தார். செல்லப்பன் பட்டாளத்திலிருக்கும் போது அருந்தியதுதான். பிறகு இன்று வரை கண்ணில் தட்டுப்படவே இல்லை. அதற்குச் சந்தர்ப்பம் இல்லாமற் போய் விட்டது.





அன்றிலிருந்து முதலாளியின் அந்தரங்க சிஷ்யனாகி விட்டான் செல்லப்பன். விநியோக வேலையும் அவன் கைக்கு வந்து விட்டது. முக்கியமாக அவனை நம்பித்தான் 'கண்ணாடிச் சாமான்: கவனம்' ஜாதிக்காய்ப் பெட்டிகள் வந்த வண்ணமாக இருந்தன.

நாட்கள் கழிந்தன. போலீஸ் பயம் குறைந்

தது. அவன் யார் யாரிடம் பயந்து கொண்டிருந்தானோ, அவர்களில் அநேகர் மருந்துக் கடைக்கு வருவார்கள். போதைப் பொருள் ஏதாவது இருக்கிறதா என்று துருவித் துருவிப் பார்ப்பார்கள். போகும்போது ஆளுக்கு இரண்டு கிளாஸ் சாப்பிட்டு விட்டுப் போவார்கள். செல்லப்பன் தன் கையாலே ஊற்றிக் கொடுப்பான். பெரும் புள்ளிகள் கடையைத் தேடி வருவார்களா? கொண்டுபோய்த்தான் கொடுக்க வேண்டும். செல்லப்பன் சைக்கிளில் கொண்டு போய்க் கொடுப்பான்.

அந்த ஊரில் குடிப்பவர், குடியாதவர் யார் யார் என்பது அநேகமாகச் செல்லப்பனுக்குத் தெரியும். அவன் ஊரையே இரண்டாகப் பிரித்துப் பார்த்தான். ஆனால் அவனிடம் ஒரு நல்லகுணம் இருந்தது. சொல்லப்போனால் அது அவனுடைய முதலாளியின் பண்பு என்றே சொல்ல வேண்டும். எந்தச் சங்கதியையும் தம்பட்டம் போடுகிற சுபாவம் இடையாது. இருவருக்குமே வியாபார சம்பிரதாயம் நன்றாகத் தெரியும்.

செல்லப்பன் இப்போது மூன்று வேளை சாப்பிட்டான். இரவு நிம்மதியாகத் தூங்கினான்.

பங்கஜாட்சிக்கும் திருப்திதான். அவளுடைய புருஷன் மீண்டும் வேலை சம்பாதித்துக் கொண்டு விட்டான். வேலையும் நல்ல வேலை. முன்பு கருவாடு விற்றுக் கொண்டிருந்தான்; இப்போது 'தேன்' வியாபாரம் செய்கிறான்.

ஒரு நாள் பங்கஜாட்சி வேலைக்குப் போகிற வழியில், தலை தெறிக்கிற வேகத்தில் சைக்கிள் மிதித்து வந்தான் செல்லப்பன். பாதையில் கூட்டமில்லை. பங்கஜாட்சி பாதை நடுவே நின்று வழிமறித்தாள். 'கிர்ர்' என்று பிரேக் போட்டுச் சைக்கிள் நின்றது. சைக்கிளின் பின்புறம் ஒரு பெரிய பெட்டி. அதன் மேற்புறம் பழந் துணி ஒன்றால் மூடப்பட்டிருந்தது. பங்கஜாட்சி துணியை விலக்கிப் பார்த்தாள். புட்டி புட்டியாக இருந்தது.

"ஆமாம் இது என்ன புட்டி?" என்று கேட்டாள். செல்லப்பனுக்கு உடம்பு வியர்த்து விட்டது.

"தேன்; இப்போ அதுதானே வியாபாரம்!" என்றான்.

அன்றிலிருந்து அவள் அப்படியே நம்பினாள்.

• • •

பங்கஜாட்சி ஒரு நாள் முதலாளி வீட்டினுள் நுழைகிறபோது, எஜமானி அம்மாள் அறையிலிருந்து 'ஐயோ! ஐயோ!' என்று கூச்சல் கேட்டது. அறையை நோக்கி ஓடினாள் பங்கஜாட்சி. அவளைக் கையைப் பிடித்துத் தடுத்து நிறுத்தினாள் சமையல்காரி. "அங்கே போகாதே" என்று எச்சரித்தாள். பிறகுதான் பங்கஜாட்சிக்கு விஷயம் தெரிய வந்தது.

சுந்தரவடிவேலுவின் ஒரே பிள்ளை ராமசாமி. வயது இருபது. இருபத்திரண்டு இருக்கும். ஆனால் தொந்தியும் தொப்பையுமாக, பார்த்தால் யாருமே முப்பது வயது மதிப்பிடுவார்கள். சதா மாடியில் உட்கார்ந்திருப்பான். பகலில் வெளியே காண முடியாது. உள்ளே பனியன் போடாமல், வாயில் ஜிப்பா அணிந்து கொண்டிருப்பான். லுங்கியோ சந்நியாசிக் கலரில் வேட்டியோ கட்டிக் கொண்டிருப்பான். எப்போதும் முகத்தில் ஒரு புன்னகை. மாலை ஏழு மணி அடித்தால் கிளப்புக்குச் செல்வான். இரவு பத்துமணி வரையில் 'ஐம்பத்தாறு-சீட்டு' விளையாட்டு. வீட்டுக்குத் திரும்பும்போது அவ்வளவாகப் பிரக்ஞை இராது. மடமடவென்று மாடிக்குச் சென்று கதவைத் தாழிட்டுக் கொண்டு அவன் படுக்கையில் சாய்ந்து விடுவான்.

ஒருநாள் சினிமா இரண்டாவது காட்சிக்குச் சென்ற ராமசாமி தியேட்டர் மாடிப் படியில் குடம் குடமாக வாந்தி எடுத்து விட்டான். கூட்டம் கூடி விட்டது. நல்ல வேளை சினிமா பார்த்துக் கொண்டிருந்த இன்ஸ்பெக்டர் 'நட ஸ்டேஷனுக்கு' என்று கூட்டத்தின் முன்னால் சத்தம் போட்டு, காரில் ஏற்றி வீட்டுக்குக் கொண்டு வந்து விட்டார். 'நான் அங்கே இருந்ததால் உமது பிள்ளை தப்பினான். எவனாவது போலீஸ்காரன் கையில் சிக்கியிருந்தால் என்ன ஆகியிருக்கும், யோசித்துப் பாரும். பிள்ளையை அடக்கி வளர்க்க வேண்டும்' என்று சுந்தரவடிவேலுவிடம் சொல்லிவிட்டுப் போனார் அந்த இன்ஸ்பெக்டர்.

சுந்தரவடிவேலுவுக்கு அவமானம் தாங்க முடியவில்லை. மகனைக் கண்டிக்கவும் அச்சம். அவன் அனிச்சம்பூ. தான் விரும்பும் விதத்தில் வாழ முடியாது போனால் தன்னையே அழித்துக் கொள்ளும் விபரீத புத்தி படைத்தவன்.

மனக்கொதிப்பை எந்த விதத்திலாவது தீர்த்துக் கொள்ள வேண்டுமே! 'உன் பிள்ளையால் குடியே முழுகி விட்டது' என்று மனைவியை விழுந்து அறைந்தார்.

"அந்த மகராசி தலையில் அடிபடவா எழுதியிருக்கிறது?" என்று வருத்தத்தோடு கூறினாள் பங்கஜாட்சி. செல்லப்பன் ஈர்க்குச்சியால் பல்லைக் குத்தியபடி எதிரே உட்கார்ந்திருந்தான்.

நடந்த கதையைப் பங்கஜாட்சி செல்லப்பனிடம் சொன்னாள்.

மனசுக்குள் தேன் கொட்டுவது போலிருந்தது செல்லப்பனுக்கு. ராமசாமிக்கு அவன்தான் சரக்கு 'சப்ளை' செய்தான். ராமசாமி முதலியாரின் குமாரன் என்பதும் அவனுக்குத் தெரியும். ஒருநாள் பங்கஜாட்சியைப் பார்க்க முதலியார் வீட்டுக்குப் போனான் செல்லப்பன். அவள் புழக்கடையில் வேலை செய்து கொண்டிருந்ததால், முன்பக்கம் தோட்டத்தில் காத்து நின்று கொண்டிருந்தான். அப்போது 'ஹுஸ் ஹுஸ்' என்று ஏதோ சத்தம் கேட்டது. செல்லப்பன் மேலும் கீழும் பார்த்தான். மாடி ஜன்னலில் இரு கண்கள் தெரிந்தன. கை சைகை காட்டி அழைத்தது. மேலே சென்றான் செல்லப்பன். தலையணையின் அடியிலிருந்து ஒரு நூறு ரூபாய் நோட்டை எடுத்து மேசையின்மீது வைத்து விட்டு 'நாலு பாட்டில் வேணும்' என்றான் ராமசாமி! ஒருகணம் தயங்கினான் செல்லப்பன். 'வாங்கிக் கொள்வதா? கூடாதா?' 'சீ, என்ன பைத்தியக்கார எண்ணம்! இது வியாபாரம். பாவமாவது, புண்ணியமாவது!'

நூறு ரூபாய் நோட்டு செல்லப்பன் மடியில் மறைந்தது. அன்றிலிருந்து அது வாடிக்கையாகி விட்டது.

அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

## 85% கிருமிகளை ஒழிக்கிறது

சொத்தையும் மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள் அவை




மிகச் சிறந்த பலனுக்கு எப்பொழுதும் உபயோகியுங்கள்!

## காலகேட் டூத் பிரஷ்

---

புதுமை பெறுக!
இதம் பெறுக!
இனிமையாய் இருங்கள்! நாள்முழுதும்!



மணமுள்ள சார்மிஸ் டால்கம் பௌடர் உபயோகித்த பின் நீங்கள் பெறும் உணர்ச்சிகள் இவை. சார்மிஸ் குளுமையும் புத்துணர்ச்சியும் அளிக்கிறது ... உன்னத மனோரம்மிய மணம் கொண்டது.




# சார்மிஸ்

## டால்கம் பவுடர்

உன்னத. மனோரம்மிய மணத்துடன்.

சுந்தரவடிவேலு தம் மனைவியை உதைத்தார் என்று பங்கஜாட்சி சொல்லுகிறபோது அதற்குக் காரணம் தான்தான் என்பது அவளுக்குத் தெரிந்திருக்குமா என்று யோசித்தான் செல்லப்பன். அவனால் பேச முடியவில்லை. பங்கஜாட்சி திரும்பத் திரும்ப அதே விஷயத்தைச் சொன்னபோது செல்லப்பனுக்குக் கோபம் வந்தது. ''வாயை மூடிக் கொண்டிரு'' என்று அதட்டினான்.

இரண்டு வாரங்களுக்குப் பிறகு ஒருநாள் மாடியில் பெரும் ஓசை கேட்கவே, சுந்தரவடிவேலு மாடிக்கு விரைந்தார். ராமசாமி கண்ணாடியின் முன்னால் நின்று பரதம் பயின்று கொண்டிருந்தான். கால்கள் பின்னின. கண்களில் ரத்தச் சிவப்பு.

சுந்தரவடிவேலுவுக்குத் தலைகால் புரியாதபடி கோபம் பீறிட்டுக் கொண்டு வந்தது. ராமசாமியின் தலைமயிரை அள்ளிப் பிடித்துக் கரகரவென்று கீழே இழுத்து வந்தார். கூடத்துத் தூணில் கட்டிவைத்து விளாசி விட்டார். ராமசாமி சகல விஷயங்களையும் அப்படியே கக்கி விட்டான்.

மறுநாள் பங்கஜாட்சி வேலைக்குச் சென்றபோது, 'வெளியே போ' என்று கத்தினார் சுந்தரவடிவேலு. அவரிடம் பேச்சுக் கொடுக்கக் கூடாது என்று திரும்பி வந்து விட்டாள் அவள். முதலியார் இல்லாத சமயம் வீட்டுக்குச் சென்றபோதுதான் விஷயம் அவளுக்குத் தெரிய வந்தது.

அன்று மாலை செல்லப்பனுக்கும் பங்கஜாட்சிக்குமிடையே பெரும் சண்டை மூண்டது. பங்கஜாட்சி வாயில் வந்தபடி திட்டினாள். அக்கம் பக்கம் கூடி விட்டது. 'இன்றோடு இந்தத் தொழிலுக்கு முழுக்குப் போட்டு விடுகிறேன்' என்று சத்தியம் செய்தான் செல்லப்பன்.

மறுநாள் சுந்தரவடிவேலுவின் காலில் விழுந்தாள் பங்கஜாட்சி. வேறு வேலை எதுவும் கிடைக்காமற் போனதால்தான் தன் கணவன் இந்த ஈனத் தொழில் செய்தான் என்றும், ஒரு நல்ல வேலை தேடிக் கொடுத்தால் மானமாகப் பிழைப்பான் என்றும் அவள் சொன்னாள்.

''அவருக்கு ஒரு வேலை போட்டுக் கொடுங்கள். நாங்கள் பிழைத்துப் போவோம்'' என்றாள் அவள்.

''கார் ஓட்டக் கற்றுக் கொண்டு வரட்டும். டிரைவராக வைத்துக் கொள்கிறேன்'' என்றார் சுந்தரவடிவேலு.

செல்லப்பனுக்கும் இது சம்மதம்தான். ''ஐம்பது ரூபாய் கொடுத்தால் கற்றுத் தருகிறேன்'' என்று டிரைவர் ஒருவன் சொன்னான்.

ஐம்பது ரூபாய்க்கு எங்கே போவது?

பங்கஜாட்சி மீண்டும் சுந்தரவடிவேலுவிடம் சென்றாள். செல்லப்பனையும் அழைத்துச் சென்றாள். செல்லப்பன் அன்று சுத்தமான உடை உடுத்துக் திருநீறும் நெற்றியில் பூசிக் கொண்டு போய் நின்றான்.

''இந்த ஒரு உதவியும் செய்ய வேணும். தொகையைச் சம்பளத்தில் பிடித்துக் கொள்ளுங்கள்'' என்றாள் பங்கஜாட்சி.



''நன்கொடைதான் கொடுக்க மாட்டேன்னுட்டீங்க; இந்தக் கொளுத்தும் வெய்யிலில் வந்து கேட்டதுக்கு ஒரு சாதாரணக் குடையேனும் கொடுக்கக் கூடாதா!''

''முன் பணம் எதுவும் உங்களை நம்பிக் கொடுக்க முடியாது'' என்று இரைந்தார் சுந்தரவடிவேலு.

புருஷனும் பெண்சாதியும் எவ்வளவோ கெஞ்சியும் காரியம் கைகூடவில்லை. சுந்தரவடிவேலு வெளியே புறப்பட்டு விட்டார்.

''வா, வீட்டுக்குப்போகலாம். மனுசன் நாய் மாதிரி விழுகிறான்'' என்றான் செல்லப்பன்.

''இங்கே கொஞ்சம் நில்லு. இதோ வந்து விட்டேன்'' என்று சொல்லிவிட்டு வீட்டின் பின்புறம் நடந்தாள் அவள்.

மரத்தடியில் நின்று கொண்டிருந்தான் செல்லப்பன். அப்போது 'ஹுஷ் ஹுஷ்' என்ற சத்தம் வந்தது. செல்லப்பன் தலையைத் தூக்கிப் பார்த்தான். ராமசாமி மொட்டை மாடியில் நின்றபடி சைகை காட்டி அழைத்தான்.

செல்லப்பன் அசையவில்லை.

தொடர்ந்து கூப்பிட்டுக் கொண்டே இருந்தான் ராமசாமி. மீண்டும் செல்லப்பன் நிமிர்ந்து பார்த்தபோது, ''வெகு முக்கியமான சமாசாரம், வா'' என்றான் ராமசாமி.

செல்லப்பன் மேலே சென்றதும் தலையணைக்கு அடியிலிருந்து நூறு ரூபாயை எடுத்து வைத்தான் ராமசாமி.

செல்லப்பன் அசையாமல் நின்றான்.

''செல்லப்பா! இந்த ஒரு முறையும் வாங்கிக் கொடு. என் உயிர் போகிறது. எனக்குப் பைத்தியம் பிடித்துவிடும். செல்லப்பா! உன் காலை வேணுமானாலும் பிடிக்கிறேன்'' என்று செல்லப்பனின் காலைத் தொட்டான் ராமசாமி. அவன் கண்களிலிருந்து உதிர்ந்த கண்ணீர் செல்லப்பனின் காலை நனைத்தது.

செல்லப்பன் ஒன்றும் மனம் உருகிவிடவில்லை. அவன் யோசனை வேறு விதமாக ஓடியது. 'இந்த ஒரு முறையும் இந்த நூறு ரூபாயைப் பெற்றுக் கொள்வது. ஐம்பது ரூபாய்க்கு வாங்கிக் கொடுப்பது. மீதி ஐம்பது ரூபாயை வைத்து கார் ஓட்டக் கற்றுக் கொள்வது. பிறகு இந்த வேலையை அடியோடு விடுவது' என்று எண்ணினான். 'இனிமேல்

இந்த ஈனமான வேலையைச் செய்யாமலிருப்ப தற்காக, இந்த ஒரு முறை மட்டும் ஈனமான தொழிலைச் செய்கிறேன்' என்று அவன் மனசுக்குள் சொல்லிக் கொண்டான்.

பணத்தை இடுப்பில் செருகிக் கொண்டு வெளியே வந்தான். பங்கஜாட்சியும் வந்து சேர்ந்தாள். இருவரும் வீடு நோக்கி நடந்து சென்றார்கள்.

"நம் தலைவிதி இப்படியா இருக்க வேண்டும்" என்று அவன் நொந்து கொண்டான்.

"ம்? என்ன விஷயம்?"

"'ஐயாவிடம் கேளு. அவர் கொடுக்கா விட்டால் நான் கொடுக்கிறேன்' என்று சொல்லியிருந்தாள் அம்மா. நம்ம தலைவிதி இப்படியா இருக்கணும்?"

"ம்!"

"அம்மா சேர்த்து வைத்திருந்த பணம் காணாமல் போய்விட்டது. 'உனக்காக வைத் திருந்தேன். காணோம். திருட்டா போய் விட்டது? நான் பிள்ளை பெற்ற லட்சணம் அப்படி. வெளியே சொல்லக் கூடாது' என்று கண்ணீர் விட்டாள் அம்மா!"

செல்லப்பனுக்குக் கால்கள் சோர்ந்தன.

"இன்னும் அந்தப் பிள்ளைக்கு எந்தச் சண்டாளன் வாங்கிக் கொடுக்கிறானோ? அவன் அழிந்து போயிடுவான்: சத்தியமா" என்று அவள் கத்தினாள்.

'இதுதான் கடைசி, இனிமேல் செய்ய மாட்டேன்' என்று தனக்குள் முணுமுணுத் தான் செல்லப்பன்.

• •

செல்லப்பன் டிரைவராக அமர்ந்து இரண்டு மாதங்களாகி விட்டன. சுந்தர வடிவேலுவுக்கு அவனிடம் மிகவும் திருப்தி.

ஒருநாள் செல்லப்பன் காரைத் துடைத்துக் கொண்டிருந்தபோது ராமசாமி அங்கு வந்து சேர்ந்தான்.

"செல்லப்பா! இதோ பணம். இந்த ஒரு முறை மட்டும்......"

"அந்தச் சங்கதியே என்னிடம் பேசக் கூடாது."

"அப்படிச் சொல்லாதே, செல்லப்பா! எனக்கு உயிரைச் சுருட்டிச் சுருட்டி இழுக் கிறது" என்றான் அவன்.

"இதைப் பற்றிப் பேசினால் ஐயாவிடம் சொல்லுவேன்" என்றான் செல்லப்பன்.

ராமசாமி அங்கிருந்து நகர்ந்து விட்டான்.

இரண்டு மாதங்கள் ஓடிவிட்டன.

ஒருநாள் ராமசாமி சொன்னான்:

"செல்லப்பா! வில்லியம் வீட்டில் என் பெட்டி ஒன்று இருக்கிறது. காரைக் கொண்டு போய் அதை எடுத்து வா."

"என்ன சாமான்?"

"அதைப்பற்றி உனக்கு என்ன?"

"சொன்னால்தான் எடுத்துவர முடியும்."

"சொல்ல முடியாது!"

"எடுத்துக் கொண்டு வரமுடியாது!"

இரண்டு நிமிஷங்கள் இமை கொட்டாமல் முறைத்தான் ராமசாமி. பிறகு அங்கிருந்து போய் விட்டான்.

செல்லப்பனுக்கு வில்லியம் யார் என்று தெரியாதா, என்ன? பெட்டிக்குள் என்ன சாமான் இருக்கும் என்பதும் தெரியும்.

மறுநாள் சுந்தரவடிவேலுவுக்கு வெளியூர் செல்ல வேண்டியிருந்தது.

காரை எடுக்கவந்தபோது 'ஷெட்' வாசலை ராமசாமி பூட்டிவிட்டுச் சென்றதைச் செல்லப் பன் கவனித்தான். சாவி ஒன்றுதானே உண்டு? ராமசாமிக்கு அங்கே என்ன வேலை?

செல்லப்பன் 'ஷெட்' வாசலைத் திறந்து உள்ளே சுற்றுமுற்றும் பார்த்தான். வைத்த சாமான்கள் வைத்தபடி இருந்தன. அதற்குள் சுந்தரவடிவேலு இரண்டு தடவைகள் கூப் பிட்டு விட்டார். அவரை ஏற்றிக்கொண்டு மறுநிமிஷம் கார் பறந்தது.

ஐந்தாவது மைலில் மதுவிலக்குச் சோதனை போலீஸ் வழிமறித்துக் காரைச் சோதித்த போது ஐந்து பாட்டில்கள் காரிலிருந்து கண்டெடுக்கப்பட்டன.

"படுபாவிப் பயலே! இந்தத் தொழிலை இன்னுமா பார்த்துக் கொண்டிருக்கிறாய்? நல்ல பாம்புக்குப் பால் வார்த்த கதை ஆகி விட்டதே!" என்று இரைந்தார் சுந்தர வடிவேலு.

செல்லப்பன் சிறை புகுந்தான். ஒரு வருடம் கழித்து வெளியே வந்தான். வேலை தேடித் தெருத் தெருவாகத் திரிந்தான். ஜெயிலுக்குப் போய் வந்தவனுக்கு வேலை கொடுப்பார்களா?

ஒருநாள் ராமசாமி, செல்லப்பனை அழைத்து நூறு ரூபாய் நோட்டு ஒன்றை நீட்டினான். மறுபடியும் செல்லப்பன் தன்னிடம் வேலைக் குத் திரும்பியதில் மருந்துக்கடை முதலாளிக்கு மிகவும் திருப்தி.

செல்லப்பன் பிழைப்பு இப்பொழுதும் சுமா ராக ஓடிக் கொண்டிருக்கிறது!

---

**எரிந்த காரணம்...!**



# படித்துப் பாருங்கள்

## மகா வித்யாதி சூத்திரக் கிரந்தாவளி

திருவண்ணாமலை என்றும் பகவான் ரமண மகரிஷி நினைவுக்கு வருவார்கள். அவரது ஆன்மீகப் பெருவாழ்விலே நெருங்கிய தொடர்பு கொண்ட காவ்யகண்ட ஸ்ரீ வாஸிஷ்ட கணபதி முனிவர் நினைவுக்கு வருவார்கள். கார்த்திகை தீபம் நினைவுக்கு வரும். அருவாழ்வுக்கும் ஆன்ம ஏற்றத்துக்கும் ஒளிக் கதிரைக் காட்டி இருட்போர்வையை நீக்கும் பல பெரியார்களது பணி நினைவுக்கு வரும். தமது வாஸிஷ்ட வைபவம், உமா ஸஹஸ்ரம் ஆகிய இணையற்ற நூல்களின் மூலம் பண்டித உலகுக்கு வழிகாட்டியாகத் திகழ்ந்த கணபதி சாஸ்திரிகள் இயற்றிய 'மகா வித்யாதி சூத்திரக் கிரந்தாவளி' என்னும் இந்த நூல் ஆஸ்திக மகா ஜனங்களுக்கு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது.

மகாவித்யாதி சூத்திரத்தில் முதற் பாகத்திலே காளி தாரா சுந்தரி, புவனேசுவரி, பைரவி, பிரசண்ட சண்டிகா, தூமாவதி, பகளா முகி, மாதங்கி, கமலாத்மிகா என்று பத்துப் படலங்களாகப் பிரித்துக் கொண்டு, தத்துவத்தைச் சிறப்பாக விளக்கியுள்ளார்கள்.

இரண்டாம் பாகத்திலே இதர சூத்திரக் கிரந்தங்கள் என்ற தலைப்பட்டு கொடுத்து எட்டு குறிகளுக்குச் சூத்திரம் எழுதியுள்ளார்கள். காயத்ரி சீதா கிருஷ்ணன் ஆகியவர்களின் சிறப்பியல்புகள் தத்துவ திருஷ்டியுடன் கூறப்பட்டுள்ளன.

வடமொழியில் இயற்றப் பட்டுள்ள இந் நூலுக்குச் சுலபமான தமிழ் மொழி பெயர்ப்பை ஸ்ரீ ஸ்ரீவத்ஸ நடேசன் அவர்கள் வழங்கியுள்ளார்கள்.

ஆரம்பத்திலே தமிழும் அதற்கு அநுபந்தம் போல வடமொழி மூலமும் கொடுக்கப் பட்டிருக்கும் இந்த நூல் வடமொழி அறிந்தவர்கள், அறியாதவர்கள் யாவருக்கும் பயன்படும் வகையில் மிகத் தெளிவாகவும் அழகாகவும் தயாரிக்கப் பட்டிருக்கிறது.

கிடைக்கும் இடம் :— ஜே. ஜ. கே. மூர்த்தி 5, மூனா லேன் சந்து, தியாகராயநகர், சென்னை-17 விலை : ரூ. 1-25.

## Homage To Sankara

அயல்நாட்டுத் துறையை ஆங்கிலம் படித்துப் பழகிப் போன மக்களுக்குப் பயன்பட வேண்டுமென்று பல அரிய நூல்களை உயர்ந்த காகிதத்தில் பிழையின்றி அச்சிட்டுக் கவர்ச்சிகரமாக வழங்குவதில் பெயர்பெற்ற கணேஷ் கம்பெனியார் **'சங்கரருக்கு அஞ்சலி'** என்ற நூலை இப்போது வெளியிட்டிருக்கின்றனர்.

சென்னை சர்வ கலாசாலை தத்துவப் பேராசிரியர் டாக்டர் டி. எம். பி. மகாதேவன் இயற்றிய இச் சிறு நூலில் ஆதிசங்கரரின் ஜீவிய சரித்திரமும், இயற்றிய நூல்களின் சாராம்சமும், அவருடைய கோட்பாடுகளின் சுருக்கமும் தெளிவாக எளிய நடையில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. தோடகாசாரியாரால் ஆதி சங்கரர் மீது பாடப் பட்டுள்ள தோடகாஷ்டகம் என்னும் குரு ஸ்துதியும், சங்கரரே இயற்றிய குர்வஷ்டகமும் தேவநாகர லிபியில் மூலத்துடன் கொடுத்திருப்பது இந்நூலின் சிறப்பை உயர்த்துகிறது. கண்ணைக் கவரும் எட்டு விளக்கப் படங்களும் பகவத்பாதரின் அட்டைப்படமும் நூலுக்கு அழகூட்டுகிறது.

ஆசிரியர் : டி. எம். பி. மகாதேவன் கிடைக்குமிடம் : கணேஷ் அண்டு கம்பெனி (மெட்ராஸ்) பிரைவேட் லிமிடெட்; சென்னை-17: விலை ரூ. 1-50

## ஸ்ரீ பகவத் கீதாசாரமும் பாத்ம புராணக் கதைகளும்

பகவத்கீதை சுலோகங்களை முறைப்படி ஜபம் செய்து தனித்தனி சித்தி பெற்று லௌகிக பலனையடைந்தவர்களின் வரலாறு பதினெண் புராணங்களில் ஒன்றாகிய பாத்ம புராணத்தில் உத்தர கண்டத்தில் பதினெட்டு அத்தியாயங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. கீதையின் அத்தியாயக் கணக்கும் இப்புராண வரலாறுகளடங்கிய அத்தியாயக் கணக்கும் இணைந்து கீதையின்சிறப்பைக் கண்ணாடிபோல் பளிச்சென்று உணர்த்தி வைக்கின்றன இக் கதைகள். இவற்றையெல்லாம் கோவையாகத் தொகுத்துத் தருகிறார் ஆசிரியர் ஸ்ரீவத்ஸ வே. ஸோமதேவ சர்மா.

சுருக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ள கீதையின் பிரபாவம் இந்நூலுக்கு முன்னுரை போல் விளங்குகிறது. இதையொட்டி ஒவ்வொரு அத்தியாயத்தின் மூல சுலோகங்களும் அவற்றின் அர்த்தசாரமும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அத்தியாய முடிவில் அதன் கருத்தையும் விசேஷார்த்தங்களையும் நிகமாந்ததேசிகர் இயற்றிய கீதார்த்த சங்கிரஹத் தமிழ்ப் பாடல்களிலிருந்து ஒரு வெண்பாவும் அதற்கு ஏற்ற பாத்ம புராணக் கதையும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இதைத் தவிர, கீதையின் மேன்மையை உணர்த்தும் இதர புராண வாக்கியங்களும் மகான்கள், சாதுக்கள், அறிஞர்கள் ஆகியவர்களின் பொன்மொழிகளும் தொகுத்துக் கொடுத்திருப்பதுடன் கீதோபதேச ரத்னமாலையென்று ஆசிரியர் சர்மாவால் புனையப்பட்ட நூறு கருத்துக்கள் கொண்ட ஒரு கோவையும் சேர்த்திருப்பது பக்தி வளர்ச்சிக்கு மிகவும் உதவும். பகவத் பாத கீதாசயம் என்று ஞானபாவம் நிறைந்த ஒரு அத்தியாயமும் சேர்க்கப்பட்டுள்ளது.

இப்புத்தகத்தில் அளித்துள்ள கீதாபிரபோதம் பாத்ம புராணக் கதைகள் ஆகிய இரண்டு அம்சங்களுக்காகவாவது இந்நூலைப் படிக்கலாம்.

ஆசிரியர் ஸ்ரீவத்ஸ வே. ஸோமதேவசர்மா; கிடைக்குமிடம்: மாம்பலம் குருகுலவெளியீடு, 2, ஸ்டேஷன் ரோடு மேற்கு மாம்பலம், சென்னை-17 விலை ரூபாய் 2.

# கல்லில் விழுந்த கௌரவம்!

முதல் நாள் இரவிலிருந்தே விழிஞத்தில் மழை பெய்து கொண்டிருந்தது. அந்த மழை மறுநாள் காலை வரை நிற்கவே இல்லை. தேய்பிறைக் காலத்து இருட்டு. முகில் கூட்டத்தின் கவிந்த நிலை. அதிகாலை மூன்றரை நாழிகைக்கு மேல் இருக்கலாம். அலைகள் பேய்த்தனமாகக் குமுறி வீசிக் கொண்டிருந்தன.






அந்தச் சமயத்தில் தெற்கேயிருந்து ஒரு கப்பல் துறைக்கு வந்து நின்றது. மழையில் நனையாமல் ஒதுங்கி நின்று கொண்டிருந்த சிலர் தீபங்களோடு ஓடிப் போய்க் கப்பலைப் பார்த்தனர். அப்படிப் பார்த்தவுடன் அவர்களிடமிருந்து ஆரவாரமும், மகிழ்ச்சியும் நிறைந்த குரல்கள் எழுந்தன. அமைதியில் ஆழ்ந்து ஆள் நடமாட்டமில்லாமலிருந்த அந்த நேரத்தில் அந்தக் கப்பலின் வருகையை எதிர்பார்த்தே அவர்கள் காத்திருந்தார்கள் போலிருக்கிறது. "குமார பாண்டியருடைய கப்பல் வந்து விட்டது" என்ற ஆனந்தமயமான வார்த்தைகள் அந்த இருளிலும், மழையிலும் ஒலித்தன. அவர்களில் சிலர் ஓடிப் போய்த் துறைமுகத்துக்கு அண்மையிலிருந்த விழிஞத்து அரச மாளிகையில் தங்கியிருந்த மகாமண்டலேசுவரர் முதலியவர்களிடம் அந்தச் செய்தியைத் தெரிவித்தார்கள். மகாமண்டலேசுவரர் மற்றவர்களை எழுப்பினார். மகாராணி, அதங்கோட்டாசிரியர், விலாசினி, பவழக்கனிவாயர் முதலியவர்கள் மகாமண்டலேசுவரரைப் பின் தொடர்ந்து சென்றனர். இருட்டையும், மழைக் குளிரையும் பொருட்படுத்தாமல் கப்பல் நின்றுகொண்டிருக்கும் துறையை நோக்கி அவர்கள் கால்கள் விரைந்தன.

பகற்போதில் மக்கள் கூட்டமும், பல மொழி பேசும் பல நாட்டு மக்களின் நாகரிகக் கலப்பும் வெள்ளமாக வழிந்து ஓடும் அந்தத் துறைமுகப் பகுதியில் அப்போது மழைத் தண்ணீர்தான் வழிந்து ஓடிக் கொண்டிருந்தது. மழைத் தண்ணீரில் நனையாமல் சுங்கச் சாவடிக்குள் அடுக்கப்பட்டிருந்த மிளகுப் பொதிகளின் ஓரமாக ஒண்டிப் படுத்திருந்த மனிதன் ஒருவன் மெல்ல எழுந்தான். மகாமண்டலேசுவரர், மகாராணி முதலியவர்கள் எந்தக் கப்பலை நோக்கிச் சென்று கொண்டிருந்தார்களோ, அதே கப்பலை நோக்கி அவனும் இருளில் பதுங்கிப் பதுங்கி நடந்தான். யாருடைய கண்களிலும் தான் தென்பட்டுவிடாமல் நடந்து செல்ல வேண்டும் என்பது அவனுடைய நோக்கமாக இருக்கும் போலும். முன்னால் சென்று கொண்டிருந்தவர்களின் வெளிச்சத்துக்காகப் பிடித்துச் செல்லப்பட்ட தீப்பந்தத்தின் ஒளி பின்னால் பதுங்கி நடந்தவனுடைய



முகத்தில் படுகிறது. அப்போது அவன் முகத்தை நன்றாகக் காண முடிகிறது.

ஆ! அது ஆபத்துதவிகள் தலைவனின் முகம் அல்லவா? தளபதிக்கு உடல் நலமில்லை என்று பொய் சொல்லி அவனை விழிஞத்திலிருந்து அனுப்பி விட்டார் மகாமண்டலேசுவரர். அவனோ நடுவழியிலேயே அவர் கொடுத்து அனுப்பிய ஓலையைப் பிரித்துப் பார்த்து அதன் சூழ்ச்சியைப் புரிந்து கொண்டு விழிஞத்துக்கே திரும்பியிருந்தான்.

"ஐயோ, பாவம்! தம்முடைய பெண்ணும், நாராயணன் சேந்தனும் குமார பாண்டியரை அழைத்துக் கொண்டு இந்தக் கப்பலில் வந்திருப்பார்களென்று மகாமண்டலேசுவரர் கனவு காண்கிறார். நானும், தளபதியும் பகவதியை அனுப்பியிருக்கிற நோக்கம் இவருக்குத் தெரியாது. போதும்" என்று நினைத்துக் கொண்டே அவர்களுக்குப் பின் நடந்தான் மகர நெடுங்குழைக்காதன். மழை பெய்து சேறாகியிருந்த தரையில் இருளில் வழுக்கி விடாமல் கவனமாக நடக்க வேண்டியிருந்தது. முன்னால் சென்றவர்களும் நிதானமாகவே நடந்து சென்றதால் குழைக்காதனும் அதற்கேற்ப வேகத்தைக் குறைத்துக் கொண்டான். கப்பலிலிருந்து குமார பாண்டியனும், பகவதியும் இறங்குவதையும், அதைக் கண்டு மகாமண்டலேசுவரரின் முகத்தில் ஏமாற்றம் படர்வதையும், ஒருங்கே காணப்படுகிற ஆவல் அவன் மனத்தின் எல்லையெல்லாம் நிறைந்திருந்தது.

அந்த ஆவலுடன் அவன் சென்று கொண்டிருந்தபோது இருட்டில் பின்புறமிருந்து ஒரு கை நீண்டு அவன் முதுகைத் தொட்டது. சிறிதளவு பயமும், பெரும் பகுதி ஆத்திரமுமாகத் திடுக்கிட்டுத் திரும்பினான் ஆபத்துதவிகள் தலைவன். பின்னால் நின்றுகொண்டிருந்த ஆளைப் பார்த்தவுடன் அவனால் தன் கண்களை நம்பவே முடியவில்லை. மரியாதையும் திகைப்பும் முகத்தில் மிளிர, 'நீங்களா?' என்ற வினா அவன் வாயிலிருந்து மெல்ல வெளிப்பட்டது. மழையில் நனைந்த உடம்போடு தளபதி வல்லாள தேவன் அங்கே அவனுக்குப் பின்னால் நின்று கொண்டிருந்தான்.

"இரையாதீர்கள். மெல்லப் பேசுங்கள்" என்று சொல்லும் பாவனையில் உதட்டில் ஆள்



காட்டி விரலை வைத்துக் காட்டினான் தளபதி வல்லாள தேவன்.

"படைகள் புறப்படுகிற சமயத்தில் உங்களுக்குத் திடீரென்று உடல்நலமில்லாமற் போய்விட்டதாகவும், நீங்கள் படைக் கோட்டத்திலேயே தங்கிவிட்டதாகவும் அல்லவா மகாமண்டலேசுவரர் என்னிடம் சொன்னார்?" என்று குரலை மேலும் சிறிதாக்கிக் கொண்டு தன் துடிப்பை அடக்க முடியாமல் கேட்டான் குழைக்காதன்.

"எல்லா விவரமும் சொல்கிறேன். பொறுமையாக இருங்கள்" என்று மெல்லக் கூறிவிட்டுக் குழைக்காதனின் கையைப் பற்றி ஒரு மூலைக்கு இழுத்துக் கொண்டு சென்றான் தளபதி.

"மகாசேனாதிபதி! இப்போது நாம் இங்கே தனியாக நின்று பேசிக் கொண்டிருக்க அவகாசமில்லை. எதிர்பார்த்துக் கொண்டிருந்த கப்பல் துறையில் வந்து நின்று விட்டது. மகா மண்டலேசுவரர், மகாராணி முதலியவர்கள் இளவரசரை வரவேற்பதற்காக அதோ முன்னால் நடந்து போய்க் கொண்டிருக்கிறார்கள்" என்று பரபரப்போடு சொன்னான் மகர நெடுங் குழைக்காதன்.

"பரவாயில்லை, குழைக்காதரே! அவர்களெல்லாம் கப்பலிலிருந்து இறங்கி வருவதற்குள் நாமும் போய்ச் சேர்ந்து கொள்ளலாம். குமார பாண்டியனோடு பகவதி உடன் வருவாளாகையினால் எல்லாம் அவள் கவனித்துக் கொள்வாள்."

"பகவதி கப்பலில் வருகிற விவரத்தைச் சொல்லி அவளையும் சேர்த்து அழைத்து வந்துவிட வேண்டுமென்று தாங்களே மகாமண்டலேசுவரரிடம் வேண்டிக் கொண்டீர்களாமே?"

"அவர் உங்களிடம் சொன்னாரா அப்படி?"

"சொல்லியது மட்டுமில்லை. உங்கள் உடல் நலனைக் கவனிப்பதற்காக நான் உடனே படைக்கோட்டத்துக்குப்போயாக வேண்டுமென்று என்னிடம் ஒரு ஓலை கொடுத்து இங்கிருந்து துரத்தினார். நானும் முதலில் அதை நம்பிப் புறப்பட்டு விட்டேன்..." என்று தொடங்கி நடந்த விவரத்தைத் தளபதிக்குச் சொன்னான் குழைக்காதன்.

"நீங்கள்செய்ததுநல்லதாய்ப்போயிற்று. மகாமண்டலேசுவரர் கொடுத்த ஓலையை நம்பிப் படைக்கோட்டத்துக்கு வந்திருந்தால் என்னைப் போலவே நீங்களும் தப்ப முடியாமல் சிக்கிக் கொண்டிருப்பீர்கள். இடைவழியிலேயே அவருடைய ஓலையைக் கிழித்துப் போட்டு விட்டு விழிஞத்துக்கே திரும்பிய உங்கள் துணிவைப் பாராட்டுகிறேன்.

"குழைக்காதரே! மகாமண்டலேசுவரர் பெரிய சூழ்ச்சி செய்து என்னை ஏமாற்றி விட்டார். நயமாகப் பேசிப் படைகளை முன்னால் அனுப்பச் செய்து விட்டுத் தனியே என்னை அழைத்துக் கொண்டு போனார். நான் முட்டாள்தனமாய் அவரிடம் தனிமையில் மாட்டிக் கொண்டுவிட்டேன். நான் போருக்குத் தலைமை தாங்கத் தகுதியற்ற குற்றவாளி என்றும், என்னால் எவ்வளவோ தவறுகள் செய்யப்பட்டிருக்கின்றன என்றும் எரிந்து விழுந்தார். நானும் என் ஆத்திரத்தை அவரிடம் காட்டினேன். பலிக்கவில்லை. தந்திரமாக என்னைப் படைக்கோட்டத்திலேயே சிறை வைத்து விட்டு விழிஞத்துக்குப் புறப்பட்டார் அவர். அங்கே என்னை ஏமாற்றியது போதாதென்று இங்கே வந்து உங்களையும் ஏமாற்றியிருக்கிறாரென்று தெரிகிறது. இல்லாவிட்டால் 'படை புறப்படும் நேரத்தில் எனக்கு உடல்நலமில்லாமல் போய்விட்டது' என்று சொல்லி உங்களை அங்கே அனுப்பியிருப்பாரா? என்ன இருந்தாலும் பிறரை அஞ்சி நிற்கச் செய்





இந்தியன் இன்ஸ்டிடியூட் ஆப் ரோட் டிரான்ஸ் போர்டின் கௌரவ துணைக் காரியதரிசி திரு என். பாலகிருஷ்ணு அவர்களின் புதல்வி சௌ. ஐயாவுக்கும் திரு சர்மாவுக்கும் மே மாதம் 10ந் தேதி விவாகம் சிறப்பாக நடந்தது.

---

யும் சூழ்ச்சித் திறமை அவரிடம் இருப்பது போல வேறு யாரிடமும் இருக்க முடியாது. நான் அவருக்கு எதிராகச் செய்த ஒவ்வொரு தவறுகளையும் வரிசையாக எண்ணி வைத்துக் கொண்டு ஒப்பிக்கிருரே அவர்! பகவதியை ஈழ நாட்டுக்கு அனுப்பி யிருக்கும் இரகசியம் உங்களையும், என்னையும் தவிர, வேறு யாருக்கும் தெரிந்திருக்க முடியாதென்று நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம். அவரோ அதை நன்ருகத் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிருர். அறிவினுல் அவரை வெல்ல நம்மால் முடியாது, குழைக்காதரே! ஆனுல் எப்படியும் அந்த மலைச்சிகரத்தை வீழ்த்தியாக வேண்டும். அதைச் செய்வதற்காகத்தான் நான் தப்பி ஓடி வந்தேன். வலிமையான பலனக் காவல் வீரர்களை எனக்குக் காவல் போட்டிருந்தார் மகாமண்டலேசுவரர். என் சாமர்த்தியத்தை யெல்லாம் பயன்படுத்தி என்னைக் காவல் செய்த வீரர்களை ஏமாற்றி விட்டு இங்கு ஓடி வந்தேன். அவர் என்னை இவ்வளவு தூரத்துக்கு அவமானப் படுத்திய பின்பும் போர்க்களத்துக்குப் போய்ப் படைகளுக்குத் தலைமை தாங்கிப் போர் செய்ய விருப்பமில்லை எனக்கு. நான் போருக்குத் தலைமை தாங்கலாமா, இல்லையா என்பதைக் குமாரபாண்டியர் வந்து விசாரித்துத் தீர்ப்புக் கூற வேண்டுமாம். எப்படி யிருக்கிறது நியாயம்?''—என்று ஆபத்துதவிகள் தலைவனிடம் தன் மனக்குமுறலை வெளியிட்டான் தளபதி வல்லாளதேவன். அதைக் கேட்டு விட்டுக் குழைக்காதன் கூறுவான் :—

'' மகாமண்டலேசுவரர் ஒருவரை மட்டும் மனத்தில் வைத்துக்கொண்டு தாங்கள் அப்படியெல்லாம் செய்துவிடக் கூடாது. தங்கள் தங்கையார் மகாமண்டலேசுவரருடைய சூழ்ச்சிகளையும், சர்வாதிகார மனப்பான்மையையும், குமார பாண்டியரிடம் இதற்குள் விவரித்துச் சொல்லி யிருக்கலாம். அதைக் கேட்டுக் குமார பாண்டியரே மகாமண்டலேசுவரர் மேல் நம்பிக்கை இழந்திருப்பார்.''

'' அப்படிச் சொல்வதற்கில்லை, குழைக்காதரே! குமார பாண்டியருடைய மனத்தை என் தங்கை பகவதி எவ்வளவு தான் மாற்றி யிருந்தாலும் இங்கு வந்து இறங்கியவுடன் மகாராணியாரும், மகாமண்டலேசுவரரும் சொல்கிறபடிதான் கேட்பார் அவர். ஆகவே, இனி நாம் செய்ய வேண்டியதெல்லாம் ஒரே காரியம் தான். மகாமண்டலேசுவரர் என்ற இறுமாப்புச் சக்தியை ஒரேயடியாக வீழ்ச்சியுறச் செய்துவிட வேண்டும்.''

'' முயன்று பார்க்கலாம். அதோ அவர்கள் கப்பலை நெருங்கி விட்டார்கள். வாருங்கள், நாமும் போகலாம். மற்றவற்றைப் பின்பு பேசிக்கொள்வோம்'' என்று கூறித் தளபதியையும் கூட்டிக் கொண்டு துறையில் வந்து நின்ற கப்பலை நோக்கிச் சென்ருன் குழைக்காதன்.

தளபதிக்கும், குழைக்காதனுக்கும் இருளும், மழையும் போதுமான அளவு மறைந்து செல்வதற்கு ஒத்துழைத்தன. கப்பல் நின்று கொண்டிருந்த துறைக்கு அருகில் ஒரு பாறை மறைவில் அவர்கள் இருவரும் மறைவாக நின்று கொண்டனர். அந்த இடத்தில் நின்று கொண்டு கப்பலிலிருந்து இறங்குகிறவர்களை அவர்கள் பார்க்க முடியும். அங்கே பேசுகிற பேச்சையும் கேட்க முடியும். அவர்களை மற்றவர்கள் பார்க்க முடியாது. அப்படிப்பட்ட மறைவிடம் அது.

கப்பலின் அருகே தீப்பந்தங்களின் ஒளியில் மகாராணி, மகாமண்டலேசுவரர், அதங்கோட்டாசிரியர், பவழக்கனிவாயர், விலாசினி ஆகியோர் நின்று கொண்டிருப்பது தெரிந்தது. அவர்கள் எல்லோரும் மழைத் தூறலில் நனைந்து கொண்டுதான் நின்ருர்கள். நங்கூரக் கயிறுகளால் இழுத்துக் கட்டப்பட்டிருந்தாலும் அலைக் குழப்பத்தால் கப்பல் ஆடிக் கொண்டிருந்தது.

அடடா! அப்போது மகாராணி வானவன்மாதேவியின் முகத்தில்தான் எத்தனை ஆவல் நிறைவு பொங்கி நிற்கிறது! கப்பலிலிருந்து இறங்கி வரும் வழியையே பார்த்து நிற்கும் அவருடைய கண்களில் தென்படும் புனிதமான உணர்ச்சி தாய்மைப் பாசத்துக்கே சொந்தமான உணர்ச்சியல்லவா? அந்த உணர்ச்சிச் சாயலுக்கு மூலமாக அவருடைய தூய உள்ளத்தில் அப்போது எத்தனை எத்தனை எண்ணங்கள் பொங்கி எழுந்தனவோ?

விலாசினி, அதங்கோட்டாசிரியர், பவழக்கனிவாயர்—எல்லோருடைய முகத்திலும் குமார பாண்டியரைக் காணப் போகும் ஆவல் நிலவியது. மகாமண்டலேசுவரருடைய முகம் ஒன்று மட்டுமே உணர்ச்சி நிழல் படியாமல் வழக்கம் போல் இயல்பாக இருந்தது. பக்கத்திலிருந்து படர்ந்த தீப்பந்தத்தின் ஒளிச் சாயலில் அவருடைய கூர்மையான மூக்கு, முகத்திலிருந்து நீண்ட கத்தி ஒன்றின் நுனிபோல் பளபளத்தது. அவருடைய

சக்தி வாய்ந்த கண்களும் கப்பலிலிருந்து இறங்கி வரும் மரப்படிகளைத்தான் பார்த்துக் கொண்டிருந்தன. ஆ! அவர்கள் எதிர்பார்த்த இணையற்ற அந்த விநாடி இதோ வந்துவிட்டது. சேந்தனும், குழல்மொழியும் பின்தொடரக் குமார பாண்டியன் இறங்கி வந்தான். ஏனோ அவன் முகத்தில் சிறிது சோர்வு தென்பட்டது. சேந்தனிடமும், குழல்மொழியிடமும் கூட அவ்வளவாக உற்சாகம் தென்படவில்லை. வரவேற்றவர்களிடம் இருந்த உற்சாகமும், பரபரப்பும் வரவேற்கப்பட்டவர்களிடம் இல்லை. குமார பாண்டியன் கடைசிப் படியிலிருந்து இறங்கித் தென்பாண்டி நாட்டு மண்ணில் கால் வைத்தான். தீப்பந்த ஒளியில் அவன் அழகிய முகமும் வலது கையில் இருந்த வலம்புரிச் சங்கும் தெரிந்து மின்னின. யாரோ ஒரு கந்தர்வ உலகத்துச் சுந்தர இளைஞன்போல் எழிலார்ந்து காட்சியளித்தான் அவன். இறங்ியதும் கீழே நின்ற யாவரையும் வணங்கினான். அப்போது, "குழந்தாய்! வந்தாயா?" என்று ஒரு பாசம் நிறைந்த குரல் அவன் செவி வழிப் புகுந்து மனத்தின் இடமெல்லாம் நிறைந்து அவனைக் குழந்தையாக்கி விட்டது. அடுத்த விநாடி "அம்மா!"—என்ற சொல் அவன் நாவிலிருந்து உணர்ச்சி மயமாகக் கனிந்து குழைந்து தோன்றி ஒலித்தது. அந்த ஒலி எழுந்து அடங்குவதற்குள் தன் தாயின் கரங்களுக்கு இடையே தழுவப்பட்டு நின்றான் அவன். தாய்மை என்ற பாற்கடலில் விழுந்து மூழ்கிப் பருகியும், நனைந்தும், உணர்ந்தும், தன்னை இழந்து அதிலேயே ஆழ்ந்து விட்டதுபோல் ஒரு பரவச நிலை, தங்கமே தசையாகத் திரண்டு நீண்டாற் போன்ற குமாரபாண்டியனின் அழகிய தோளில் மகாராணி வானவன்மாதேவியின் கண்கள் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தன. தாயின் அந்தக் கண்ணீர் தன் உடம்பையும் உள்ளத்தையும் அழுக்கு நீக்கிப் பரிசுத்தமாக்கி விட்டதுபோல் ஒரு மகத்தான உணர்வு ஏற்பட்டது இராசசிம்மனுக்கு. பின்பு குழல்மொழியையும் அன்போடு தழுவி வரவேற்றார் மகாராணி.

தன் தந்தை அதங்கோட்டாசிரியரின் முதுகுக்குப் பின் வெட்கத்தோடு ஒண்டிக் கொண்டு நின்ற விலாசினி வியப்போடு பார்த்தாள். அவ்வளவு வயதான மகாராணி தன் மகனைக் கண்டதும் சிறு பிள்ளை போல் தழுவிக்கொண்டு கண்ணீர் சோர நின்ற காட்சி அவள் உள்ளத்தை உருக்கியது. 'குழந்தைத் தன்மை என்ற அபூர்வமான உணர்ச்சியை உலகத்துக்குக் கொடுத்துக் கொண்டு வருபவள் தாய். அதனால்தான் அந்தத் தன்மை தாயிடமிருந்தே சில சமயம் வெளிப்பட்டு விடுகிறது போலும்' என்று நினைத்து வியந்தார் அதங்கோட்டாசிரியர். மகாமண்டலேசுவரர் முதலியவர்களுடைய பாதங்களைத் தொட்டு வணங்கினான் குமார பாண்டியன்.

## ✡ அருள் வாக்கு ✡

நம் குழந்தையைக் கண்டவுடனே ஆசையுடன் தூக்கிக் கொஞ்சுகிறோம். அது களுக்கென்று சிரித்தால் ரொம்ப ஆனந்தம் உண்டாகிறது. அதே சமயம் பக்கத்து வீட்டுக் குழந்தையைக் கண்டால் அதிருப்தி ஏற்படுகிறது. நம் குழந்தையிடம் இந்தப் பாசம் வைப்பது எதற்காக என்றால் நம் குழந்தையை அப்போதுதான் நாம் நன்றாக வளர்ப்போம். இந்த அபிமானம் குழந்தையிடம் இல்லாது போனால் அது இக்கற்றுச் சுற்ற வேண்டியதுதான். பகவான் அதனால்தான் குழந்தைகளிடம் அபிமானமும் பாசமும் பொங்கும்படி செய்திருக்கிறார்.

—ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சீ காமகோடி பீடம்

"இராச சிம்மா! நல்ல சமயத்தில் நீ தாய்நாட்டுக்கு வந்திருக்கிறாய். வடக்கே நம்முடைய எல்லையில் போர் தொடங்கி நடந்துகொண்டிருக்கிறது. உன்னுடைய வரவால் நம் படைவீரர்கள் உற்சாகமும் ஊக்கமும் அடையப் போகிறார்கள். சேர வீரர் படை உதவியும் நமக்குக் கிடைத்திருக்கிறது. இனி வெற்றி நம்முடையதாகத்தான் இருக்கும்" என்று அவனைச் சந்தித்துவிட்ட மகிழ்ச்சியோடு கூறினார் மகாமண்டலேசுவரர். அவர் முகத்தை நேருக்கு நேர்நோக்க வெட்கினான் அவன். கீழே குனிந்து கொண்டு பார்த்தவாறு, "சுவாமி! படைக்கும், உதவிகளுக்கும், ஒன்றும் குறைவே இல்லை. ஈழ நாட்டுக் காசிப மன்னரின் படைகூட இன்னும் சில நாட்களில் நம் உதவிக்கு வரலாம்" என்றான் இராசசிம்மன்.

"உன்னுடைய முகத்தில் போரைப் பற்றிப் பேசும்போது ஆவேசமே ஏற்படவில்லையே? இந்தச் சோர்வும், சோகமும் எங்கேயிருந்து உன் முகத்தில் வந்து படிந்தனவோ?" என்று அவன் முகத்தை வெளிச்சத்தில் நன்றாகப் பார்த்துவிட்டுக் கேட்டார் மகாராணி. மகாராணி இவ்வாறு கேட்டதும் இராசசிம்மனுடைய முகத்தில் மேலும் சோகக் களை வந்து கவிந்தது. அவன் நெட்டுயிர்த்தான். அவனுடைய கண்கள் கலங்கின. எதையோ கூறுவதற்கு அவன் உதடுகள் தயங்கித் துடித்தன.

அவன் என்ன கூறப் போகிறான் என்பதைத் தெரிந்து கொள்ளும் ஆர்வத்துடன் எல்லோருடைய விழிகளும் அவனுடைய முகத்திலேயே நிலைத்தன. ஆனால் அவன் வாய் திறந்து பேசுவதற்கு முன் கண்களின் குறிப்பினாலேயே வேறு ஒரு பேச்சும் அங்கு நிகழ்ந்தது. பயந்து

மீரனும் கண்களால் ஏதோ ஒரு குறிப்புத் தோன்றச் சேந்தன் முகத்தைப் பார்த்தாள் குழல்மொழி.

சேந்தன் மகா மண்டலேசுவரரைச் சிறிது தள்ளி அழைத்துக் கொண்டு போய் ஏதோ சொல்லி விட்டு வந்தான். அதைக் கேட்டு விட்டுத் திரும்பி வந்த மகாமண்டலேசுவரர், "குமார பாண்டியரிடம் ஒரு விநாடி தனியாகப் பேச விரும்புகிறேன். இப்படிக் கொஞ்சம் என்னுடன் வரலாமா?"— என்று பதறாத குரலில் தெளிவாகக் கூப்பிட்டார். குமாரபாண்டியன் மறுப்பின்றி அவருடன் சென்றான். கப்பல் துறைக்கு அருகேயிருந்த ஒரு பாறைக்குச் சமீபத்தில்போய் மகாமண்டலேசுவரரும் குமார பாண்டியனும் நின்றனர். மகாமண்டலேசுவரர் இருளில் அவன் காதருகே ஒவ்வொரு வார்த்தையாக நிறுத்திச் சொன்னார்: "இராசசிம்மா! சற்று முன் நீ எல்லோரிடமும் சொல்லி விடுவதற்கு இருந்த சோகச் செய்தி என்னவென்று நான் இப்போதுதான் சேந்தனிடம் அறிந்து கொண்டேன். 'பகவதி இறந்து போனாள்' என்ற செய்தியை இன்னும் சிறிது காலத்துக்கு வெளியிடாமல் இருந்தால் எல்லோருக்கும் நல்லது. நான் வெளியிடச் சொல்கிறவரை அதை வெளியிடுவதில்லை என்று எனக்கு வாக்குத் தத்தம் செய்து கொடு."

சொல்லிவிட்டு வாக்குத்தத்தத்துக்காக வலது கையை நீட்டினார் அவர். "சுவாமீ! என்னைச் சோதிக்காதீர்கள். நீங்கள் மிகப் பெரியவர். எவ்வளவு பெரிய துக்கத்தையும் அங்கீகரித்துக் கொண்டு உணர்ச்சி வசப்படாமல் நிமிர்ந்து நிற்கிற தெம்பு உங்களுக்கு உண்டு. நான் அப்படி மறைத்துக் கொண்டு நிற்கும் உறுதியற்றவன். என்னை மன்னித்து விடுங்கள். அந்தப் பெண்ணின் துர்மரணத்தை என்னால் ஒளிக்க முடியாது. உங்கள் பெண்ணும் சேந்தனும் கூட அந்தத் துயர உண்மையை மறைத்துக் கொண்டு இருந்து விடுவார்கள். என்னால் முடியாதே!" என்று நாத் தழுதழுக்கச் சொன்னான் குமார பாண்டியன்.

"நீ கட்டாயம் அதை மறைத்துத்தான் ஆக வேண்டும். இப்போது நடந்து கொண்டிருக்கும் போரில் தென்பாண்டி நாடு வெற்றி பெற வேண்டுமென்றால் இந்த வாக்கை நீ எனக்குச் சத்தியம் செய்து கொடு. இல்லாவிட்டால் உன் விருப்பம் போல் செய். இதற்குமேல் உன்னைக் கெஞ்சிக் கொண்டிருக்க எனக்குத் தெரியாது"—ஒரு கணம் குமார பாண்டியன் என்ன பதில் கூறுவதென்று தயங்கினான். அடுத்த விநாடி, "உங்கள் விருப்பப்படியே செய்கிறேன்" என்று அவருடைய வலது கையில் தன் வலது கையை வைத்துச் சத்தியம் செய்து கொடுத்தான். மகாமண்டலேசுவரர் அவன் முதுகில் தட்டிக் கொடுத்தார்.

"சுவாமீ! தளபதி வல்லாளதேவனைப் போர்க்களத்துக்கு அனுப்பியிருக்கிறீர்களா?" என்று கேட்டான் இராசசிம்மன்.

"இல்லை! கோட்டாற்றுப்படைத்தளத்தில் தனியே சிறைப்படுத்தி வைத்திருக்கிறேன். இதைக் கேட்டு ஆச்சரியப்படாதே. இந்த உண்மையும் இப்போதைக்கு உன் மனத்தோடு இருக்கட்டும்."

"இதெல்லாம் என்ன விபரீதங்களோ? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே?"

"கவலைப்படாதே, இராசசிம்மா! எல்லாம் போகப் போக விளங்கும்."

அவர் இப்படிச் சொல்லி வாய் மூடவில்லை. அவர்கள் நின்று பேசிக் கொண்டிருந்த இடத்தை ஒட்டி அமைந்த பாறையின் மறுபுறமிருந்து தேங்காய்ப் பருமனுக்கு ஒரு கல் 'விர்'ரென்று வீசி எறியப் பட்டுப் பறந்து வந்தது. அந்தக் கல் மகா மண்டலேசுவரரின் மகுடத்தில் விழுந்து அதைக் கீழே வீழ்த்தியது. குமாரபாண்டியன் வாளை உருவிக்கொண்டு ஓடினான். ஓசை கேட்டுச் சேந்தனும் ஓடி வந்தான். "நில்லுங்கள். மகுடம்தான் விழுந்தது. என் தலை இன்னும் இருக்கிறது!" என்று சிரித்துக் கொண்டே அவர்களைத் தடுத்து நிறுத்தினார் மகாமண்டலேசுவரர். பாறையின் மறுபுறத்திலிருந்து யாரோ இருவர் விழுந்தடித்துக் கொண்டு ஓடும் ஓசை கேட்டது.

## அத்தியாயம் 15

# ஒரு பிடி மண்

"சுவாமீ! இதென்ன அநியாயம்? எவனோ அக்கிரமம் செய்துவிட்டு ஓடுகிறான். அவனைப் பிடிக்கலாமென்றால், போகவிட மாட்டேன் என்கிறீர்கள்"— என்று இராசசிம்மனும், சேந்தனும் மகா மண்டலேசுவரரோடு மன்றாடிக் கொண்டிருந்தபோது அவர் பதில் சொல்லாமல் இருட்டில் கீழே விழுந்த மகுடத்தைத் தேடி எடுத்து அணிந்து கொண்டார்.

"இந்த முடியை நானே ஒருநாள் கீழே கழற்றி வைக்கத்தான் போகிறேன். அதற்குள் என் எதிரிகள் ஏன் இவ்வளவு அவசரப்படுகிறார்களோ, தெரியவில்லை!" என்று அவர் கூறியபோது அதில் எத்தனையோ அர்த்தங்கள் தொனித்தன. அவர் இதைக் கூறியபோது அவருடைய முகத்தைப் பார்க்க வேண்டுமென்று சேந்தனுக்கும், இராசசிம்மனுக்கும் ஆசையாயிருந்தது. ஆனால் இருளில் முகம் தெரியவில்லை.

"வாருங்கள்! போகலாம்!" என்று எதுவும் நடக்காதது போல் கூறியபடியே அவர்கள் இருவரும் பின்தொடரக் கப்பலுக்கு அருகே வந்தார் அவர்.

"அதுஎன்ன? அங்கே நீங்கள் போய்ப் பேசிக்கொண்டிருந்த இடத்தில் ஏதோ ஓசை கேட்டதே?" என்று மகாராணி வானவன் மாதேவியார் வினவினார்.

"ஒன்றுமில்லை! ஏதோ ஒரு கல் காலில் இடறியது. அதைத் தூக்கி எறிந்தேன்" என்று சாதாரணமாகச் சொல்லிவிட்டுக் குமார பாண்டியனுடைய முகத்தையும், சேந்தனுடைய முகத்தையும் பார்த்தார் மகாமண்டலேசுவரர்.

அப்போது தூறிக்கொண்டிருந்த மழை நின்று போயிருந்தது. கப்பலிலிருந்து பொருள்களெல்லாம் இறக்கப்பட்டு விட்டன. "இங்கேயே நின்று கொண்டிருப்பானேன்? வாருங்கள்! எல்லோரும் விழிஞத்து அரச மாளிகையில் போய்த் தங்கலாம்" என்று முன்னால் நடந்தார் மகாராணி. எல்லோரும் சென்றார்கள். விடிவதற்குச் சிறிது நேரமே இருந்தது. யாரும் உறங்கவில்லை. குழல்மொழியும் விலாசினியும் ஒரு மூலையில் உட்கார்ந்து மகாராணி வானவன் மாதேவியாரோடு பேசிக் கொண்டிருந்தார்கள்.

அதங்கோட்டாசிரியரும், பவழக் கனி வாயரும், குமார பாண்டியருக்குக் காந்தளூர் மணியம்பலத்து நிலைகளைப் பற்றி விவரித்துச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். வேறோர் மூலையில் சேந்தனும், மகாமண்டலேசுவரரும் இரகசியமாக ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். விடிகிற நேரம் நெருங்க நெருங்கத் துறைமுகத்தின் வழக்கமான ஒலிகளும், கலகலப்பும், ஆள் பழக்கமும் அதிகமாயின.

இவர்களெல்லோரும் விழிஞத்து அரச மாளிகையில் இவ்வாறு பேசிக்கொண்டிருந்த சமயத்தில் விழிஞத்தின் ஒதுக்குப் புறமான வேறோர் பகுதியில் நடந்து கொண்டிருந்த மற்றொரு சம்பவத்தைக் கவனிக்கலாம். அந்த இடம் கடற்கரையிலிருந்து நெடுந்தொலைவு விலகியிருந்தது. செடி கொடிகளும், பெயர் வேறுபாடு தெரியாத பலவகைக் காட்டு மரங்களும் அடர்ந்த பகுதி அது. பகற்போதிலேயே மயான அமைதி நிலவுகிற இடம் அது.

அங்கே குருதிக் கொழுந்துகள் போல் பூத்திருந்த ஒரு செவ்வரளிப் புதரின் கீழே தளபதி வல்லாள தேவனும், ஆபத்துதவிகள் தலைவனும் உட்கார்ந்திருந்தனர். தளபதி குமுறிக் குமுறி அழுது கொண்டிருந்தான். அவன் கண்கள் கன்னிப் பழங்களைப் போலச் சிவந்திருந்தன. குழைக்காதன் தளபதிக்கு ஏதோ ஆறுதல் கூறித் தேற்ற முயன்று கொண்டிருந்தான்.

"குழைக்காதரே! என் அருமைத் தங்கையின் முடிவு இப்படியா ஆக வேண்டும்? அன்பையும், ஆதரவையும் செலுத்த எனக்கு இனிமேல் யார் இருக்கிறார்கள்? அவள் போனபின்பும் நான் இனி எதற்காக உயிர் வாழ வேண்டும்? கடல் கடந்து போய் எத்தனையோ பெரிய காரியங்களைச் சாதித்துக் கொண்டு வரப் போகிறாள் என்று கனவு கண்டு கொண்டிருந்தேனே! அங்கே போய் உயிர்விடுவதற்காகவா அவளை அனுப்பினேன்?" என்று தளபதி அழுது புலம்பிய அவலக் குரல் மனித நடமாட்டமற்ற அந்தக் காட்டில் எதிரொலித்தது.

"மகா சேனாதிபதி! அந்தச் செய்தியைக் கேட்டது முதல் என் உள்ளம் எவ்வளவு கொதிப்படைந்திருக்கிறது, தெரியுமா? கப்பலிலிருந்து குமார பாண்டியருடன் தங்கள் தங்கையார் இறங்குவாரென்று எவ்வளவு ஆவலோடு பாறை மறைவிலிருந்து பார்த்துக் கொண்டிருந்தோம் நாம்? மகாமண்டலேசுவரர் நாம் ஒளிந்திருந்த பாறைக்கு அருகில் வந்து குமார பாண்டியரிடம் அந்த இரகசியத்தை வெளியிடக் கூடாதென்று கேட்டுக் கொண்டபோது தானே நமக்கே அந்த உண்மை தெரிந்தது? அந்தச் செய்தியைக் கேட்டவுடன் எனக்கு ஏற்பட்ட கொதிப்பில் எவ்வளவு பெரிய கல்லைத் தூக்கி மகாமண்டலேசுவரர் மேல் வீசினேன்? அந்தப் பாழாய்ப் போன கல் அவர் மண்டையை உடைத்து நொறுக்கியிருந்தால் எனக்குத் திருப்தியாயிருக்கும்? மகுடத்தைக் கீழே தள்ளியதோடு போய் விட்டதே!" என்று சோக வெடிப்பில் உண்டான கோபத்தோடு சொன்னான் குழைக்காதன்.

அதுகாறும் பொங்கி எழும் அழுகையோடு சோகத்தில் துவண்டு போய் வீற்றிருந்த மகாவீரன் வல்லாளதேவன் திடீரென்று ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவன் போல் எழுந்து நின்றான். அழுகை ஓய்ந்தது. கண்ணீரைத் துடைத்துக் கொண்டான். முகத்தில் வைரம் பாய்ந்த உணர்ச்சி ஒன்று கால் கொண்டு பரவியது. கண்களில் பழி வாங்கத் துடிக்கும் உணர்வொளி மின்னியது. முகம் சிவந்து மீசையும் உதடுகளும் துடித்தன. ஆவேசமுற்ற வெறியாட்டக்காரன் போல் விறைப்பாக நின்று கொண்டு சூளுரைத்தான் அவன்.

"குழைக்காதரே! இந்தக் கணத்திலிருந்து நான் அயோக்கியனாக மாறப் போகிறேன். கடமை, நன்றி, நியாயம், அறம் இவைகளைப் பற்றிக் கவலைப்படப் போவதில்லை. கருணையும், அன்பும், எனக்கு இனிமேல் தேவையில்லை. அவைகளை நான் யார்மேல் செலுத்தமுடியுமோ, அந்த அருமைச் சகோதரி போய்விட்டாள். என் ஒரே உறவு அழிந்துவிட்டது. என் உடன்பிறந்த இரத்தம் துடிக்கிறது. பறிகொடுத்த மனம் பதறுகிறது. இனி எல்லோரும் எனக்கு வேண்டியவரில்லை. நான் இரத்தப் பசி மிகுந்த கோர ராட்சசனாக உருவெடுக்கப் போகிறேன். ஞானிக்குத் துன்பம் வந்தால் அதைமாதிரித் துன்பம் பிறருக்கு வராமல் காப்பான். முரடனுக்கு ஒரு துன்பம் வந்தால் ஆயிரம் பேருக்கு ஆயிரக்கணக்கான துன்பங்களை விளைவிப்பான். நான் முரடன், எனக்கு எதிரி மகாமண்டலேசுவரர் ஒருவர் மட்டுமில்லை. மகாராணி, இளவரசர், அந்தக் குட்டைச் சேந்தன், மகாமண்டலேசுவரரின் பெண், இந்த

காடு. இந்தத் துன்பத்தை எனக்கு அளித்த எதிரிகளில் தலையாய விதி என்னும் எதிரி — எல்லோரையும் எல்லாவற்றையும் நிர்மூலமாக்கப் போகிறேன் நான். என் தங்கைக்கு இல்லாத உயிர் வாழ்வு எவருக்கும் இல்லாமல் செய்துவிடப் போகிறேன். என்னை இது வரையில் தலைநிமிர முடியாமல் செய்து வந்த அறிவின் பரம்பரையைப் பூண்டோடு அழித்தேவிடப் போகிறேன், பாருங்கள்!'' என்று கூப்பாடு போட்டுக்கொண்டு கீழே குனிந்து வலது கையால் ஒரு பிடி மண்ணை அள்ளிக் காற்றில் தூவினான் தளபதி. குழைக்காதன் பயத்தோடு பார்த்துக் கொண்டு நின்றான். தளபதியின் வெறியை என்ன கூறி எப்படி ஆற்றுவதென்றே அவனுக்கு விளங்கவில்லை. மூட்டாத காலக் கடைத்தீயாக, ஊழி நெருப்பாக, உக்கிராகாரமான கொதிப்பின் கம்பீர பிம்பமாக எழுந்து நின்றான் தளபதி.

''மகா சேனாதிபதி! இந்த அழிக்கும் வேலையில் நம்மோடு ஒத்துழைப்பதற்கு வேறு மனிதர்களும் இருக்கிறார்கள். அவர்களையும் சந்தித்து நம்மோடு சேர்த்துக் கொள்ளலாமோ?'' என்று அருகில் நெருங்குவதற்குப் பயந்து கொண்டே மெதுவாகக் கேட்டான் குழைக்காதன்.

''யார் அவர்கள்?''

''கழற்கால் மாறனும் அவரைச் சேர்ந்தவர்களும்.''

''எங்கே சந்திக்கலாம் அவர்களை?''

''பொன்மனைக்குப் போனால் அவர்களைச் சந்திக்கலாம்!''

''புறப்படுங்கள் பொன்மனைக்கு.''

தளபதி வேகமாக நடந்தான். குழைக்காதனும் பின்பற்றினான். காட்டு எல்லை கடந்து மக்கள் பழக்கம் மிகுந்த இடம் வந்ததும் தங்கள் தோற்றங்களைப் பிறர் எளிதில் அடையாளம் கண்டு கொள்ள இயலாதபடி மாற்றிக்கொண்டு பொன்மனைக்கு விரைந்தனர் அவர்கள் இருவரும். பொழுது நன்றாக விடிந்துவிட்டது. பகல் பவனி வரத் தொடங்கியிருந்தது அப்போது.

(தொடரும்)

கொச்சைத் தமிழ்

## நன்மையும் தின்மையும்

பிச்சைக் குழந்தைகள் பேசும்பொழுதும் பாமர மக்கள் பேசும்பொழுதும் கொச்சை மொழிகளைக் கேட்கலாம். பாமர மக்கள் பேசும் தமிழில் பொருளற்ற அடுக்குச் சொற்கள் மிகுந்திருக்கும். ''பல்லு கில்லு தேச்சாச்சா? காப்பி கீப்பி சாப்பிட்டாச்சா? வீடு கீடு கிடைக்குமா? மழை கிழை உண்டா?'' என இவ்வாறு வரும் அடுக்குச் சொற்கள் பலப்பல. இவற்றில் முதல் சொல்லுக்குப் பொருள் உண்டு. அடுத்து எதுகையாக வரும் சொல்லுக்குப் பொருள் இல்லை. இப்படி வெற்று எதுகையில் வரும் சொற்கள் ககர வர்க்கத்திலே தொடங்கக் காணலாம்.

இன்னொரு வகையான அடுக்குப் பேச்சும் தமிழிலே உண்டு. 'வம்பு தும்புக்குப் போகாதே; தக்குப் புக்கென்னு நடக்காதே; தண்டாமுண்டா பண்ணாதே; காச்சுப் பீச்சுன்னு கத்தாதே'—இவை போன்ற அடுக்குச் சொற்களிலும் முதற் சொல்லை அடுத்து வரும் சொல்லுக்குப் பொருள் இல்லை. ஆயினும், தொடர்ந்து வரும் சொல் ககர வர்க்கத்திலேதான் தொடங்க வேண்டும் என்ற கட்டுப்பாடில்லை. இத் தன்மை வாய்ந்த அடுக்கு மொழிகள் மெல்ல மெல்ல இக்காலப் பாட்டிலும் உரையிலும் ஏறிவிட்டன. 'வாட்ட சாட்டமாய், திட்ட வட்டமாய், கொஞ்ச நஞ்சம், பாக்கி சாக்கி, சால மாலம்' முதலிய சொல்லடுக்குகளை நவீன நூல்களில் காணலாம்.

இவற்றைப் பார்க்கும்போது எதுகைப் பேச்சில் பாமர மக்களுக்கு உள்ள மோகம் நன்றாகத் தெரிகின்றது. எதுகையும் மோனையும் பாட்டுக்குத்தான் அழகு என்பதில்லை; பேச்சுக்கும் அவை நன்று என்று பொது மக்கள் கருதுகின்றார்கள். அதனாலன்றோ, எதுகை மோனை என்பதை 'எகனை மொகனை' என்று ஆக்கினார்கள். மோனை என்ற சொல்லோடு இசையும் வண்ணம் எதுகை என்னும் இலக்கியப் பதத்தை எகனை என்று ஆக்கிவிட்டார்களே!

இவ்வாறு எதுகை நயத்துக்காக மாற்றப்பட்ட மற்றொரு சொல் 'நன்மை தின்மை' என்பது. நன்மைக்கு மாறானது தீமை என்று இலக்கியத் தமிழ் கூறும். ஆயினும் நன்மை தீமை என்று சொல்லும் பொழுது எதுகை நயம் இல்லையல்லவா? அதற்காகத் தீமை என்பதைத் தின்மை என்றாக்கி நன்மை தின்மை என்று நாடோடித் தமிழில் வழங்கலாயினர். நாளடைவில் நன்மை தின்மை என்பது இலக்கியத் தமிழிலும் இடம் பெற்றது. கவியரசர் என்று போற்றப்படும் கம்பரே அதை எடுத்து ஆண்டுவிட்டார் என்பர்.

''நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே''

என்ற பாட்டில் நன்மையும் தின்மையும் எதுகையில் அமைந்து அழகு செய்கின்றன.

— டாக்டர் ரா. பி. சேதுப் பிள்ளை

ஸ்கூல்கள் சீக்கிரத்தில் திறந்துவிடும் குழந்தைகளுக்கு புது துணி வாங்க இதுவே சமயம்

# பின்னி துணிகளில் அவர்கள் அழகுடன் விளங்குவதைக் கண்டு நீங்களே பெருமிதம் அடைவீர்கள்

எந்த கடினமான உபயோகத்தையும் பின்னி துணிகள் சமாளிக்கும். உங்கள் குழந்தைகளின் தோற்றத்திற்கு அவை அழகும், கவர்ச்சியும் ஊட்டும் தன்மையுடையவை. ஒவ்வொருவருடைய ருசிக்கும் ஏற்ற பற்பல கலர்களும், ரகங்களும் உண்டு. குழந்தைகளின் உடுப்புகளுக்கென பின்னி துணிகளையே பல ஸ்கூல்கள் சிபார்சு செய்கின்றன.

## D. 318 & F. S. 105

சிறுமிகளுக்கு மிகவும் உகந்தது—பல கலர்களில் கிடைக்கிறது.

## டிரில்

வெள்ளை, காக்கி மற்றும் நீல கலர்களில் கிடைக்கும். குழந்தைகளின் அரை நிஜார்களுக்கு ஏற்ற துணி.

## லஸ்டலின்

வெள்ளை மற்றும் கண்ணுக்கு இதமான கலர்கள் உண்டு. ஷர்ட்டுக்கும், ரவிக்கைக்கும் உகந்தது.

## டஸ்ஸோர்

ஷர்ட்டுகளுக்கும் சூட்டுகளுக்கும் ஏற்றது.

## ஸெல்லூலர் ஷர்ட்டிங்

வெளுக்கப்பட்ட B. D. 401 ரகமும், சிறுவர்களுக்கென காக்கி கலரிலும் கிடைக்கும்.



பக்கிங்ஹாம் & கர்னாடிக் கம்பெனி லிமிடெட், மானேஜிங் ஏஜெண்டுகள்: பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட்

(சென்ற இதழ் தொடர்ச்சி)



# கல்லோவியத்தின் சொல்லோவியம்



இ. ராஜேந்திரன்

## 8. ஆவுடையார்கோயில்

கோவிலுக்குள் நுழைந்ததுமே, ''எனக்குப் பைத்தியம் பிடித்து விடும் போலிருக்கிறது, ஸார்! ஒன்றுமே புரியவில்லை'' என்று சொன்னார் ஓவியர் வினு.

''ஐயய்யோ! அப்படியானால் அது முற்றுவதற்கு முன்னால் திரும்பிப் போய் விடலாம்'' என்றேன் நான். அப்படிச் சொல்லி வரும்போதே எனக்கும் கொஞ்சம் பைத்தியம் பிடித்து விடும் போலத்தான் தெரிந்தது!

என் நிலையைக் கண்டு நானே பயந்துபோய், அகிலனையும் ஆத்மநாதனையும் உடல் நலம் பற்றி விசாரித்தேன்.

''சந்தேகமென்ன? எங்களுக்கும் பித்துப் பிடித்துத்தான் இருக்கிறது!''

''கலைப்பித்து! சிற்பப் பைத்தியம்!''

ஆவுடையார் கோயிலுக்குள் நுழையும் எவருக்குமே இந்தக் கதிதான். எந்தப் பக்கம் திரும்பினாலும் சிற்பங்கள்தான்; சொல்லோவியங்களைக் கூறும் கல்லோவியங்கள்தான்.

மீசையை முறுக்கிக் கொண்டு அலட்சியமாக நிற்கும் வேடுவன், பூக்கூடையை தூக்கிச் செல்லும் குறத்தி, நரி பரியாகிய கதையைக் கூறும் சிற்பம், ஈசனுடன் நடனமாடித் தோற்று வெட்கம் மேலிடக் கைகளைப் பிசைந்து நிற்கும் சக்தி, இன்னும் எத்தனை எத்தனையோ கண்கொள்ளாக் காட்சிகள். இடையிடையே மாணிக்கவாசகரின் பல்வேறு விதமான தோற்றங்கள்.

மாணிக்கவாசகருக்கு அவர் தேடிச் செல்லாமலேயே மந்திரி பதவி கிட்டியதாம்! அதிர்ஷ்டக்காரர் என்று நினைக்கிறீர்களா? அதுதான் கிடையாது. அதிர்ஷ்டக்காரராயிருந்தால் கிடைத்த பதவியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்க மாட்டாரா?

அவர் ரொம்பப் புத்திசாலி என்று கேள்விப்பட்டு அரிமர்த்தன பாண்டியன் அவரை அமைச்சராக்கினான். கொஞ்ச நாட்களிலேயே புத்திசாலித்தனம் வெட்ட வெளிச்சமாகிவிட்டது. குதிரைகள் வாங்கக் கொடுத்த பணத்தைக்கொண்டு போய்க் கொட்டித் திருப்பெருந்துறையில் கோவில் கட்டி விட்டார்! அப்புறம் அரசனுக்குப் பதில் சொல்ல சாட்சாத் சிவபெருமானே நரிகளையெல்லாம் பரிகளாக்கிக் கொண்டு மதுரைமா நகருக்கு வர வேண்டியதாயிற்று!

இறைவனை வழிபடச் சென்றபோது சந்நிதியில் மூர்த்தியைக் காணாமல் திடுக்கிட்டேன். என் திகைப்பை அறிந்து அருகேயிருந்த குருக்கள், ''ஈசனின் பெயர் ஆத்மநாதர், அம்பாள் யோகாம்பிகை. இங்கே ஈசனோ அம்பாளோ எந்த விதமான உருவமும் கொண்டில்லை. அருபிகளாக விளங்குகிறார்கள்'' என்றார்.

'நாதனுள்ளிருக்கையில் உருவ வழிபாடுதான் எதற்கு?' என்று உணர்ந்தேன் நான்.

இந்து மதத்தின் உயர்வை, சிறப்பை, சிகரத்தை அங்கே காண முடிந்தது. அகிலன் அவர்களோ,

அன்பருக் கன்பனே
யாவையுமா யல்லையுமாஞ்
சோதியனே துன்னிருளே
தோன்றாப் பெருமையனே

என்ற திருவாசகப் பாடலுக்கு இப்போதல்லவா பொருள் புரிகிறது'' என்று கூறிப் பரவசமானார்கள்.

ஒரு பீடம் மட்டும் இறைவனின் இருப்பிடத்தைக் குறிக்கிறது. அபி




ஷேகம் இதற்குத்தான். அதனையே ஆவுடையாராகக் கருதி விடுவதால் கோயிலையும் ஆவுடையார் கோயில் என அழைக்கிறார்கள். ஊருக்கும்கூடத் திருப்பெருந்துறை என்ற பெயர் மாறி ஆவுடையார் கோயில் என்றே நிலைத்து விட்டது.

கற்பாறைகளோ, குன்றுகளோ இல்லாத ஒரு பிரதேசத்தில் இவ்வளவு வேலைப்பாடுகளுடன் பிரும்மாண்டமான ஆலயம் எழுப்பிய மக்களை, ஆலயத்தைவிட உயர்ந்த அவர்களது பக்தியை வாழ்த்தி வணங்கிக் கொண்டே தஞ்சை மா நகருக்குப் புறப்பட்டோம்.




## 9. ராஜராஜேசுவரம்

**ப**ரண்கட்டி அதன்மீது படுத்துக் கொண்டு, 'கல் கல்' என்று சிற்றுளி ஒலி எழுப்பக் கல்லோவியங்களை மேல் விதானத்தில் உருவாக்கிக் கொண்டிருந்தான் சிற்பி. வாயிலிருந்த வெற்றிலையை நன்கு மென்ற பிறகு எச்சிலைத்துப்பக் கிண்ணத்தை ஏந்தி நிற்கும் சிற்றாளைக் கூப்பிட்டான். பதில் இல்லை. 'வேலை தடைப்படுகிறதே' என்ற கோபத்தில் இன்னொரு முறையும் உரக்க அழைத்தான். சிற்றாள் அங்கு இருந்தால்தானே ஏன் என்று கேட்க?

அப்போதுதான் திருப்பணியைப் பார்வையிட அரசன் மண்டபத்துக்குள் நுழைந்தான். சிற்பி சிற்றாளை அழைப்பது அவனுக்குக் கேட்டது. உடனே, ''இதோ'' என்று பதிலுரைத்தபடியே கிண்ணத்தை ஏந்தி நின்றான். எச்சிலை உமிழ்ந்த பிறகுதான் க்ஷமமே கண்ணுயிருந்த சிற்பி அரசன் என்று உணர்ந்தான். அவன் காலடிகளில் விழுந்து அரசனுக்கு ஆணையிடத் துணிந்த நாவைத் தானே துண்டித்து விடுவதாகச் சபதம் செய்தான்.

சிற்பியை வாரி எடுத்து அணைத்தார் மன்னர். கடுமையான சபதம் செய்துவிட்ட அவன் வாயைப் பொத்தி, புன்முறுவலுடன் அவனை மன்னித்துஅருளினார். ''வேலை தடைப்பட வேண்டாம், தொடருங்கள்'' என்று அன்புப் பணியிட்டார்!

இது கதைதான். உண்மை என்று சொல்லத்துணியவில்லை. ஆறும் உண்மையாக இருக்






குமேயானால் அதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமே யில்லை. அன்பினால்தான் கலை வளர முடியுமே ஒழிய, அதிகாரத்தினால் வளராது. கலை வளர்த்த தமிழ் மன்னர்கள் கலைஞர்களிடம் அன்பையும் வளர்த்திருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை. இந்த எண்ணம் ராஜராஜேசுவரத்தைப் பார்த்ததும் மேலும் உறுதிப்





பட்டது. விண்ணும் மண்ணும் கடந்த இறைவனுக்கு விண்ணும் மண்ணும் கண்டறியாத அளவில் வானளாவும் ஆலயம் எழுப்பினான் ராஜராஜன். இன்று அத்தனை பேரும், ஆச்சர்யப்படும்படி நிற்கும் ராஜராஜேசுவரத்தைக் கட்டி முடிக்க ஐந்து அல்லது ஆறு வருஷங்கள்தான் ஆகியிருக்கும் என்கிறார்கள் சரித்திர ஆராய்ச்சியாளர்கள்.

பொன்னியின் 'செல்வனாகிய' ராஜராஜன் சிவநேசச் செல்வனாகவும் விளங்கியதற்கு அவன் தமக்கை குந்தவையும், பெரிய பாட்டியும் சிவபக்தர் கண்டராதித்த சோழரின் மனைவியுமாகிய செம்பியன்மாதேவியும் தான் காரணம். இதனால் சிவபாதசேகரன் என்ற பட்டமும் பெற்றான். இருப்பினும் விசாலமான சமய நோக்கம் கொண்டவன் என்பது இங்கு காணப்படும் வைணவ புராண சிலைகளாலும் புத்தர் சிலைகளாலும் தெரிகிறது. எல்லாவற்றையும்விட அதிசயம் ஒரு ஐரோப்பியனுடைய உருவச் சிலையும் இங்கு காணப்படுவதுதான். இது மார்க்கோபோலோவாக இருக்கலாம் என்று சில ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். கோவிலுக்குத் திருப்பணிகள் குறைவில்லாமல் நடைபெற நிபந்தங்கள்பல ஏற்படுத்தினான். எண்ணற்ற ஆபரணங்களும் பாத்திரங்களும் நெல்லினையும் கிராமங்களும் அளித்தான். ஆடல் மங்கையரையும் காப்பாளரை



1. சிங்கத்தின் வாயினுள்ளே சுரங்கப் பாதை; 2. நந்தி பகவான்; 3. சண்டேச அனுக்ரஹமூர்த்தி 4. ஞான சரஸ்வதி; 5. கங்கை கொண்ட சோளீசவரம்; 6. சம்ஹாரமூர்த்தி (1-6 கங்கைகொண்டசோழபுரம்); 7. பழையாறையில் மொட்டைக் கோபுரம்; 8. பிக்ஷாடனர் - ஆவுடையார் கோயில்; 9. நரி பரியான கதை - ஆவுடையார் கோயில்; 10. ராஜராஜேசுவரம் - தஞ்சை.

யும் கணக்கர்களையும் நியமித்தான். அந்த நடன மங்கையரையும் பக்கவாத்தியமாக மொரலியம், உடுக்கை, பறை, வீணை முதலியவற்றை வாசித்தோரையும் ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர் இன்றும் அந்தக் கோவில் சுவர்களில் அழியாத வண்ண ஓவியங்களில் காண முடிகிறது.

## 10. சந்திரலேகை

தஞ்சைக்கு வடமேற்கேயுள்ள சிறிய கிராமம் இது. இங்குள்ள சிவாலயத்தில் காணப்படும் பல அரிய கல்வெட்டுக்களினால் அதி முக்கியத்துவம் பெற்றுவிட்டது இந்தக் கிராமம்.

சந்திரலேகையைத் தலைநகராகக் கொண்டு இதனைச் சூழ்ந்த நாட்டை முத்தரையர் என்ற குறுநில மன்னர்கள் ஆண்டு வந்தனர். பல்லவர்களுக்குக் கீழ் சிற்றரசர்களாக அவர்களுக்குத் திறை செலுத்தி வந்த இவர்கள் தஞ்சை மாநகரையும் தமதாக்கிக் கொண்டிருந்தனர். அச்சமயம் சோழர்களும் பல்லவர்களுக்குக் கீழ் சிற்றரசர்களாகப் பழையாறையிலிருந்து வந்தனர்.

விஜயாலயசோழன் முத்தரையரைத் தாக்கித் தஞ்சையைக் கைப்பற்றியதன் மூலம் பிற்காலச் சோழர்களின் ஆதிக்கத்துக்கும் மேன்மைக்கும் அடிகோலினான்.

இப்போது செந்தலை என்று அழைக்கப்படும் சந்திரலேகையை ஆண்ட முத்தரையர்கள் கொடும்பாளூர் வேளிருடன் திருமணங்கள் மூலம் நட்பும் உறவும் கொண்டாடினர். கொடும்பாளூர் வேளிரைப் பல்லவர் பக்கமாகத் திருப்ப இந்தச் சம்பந்தங்கள் நிகழ்ந்திருக்கலாம் என்று ஊகிக்கப்படுகிறது. ஆனால் இறுதியில் வேளிர் சோழர்களிடமும் முத்தரையர் பல்லவர்களிடமும்தான் விசுவாசத்துடன் இருந்திருக்கிறார்கள்.

முத்தரையரும் வேளிரும் உறவாக இருந்த காலமும் உண்டு; பகையோடிருந்த காலமும் உண்டு என்று இங்குள்ள கல்வெட்டுக்களிலிருந்து அறிகிறோம்.

## 11. தாராசுரம்

இரண்டாம் ராஜராஜனையும் அவனது மனைவியையும் தஞ்சாவூரிலே சந்தித்து. ''சௌக்கியமா?'' என்று விசாரித்தோம். அவர்களும் கைகூப்பி வணக்கம் தெரிவித்தார்கள். ''இந்த ராஜராஜேசுவரத்தை மட்டும் பார்த்து விட்டுப் போனால் சும்மா விடமாட்டோம். எங்களுடைய ராஜ ராஜேசுவரத்தையும் பார்த்தால்தான் ஆயிற்று'' என்று புன்முறுவலுக்கிடையே சொன்னார்கள். அரசன் ஆணையிட்ட பிறகு மறுப்பது எப்படி? கிளம்பினோம் தாராசுரத்துக்கு.

என்ன யோசிக்கிறீர்கள்? தஞ்சை கலைக் கூடத்தில் இன்னும் இரண்டாம் ராஜராஜனும் அதிரூபவதியாக விளங்கும் அவன் தேவியாரும் இருக்கத்தான் செய்கிறார்கள்.

அருள்மொழி வர்மனுக்கு நூற்றைம்பது ஆண்டுகளுக்குப் பிறகு பட்டத்துக்கு வந்த இரண்டாம் ராஜராஜன் தாராசுரம் கோயிலை எடுப்பித்தான். இந்த ஊருக்கே ராஜராஜேசுவரம் என்றுதான் பெயர். நாளடைவில் அது தாராசுரம் ஆகிவிட்டதாம். ஏன் ஆகக் கூடாது? ஹாமில்டன் பிரிட்ஜ் அம்பட்டன் வாராவதி ஆகுமானால் ராஜராஜேசுவரம் ஏன் தாராசுரம் ஆகக் கூடாது? கண்டிப்பாக மாறியே தீரவேண்டும்!

இந்தக் கோவிலில் சிலை உருவிலிருந்த இரண்டாம் ராஜராஜனையும் அவன் தேவியாரையும்தான் தஞ்சைக் கலைக்கூடத்திலே கொண்டு போய் வைத்திருக்கிறார்கள். இந்தச் சிலைகளை உருவாக்கியவன் சாதாரணமான கற்றுக்குட்டி சிற்பி என்றும் அதனால்தான் கோவிலிலுள்ள மற்றச் சிலைகளைப் போல் கம்பீரமாகத் தோற்றமளிக்காமல் கட்டையாகவும் குட்டையாகவும் இருக்கிறது என்றும் சொன்னார்கள்.

இதனை எங்களால் ஒப்புக் கொள்ள முடியவில்லை. உண்மையில் இச்சிலைகளை உருவாக்கியவன் பெரிய மேதையாக இருக்க வேண்டும். 'தெய்வத்தின் சக்திக்கு எதிரே மன்னனாயிருந்த போதிலும் மானிடன் எம்மாத்திரம்?' என்று கூறுவது போல் மற்றச் சிலைகளில் காணப்படும் காம்பீர்யம் இந்தச் சிலைகளில் இல்லாமல் செய்திருக்கிறான் சிற்பி. அதற்குப் பதில் அடக்க ஒடுக்கமாகவும் பக்தி சிரத்தையுடனும் நிற்கிறார்கள்.

தாராசுரம் கோயிலுக்குள் நுழைந்ததும் முன் கால்களைத் தூக்கிக் கொண்டு பாய்ந்தோடக் காத்திருக்கும் குதிரையைக் காண்கிறோம். அது இழுத்துச் செல்லும் ரதமாகக் கோவிலே அமைந்து விட்டது.

கோவிலுக்குப் பின்புறமுள்ள மண்டபப் படிக்கட்டு ஒன்றில் யானை மீது பாயும் சிங்கத்தைச் செதுக்கி யிருக்கிறார்கள். மண்டபத்தின் கீழ்ப் பாகத்தில் வரிசையாகச் சிறிய சிறிய அளவில் ஏராளமான சிற்ப சித்திரங்கள் இருக்கின்றன. ஒவ்வொன்றும் ஒரு சிறுகதையைக் கூறுகின்றது.

ஒவ்வொரு சிற்பத்தையும் நிதானமாகப் பார்த்து ரசித்து விட்டு காருக்கு வந்து சேர்ந்தோம். காரில் ஏறும்போது எங்களில் ஒருவர் குறைவது போல் தோன்றவே சுற்றுமுற்றும் பார்த்து விட்டு, ''விஜு எங்கே?'' என்று கேட்டேன். மற்றவர்களும் அதே கேள்வியைத் திருப்பிக் கேட்டார்கள். ''விஜு எங்கே? விஜு எங்கே?'' என்று கேட்டபடியே இங்குமங்குமாகத் தேடிக் கொண்டு ஓடினோம்.

பார்த்தால் மனிதர் நிம்மதியாகத் தரையில் சம்மணம் போட்டு உட்கார்ந்து கொண்டு நோட்டுப் புத்தகத்தில் பென்சிலை ஓடவிட்டுக் கொண்டிருந்தார். அருகே சென்று பார்த்தோம். அவர் எதிரே ஒரு அன்னபூரணி. ஒரு கையில் அன்னக் கலசமும் மற்றொரு கையில் மலர் மொட்டும் ஏந்தி இடை ஒடிய மெல்ல முன்னேறும் அந்த உருவத்தில்தான் எத்தனை........வேண்டாம், பிரயோசனமேயில்லை. மாமேதையான கலைஞன் படைத்த அந்தக் கல்லோவியத்தை வார்த்தைகளால் வர்ணிக்க யாரால் முடியும்?

## 12. வந்தியத்தேவன்

''ஆதி மனிதனுக்கும் ஆதி ஸ்திரீக்கும் இடையே ஒரு பெரிய மலை ஓங்கி நின்று ஒருவரை யொருவர் சந்திக்க முடியாமல் தடுத்



சென்னை திருவல்லிக்கேணியில் ஸ்ரீமதி எம். கே. செல்வமணியை ஆசிரியையாகக் கொண்டு, நல்ல முறையில் நடைபெற்று வரும் பரத கலா நிலையத்தின் ஏழாவது ஆண்டு விழா, பிரபல நடன விற்பன்னர் திரு வி. என். முத்துகுமரப்பபிள்ளை தலைமையில் சிறப்பாக நடைபெற்றது.

தது...இதுவரையில் பார்த்தும் அனுபவித்தும் அறியாத ஒரு இன்பத்தை. ஏதோ ஒரு அரிய பொருளை ஆதி மனிதனின் இதயம் தேடிக் கொண்டிருந்தது... ...ஆதி ஸ்திரீயின் உள்ளத்துக்குள்ளே ஒரு தீப்பிழம்பு ஜுவாலை விட்டு அவளை எரித்துக் கொண்டிருந்தது. ஏதோ ஒருசக்தி அவளைக் கவர்ந்து இழுத்தது. எங்கிருந்து இழுக்கிறது; எந்தத் திசையை நோக்கி இழுக்கிறது என்பதொன்றும் அவளுக்குத் தெரியவில்லை......

'' மலை உச்சியில் இருவரும் சந்தித்தார்கள். இத்தனை காலமும் தாங்கள் உயிர் வாழ்ந்ததெல்லாம் இந்த ஒரு சந்திப்புக்காகவே என்பதை உள்ளுணர்வினால் அறிந்தார்கள்...மேற்கூறிய ஆதி மனிதனையும் ஆதி ஸ்திரீயையும் ஒத்திருந்தார்கள், நம் வந்தியத்தேவனும், குந்தவையும்.''

பழையாறையில் திருமலைநாயக்கன் ஆற்று மணலைக் கடந்து (நாங்கள் போன சமயம் ஆற்றில் நீர் இல்லை) படித்துறையில் காலை வைத்ததும் கல்கி அவர்கள் பொன்னியின் செல்வனில் எழுதியிருக்கும் இந்த இடம் எனக்கு நினைவு வந்தது. வந்தியத்தேவனும், குந்தவையும் சந்தித்து முதன் முதலாகத் தங்களுக்கிடையே துளிர் விட்டிருக்கும் காதலைக் குறிப்பால் உணர்த்திக் கொள்ளும் கட்டம், இதே படித்துறையை நினைவில் கொண்டுதான் கல்கி அவர்கள், எழுதியிருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றியது.

உண்மையில் இந்தப் பிரயாணத்தின்போது ஒவ்வொரு இடத்திலும் கல்கி அவர்களும் அவரது சரித்திரக் கதாபாத்திரங்களும் எங்கள் நினைவுக்கு வந்துகொண்டே யிருந்தனர். அதிலிருந்து இன்னொரு உண்மையும் வெளியாயிற்று. 'கல்கி அவர்களுக்குப் பிறகு சரித்திரக் கதை எழுதுவது என்பது ரொம்பக் கடினமான காரியம்' என்பதுதான் அந்த உண்மை!

சுந்தர சோழன் காலம்வரை பிற்காலச் சோழர்கள் பழையாறையைத்தான் தங்கள் தலைநகராகக் கொண்டிருந்தார்கள். அதன் பண்டைச் சிறப்பை இப்போது கற்பனைக் கண் கொண்டு பார்த்தால் ஒழிய, ஒரு மொட்டைக் கோபுரமும் சிதிலமடைந்து செடிகொடிகள் வளரும் கோவிலும் தான் தென்படும். சுற்று வட்டாரத்தில் உள்ள ஊர்களின் பெயர்கள் ஓரளவுக்குத் தொன்மையை நினைவுறுத்துகின்றன. ஆரியப்படையூர், பம்பைப்படையூர், புதுப் படையூர், மணப் படையூர் முதலியன நான்கு படை வீடுகள் இருந்த இடமென்றும் சோழமாளிகை என்பது அரண்மனை இருந்த இடம் என்றும் ஊகிக்கலாம்.

கோவிலிலிருந்து திரும்புகையில் ஒரு கிழவனார் எதிர்ப்பட்டார். வயதால் நடுங்கும் குரலில், '' கோயிலைப் புதுப்பிக்க ஏற்பாடு செய்கிறீர்கள். என் காலத்தில் பார்ப்பேனோ, என்னவோ ?'' என்றார். பாழடைந்து போன கோயில் கிழவர் மனத்தில் எவ்வளவு துயரத்தை உண்டுபண்ணி யிருக்கிறது என்பதை உணர முடிந்தது. அவர் இன்னும் பல்லாண்டு வாழ்ந்து கும்பாபிஷேகத்தைக் கண்குளிரக் கண்டு களிக்கப் பிரார்த்தித்தோம்.

## 13. கங்கைகொண்டோன்

நம்முடைய ராஜேந்திரன் இருக்கிறானே, பெரிய சண்டைக்காரன். 'உம்' என்றால் சண்டை 'ஆ' என்றால் யுத்தம், வடக்கே, தெற்கே, கிழக்கே, மேற்கே, உள்நாட்டில், வெளி நாட்டில், கடல் கடந்து எங்கும் யுத்தம், யுத்தம், யுத்தம்தான்.

பாண்டிய மன்னன் ராஜசிம்மன் என்ன செய்தான், தெரியுமா ? 'தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போகட்டும்' என்று இலங்கைக்குத் தப்பி ஓடினான். உண்மையில் அப்போது ராஜ்யம் மட்டும்தான் பறி போயிற்றே தவிர தலைப்பாகை போகவில்லை. பத்திரமாக அதைத் தன் பின்னோடு எடுத்துக் கொண்டுதான் போனான். இலங்கைக்குப் போன பிறகுதான் தலைப்பாகை போய்விட்டது. சிங்களமன்னன் மணிமுடியைப் பிடுங்கிப் பத்திரமாக வைத்துக் கொண்டான். ராஜசிம்மன அதைப் பற்றி ஒன்றும் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. தலை பிழைத்ததே போதும் என்று இருந்தான். நியாயம்தானே !

அது பாருங்கள், நூறு வருஷங்களுக்குப் பின்னும் நம் ராஜேந்திரனுக்குப் பொறுக்கவேயில்லையாம். மீசை துடித்ததாம்; கண் சிவந்ததாம்: வீரத் தமிழனின் ரத்தம் கொதித்ததாம். ''அவமானம் ! அவமானம் !'' என்று கர்ஜித்தானாம். '' தமிழ் மன்னனின் மணி மகுடம் சிங்கள மன்னனிடம் இருப்பதா ?'' என்று அனல் தெறிக்கக் கேட்டானாம்.

அவ்வளவுதான், உடனே படை திரண்டது. சிங்கள மன்னன் இலேசுப்பட்டவனா? குள்ள நரி போல் எத்தனையோ தந்திரங்கள் செய்தான் ஐந்தாம் மகிந்தன். ஒளிந்து கொண்டான். '' கண்ணாமூச்சியா விளையாடுகிறாய் ? உன் பாச்சா இங்கே பலிக்காது அப்பனே'' என்று மணிமகுடத்துடன் அவனையும் கட்டிப்

பிடித்துத் தமிழ் நாட்டுக்கு ராஜேந்திர சோழன் இழுத்து வந்தானும்.

அத்துடன் விட்டானா? கடார தேசத்துக்கு (மலேயாவில் ஒருநகரம்) கப்பல் ஏறினான். ஸ்ரீ விசயத்தைக் (சுமத்திராவில் ஒரு ராஜ்யம்) கைப்பற்றினான். வாழ்நாள் முழுவதும் ஓய்ச்சல் ஒழிவில்லாமல் சண்டை போட்டுக் கொண்டேயிருந்தான். இத்தனை யுத்தத்துக்கும் இடையில் கலைகளை மறந்து விடவில்லை அவன்.

தன் கலா ரசிகத் தன்மையைக் காட்ட ஒரு நகரத்தையே நிர்மாணித்தான். தன் தலைநகராகவும் கொண்ட அதைப் புனிதப் படுத்த எண்ணினான். உடனே மறுபடியும் போர்! வடநாட்டுக்குப் படையெடுத்துச் சென்று கங்கை நீரைக் கொண்டு வந்து தலைநகரைப் புனிதப்படுத்தினான். கங்கைகொண்ட சோழன் என்று பெயர் பெற்றான்.

நான்கு சதுர மைல் பரப்பளவுள்ள கங்கை கொண்ட சோழபுரத்தில் இப்போது கோவில் மட்டுமே நெடிதுயர்ந்து நிற்கிறது. இந்தச் சமயத்தில் எனக்கு எழுந்த ஒரு சந்தேகத்தை அகிலன் அவர்களிடம் சொன்னேன்:

"சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த பல நகரங்களும் அழிந்து விட்டன. மாட மாளிகைகள் வெறும் மண்மேடுகளாகி விட்டன. ஆனால் அந்த நகரங்களில் கட்டப்பட்ட கோவில்கள் மட்டும் அப்படியே அழியாமல் இருக்கின்றனவே, ஏன்?"

"அது தெரியாதா உங்களுக்கு? பகை மன்னர்களை வென்றதும், கைப்பற்றிய நகரங்களை அழித்து விடுவார்கள் சார்! தரைமட்டமாக்கி விடுவார்கள்; யானைகளையும் கழுதைகளையும் கொண்டு நகரத்தையே சில வெறியர்கள் உழுதிருக்கிறார்கள்; உருத் தெரியாமல் அழித்திருக்கிறார்கள். ஆனால் கோவில் மட்டும் எல்லோருக்கும் பொது. பகைவனின் கோயில் என்பது கிடையாது. இறைவனின் ஆலயம்தான்! தவிரவும், தமிழ் மன்னர்கள் இறைவனின் ஆலயத்தைத்தான் மிகவும் உறுதியாகவும் பெரிதாகவும் அமைத்தார்களே தவிர, தங்களுக்கென்று கருங்கல் மாளிகைகள் அமைத்துக் கொள்ளவில்லை" என்றார் அவர்.

கோட்டைச் சுவர் போலப் பெரிதாக இருக்கும் வெளி மதிலைத் தாண்டி உள்ளே போனதும் ஒரு பெரிய சிங்கம் வாயைப் பிளந்து கொண்டு நின்று பயமுறுத்துகிறது. தைரியத்தையெல்லாம் திரட்டிக் கொண்டு துணிந்து அருகே சென்று பார்த்தால் பிளந்து நிற்கும் வாய்க்குள்ளே படிக்கட்டுகள் இருப்பதும், அது ஒரு சுரங்கப் பாதை என்பதும் தெரிய வரும். பாதை வழியே கீழே இறங்கிச் சென்றால் அருகே உள்ள கிணற்றின் நடு மையத்துக்கு, நீர் மட்டத்துக்கு மிக அருகே கொண்டுபோய் விடுகிறது.

இன்னொரு பெரிய சுரங்கமும் இங்கு இருக்கிறது என்று அறிந்தோம். இப்போது வெறும் மண்மேடாகத் தோற்றமளிக்கும் 'பெரிய மாளிகை'யிலிருந்து கோவில் பிராகாரம் வரையில் சுமார் ஒரு மைல் தூரத்துக்கு மேல் செல்லும் இந்தச் சுரங்கப் பாதை ஆற்றின் அடியில் கூடச் செல்கிறது. ஆற்றில் நீர் அதிகமாக ஓடிக்கொண்டிருக்கும்போது மணல் அரிக்கப்பட்டுச் சுரங்கப் பாதை கால்களுக்குத் தட்டுப்படுமாம்!

கங்கைகொண்ட சோளீச்வரத்தில் பல அற்புதச் சிற்ப வடிவங்கள் இருக்கின்றன. இன்று முழுதும் அவற்றைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம். ஏன், நாளை பூராவும், வாழ்நாள் முழுவதுமே பார்த்துப் பார்த்து அனுபவிக்கலாம். ஞான சரஸ்வதியும், சண்டேச அனுக்ரஹ மூர்த்தியும், கஜலக்ஷ்மியும், கங்காதரரும் நெஞ்சை விட்டு அகலாதவை.

கோவிலைச் சூழ்ந்திருந்த மாபெரும் நகரத்துக்குத் தண்ணீர் வசதிக்காகப் பதினைந்து மைல் நீளமுள்ள ஏரியை அமைத்தானும் ராஜேந்திரன். அதற்குக் கொள்ளிடத்திலிருந்தும் வெள்ளாற்றிலிருந்தும் கால்வாய்கள் வெட்டி நீரைக் கொண்டு வந்து ஏரியை நிரப்பினானும்.

"எத்தனை ஐந்தாண்டுத் திட்டங்கள் வகுத்திருப்பார்கள்? இது எந்த ஐந்தாண்டுத் திட்டத்தைச் சேர்ந்ததாயிருக்கும்?" என்று யோசித்துக் கொண்டிருக்கையிலேயே ஒன்றொரு ரசமான செய்தி காதில் விழுந்தது.

கங்கைகொண்ட சோழபுரத்தில் சுற்று வட்டாரத்தில் சமீபகாலத்தில் கட்டப்பட்ட வீடுகளுக்கெல்லாம் செங்கல்லுக்காகச் சல்லிக்காசு கூட யாரும் செலவழித்ததில்லையாம். பூமியைத் தோண்டினால் ஏராளமான செங்கற்கள் கிடைக்கும்போது எதற்குக் காசு கொடுத்து வாங்க வேண்டும்? வயலை உழ ஆரம்பித்தால் கலப்பை செங்கற்களைப் புரட்டித் தள்ளுகிறதாம்! நாள் முழுவதும் செங்கற்களைத் தோண்டி எடுத்துக் கூலி பெறும் நபர்களை நாங்கள் பார்த்தோம்.

மகோன்னத நிலையில் இருந்த கங்கை கொண்ட சோழ புரத்தில் இப்போது மிஞ்சி நிற்கும் குன்றுபோன்ற செங்கற் குவியல்களைப் பார்த்தபோது நெஞ்சம் நெகிழ்ந்தது. கண்களில் நீர் முட்டியது.

"அதோ!" என்று ஒரு வீட்டைச் சுட்டிக் காண்பித்தான் எங்களுக்கு வழிகாட்டி வந்த ஒரு சிறுவன்.

சுற்றுவட்டாரத்தில் உள்ள மற்றக் குச்சு வீடுகளைப் போல் இல்லாமல் கொஞ்சம் பெரிதாகவும் ஓட்டுக் கூரையுடனும் காணப்பட்டது அது.

"இப்படிச் செங்கல்லுக்குத் தோண்டும்போதுதான் அந்த வீட்டுக்காரருக்குப் புதையல் கிடைத்ததாம். திடீர்ப் பணக்காரராகிப் பெரிய வீடும் கட்டிக் கொண்டார். ஊரில் பேசிக் கொள்கிறார்கள்" என்றான் சிறுவன்.

"இருக்கலாம்" என்று நினைத்துக் கொண்டேன். ரத்தினங்களும், வைரங்களும், வைடூரியங்களும், கோமேதகங்களும், மரகதமும், தங்கமும், வெள்ளியும் கணக்கின்றிக் கொட்டிக் கிடக்கும் செல்வம் கொழித்த பிரதேசமல்லவா?

ஆனால் அவருக்குக் கிடைத்த புதையலை விடச் சிறந்த புதையல் எங்களுக்குக் கிடைத்தது! சரித்திர அறிவையும் கலைச் செல்வத்தையும் மூட்டை கட்டிக் கொண்டு, தூக்க முடியாமல் தூக்கிக்கொண்டு குதூகலத்துடன் ஊருக்குத் திரும்பினோம்.

இது மிட்லண்டாரின்
தயாரிப்புதானென்று
நிச்சயம் செய்துகொள்ளுங்கள்

# Midland

டின்களில் வழங்கப்படும் அநேகவித பழவகைகளில் மிக அருமையானது மிட்லண்டாரால் தயார் செய்யப்பட்டவைதான். பழங்கள், காய்கறிகள்—ஜேம், பழரஸங்கள், ஜெல்லி முதலானவைகள் தயார் செய்யப்படுகின்றன. தேவைக்கு வேண்டியபடி தேர்ந்தெடுப்பதற்குரியதான இருபத்தெட்டு விதமான பழவகைகள் கிடைக்கின்றன. மிட்லண்டாருடைய தயாரிப்புகள் காலங்களில் கிடைக்கும் பழங்களைப்போல் வருஷ முழுவதும் கிடைக்கின்றன. பழம், காய்கறிவகைகள் தயாரிப்பவர்களில் நாட்டிலே மிகப் பெரியவர்கள் மிட்லண்டார்தான். ஆகையால்தான் தேர்ந்தெடுப்பதற்குரியதான மிகச் சிறந்த பழவகைகள் அவர்களிடமிருந்து கிடைக்க ஏதுவாகின்றன.




தயாரிப்பாளர்கள் :

தி மிட்லண்ட் ப்ரூட் & வெஜிடபிள் ப்ராடக்ட்ஸ் ( இந்தியா ) மதுரா

விநியோகஸ்தர்கள் :

கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ. ( இந்தியா ) பிரைவேட் லிமிடெட், பம்பாய்

இந்தியாவிற்கான ஏஜெண்டுகள் : பாரி அன்டு கோ. லிட்.



ஸ்ரீ நாராயணசுவாமி அவர்களின் குமாரி சௌ. லோகாமேசுவரிக்கும் திரு பரமேசுவரனுக்கும் திருமணம் நடைபெற்றது.



அட்வகேட் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி ஐயரின் குமாரர் ஸ்ரீ ராஜகோபாலனுக்கும் சௌ. ஜயலக்ஷ்மிக்கும் திருமணம் நடந்தது.

# வாழ்க மணமக்கள்



பிரபல எழுத்தாளர் ஸ்ரீ சங்கு சுப்பிரமணியம் அவர்களின் புதல்வி சௌ. சுந்தரிக்கும், திரு எஸ். வி. சலம் பி. ஏ.,க்கும் திருமணம் நடந்தேறியது.



எழுத்தாளர் ஆபுத்திரனின் சகோதரி சௌ. சாவித்திரிக்கும், திரு ராமகிருஷ்ணனுக்கும் பம்பாயில் அதிவிமரிசையாக விவாகம் நடைபெற்றது.



ஸ்டேட் பாங்க் ஆப் ஹைதராபாத்தைச் சேர்ந்த திரு நரசிம்மன் சௌ. விமலாவை மணம் புரிந்து கொண்டார்.



பாகனேரி சப் மாஜிஸ்திரேட் திரு ஜி. தட்சிணாமூர்த்திக்கும் சௌ. சரோஜினிக்கும் திருமணம் சிறப்பாக நடந்தது.



# தங்க நகரம்

அகிலன்

## 3. ரகசிய முடிவு

அரண்மனைக் காரை நோக்கி வேகமாக ஓடி வந்தவன் ஒரு நொண்டிப் பிச்சைக்காரன்.

''ஐயா! எனக்குச் சத்திரத்திலே சோறு இல்லேன்னு சொல்லிட்டாங்கையா!'' என்று ஆத்திரத்தோடு கத்திவிட்டு, ''ஒரு காலணுக் கொடுங்கையா'' என்று தன் இடது கையை நீட்டினான் அவன். வலது கை முழங்கை வரையிலும் தனியே தொங்கியது.

''இரு, கொடுக்கிறேன்'' என்று சொல்லி விட்டுத் தன் சட்டைப் பையிலிருந்து ஒரு வெள்ளி ரூபாயை எடுத்து நீட்டினான் சந்திரன். அதை அந்தப் பிச்சைக்காரன் வாங்கிக் கொள்ளவில்லை. பயந்தபடியே திரும்பிப் போகப் பார்த்தான். காலணுவுக்குப் பதில் வெள்ளி ரூபாயை வாங்கிக் கொண்டால், காரிலிருக்கும் பெரியவர்கள் பிச்சைக்காரனைத் திருடன் என்று சொல்லி விடுவார்களே!

இதற்குள் சத்திரத்துச் சோற்றை வாங்கிக் கொண்ட மற்றொரு கிழவி அந்தப் பக்கம் வந்தாள். அவள் கையிலிருந்த சோறு கால்வயிற்றுக்கே போதாது.

ரூபாயை நொண்டியிடம் வற்புறுத்திக் கொடுத்து விட்டுக் கிழவியின் பக்கம் திரும்பினான் சந்திரன். அவளுடைய ஆகாரம் அவன் கண்களில் பட்டது.

''இதற்கு மேல் உனக்குப் போட மாட்டார்களா?'' என்று கிழவியிடம் கேட்டான்.

''மாட்டார்கள்'' என்றாள் பிச்சைக்காரக் கிழவி.

''உனக்குப் போதுமா, இந்தச் சாதம்?''

''போதாது!''

''வேறே என்ன செய்வாய்?'' என்றான் ராஜகுமாரன்.

''ஊருக்குள்ளே பிச்சை எடுப்பேன். கிடைத்தாலும் கிடைக்கும், கிடைக்கா விட்டால் இத்துடன் படுத்துக் கொள்வேன். வர வர ஜனங்கள் மனசு கல்லாய்ப் போய் விட்டது. யாருமே எங்களைக் கண்டு இரக்கப் படுவதில்லை'' என்றாள்.

''இந்த வாழ்க்கை உனக்கு ரொம்பக் கஷ்டமாயிருக்குமே!''

''ஆமாம்; ரொம்பக் கஷ்டந்தான்! சாகலாம் என்றுகூடத் தோன்றும்.''

"ரொம்பக் கஷ்டமென்றால், எப்படிக் கஷ்டப்படுவாய்?" என்று வருத்தத்தோடு கேட்டாள் மல்லிகா.

பிச்சைக்காரக் கிழவி மல்லிகாவைப் பார்த்துக் கவலையோடு சிரித்தாள். அவள் ஒன்றும் பேசவில்லை. ஆனால் அவளுக்குப் பதிலாக அந்த நொண்டி பேசினான்.

"ஏழைகளின் கஷ்டத்தை எப்படி அம்மா வாய்விட்டுச் சொல்ல முடியும்? அப்படிச் சொன்னாலும் அது உங்களுக்குப் புரியாது. பணக்காரங்களுக்கு அது சொல்லித் தெரியற விஷயமில்லே. எனக்குத்தான் அது தெரியும். நான் இரவும் பகலும் அதை அனுபவிக்கிறேன். ஏழையாக இருந்தால்தான் அந்தக் கஷ்டம் உங்களுக்குப் புரியும்" என்றான் அவன்.

"உங்களுக்கு அந்தக் கஷ்டம் வரவே வேண்டாம். நீங்க மகாராஜாக்களா இருக்கணும்" என்றாள் அந்தக் கிழவி. அவர்கள் அரண்மனைக் குழந்தைகள் என்பது அவளுக்கோ, அவனுக்கோ தெரியாது.

இரு குழந்தைகளின் கண்களிலும் கண்ணீர் வந்து விட்டது. சட்டைப்பைக்குள் கையை விட்டு மற்றொரு வெள்ளிக்காசை எடுத்துக் கிழவியிடம் நீட்டினான். உடனே சத்திரத்திலிருந்த எல்லாக் கூட்டமும் காரின் பக்கம் திரும்பியது. இருந்த காசையெல்லாம் எடுத்துச் சந்திரனும் மல்லிகாவும் எல்லாருக்கும் கொடுத்துவிட்டார்கள். தீர்ந்து போன பிறகு காரை அரண்மனைக்கு விடச் சொன்னான் சந்திரன்.



கார் அரண்மனை திரும்பும்போது இருவர் முகமும் அதிகமாக வாடியிருந்தது. ஒருவரை யொருவர் பார்த்து வழக்கம் போலச் சிரித்துக் கொள்ளவில்லை. மல்லிகா கண்களைக் கைக்குட்டையால் அடிக்கடி துடைத்துக் கொண்டாள். சந்திரனின் கண் செப்பு ரோஜா போல் ரத்தமாய் இருந்தது.

அவர்கள் நினைத்தார்கள்: 'நம்மைப் போலவே எல்லோரும் இல்லை. அரண்மனைக்கு வெளியே குடிசைகள் இருக்கின்றன; சாக்கடை நாற்றம் இருக்கிறது; கபோதிகளும், நொண்டிகளும் குஷ்டரோகிகளும், பசியால் வாடுபவர்களும் இருக்கிறார்கள். சத்திரத்துச் சாப்பாடு அவர்களைச் சாகவும் விடாமல் பிழைக்கவும் விடாமல் அந்தரத்தில் ஆட்டி வைக்கிறது.'

இப்படி அவர்கள் நினைத்துக் கொண்டிருந்தபோது அரசர் ராஜமார்த்தாண்டனிடம் மெய்க்காப்பாளன் அன்றைக்கு நடந்ததையெல்லாம் கூறினான். சந்திரனும் மல்லிகாவும் கண்ட இடத்துக்கெல்லாம் காரை ஓட்டச் சொன்னது பற்றிப் புகார் செய்தான். ஏழைகள் வசித்த தெருவுக்கும் சத்திரம் சாவடிகளுக்கும் அரண்மனைக் கார் போய் வந்தது என்றான். சத்திரத்தில் அண்ணனும் தங்கையுமாகச் சேர்ந்து கையிலிருந்த காசையெல்லாம் தானம் செய்தது பற்றிக் குறை கூறினான்.

"இப்படியெல்லாம் நீங்கள் செய்யலாமா? இதற்காகத்தானா வெளியே போக வேண்டுமென்று பிடிவாதம் செய்தீர்கள்? நம்முடைய கௌரவத்துக்குத் தகுந்தாற் போல நாம் நடந்து கொள்ள வேண்டாமா?" என்று மகாராஜா வருத்தப்பட்டுக் கொண்டார்.

சந்திரனும் மல்லிகாவும் அவரிடம் ஒன்றும் பதில் சொல்லவில்லை. பேசாதிருந்து விட்டார்கள். ஆனால் அவர்களுக்கு ஊரைச் சுற்றிப் பார்த்ததிலிருந்து என்னவோ போல் கவலையாக இருந்தது. எந்நேரமும் அந்தத் தெருக்களின் நினைவும், சத்திரத்தின் ஞாபகமுமாகவே அவர்கள் இருந்தார்கள்.

அவர்கள் முன்போலக் கலகலப்பாக விளையாடுவதில்லை. வாய் விட்டுச் சிரிப்பதில்லை. ஓடிப் பிடித்து ரகளை செய்வதில்லை. பேசாது புல் தரையில் உட்கார்ந்து யோசனையில் மூழ்கி விடுவார்கள். இரண்டு பேருக்கும் எப்போதுமே பலத்தயோசனைதான். அரண்மனைச் சுவருக்கு வெளியே இருக்கும் தங்களுடைய தங்க நகரத்தைப் பற்றிய யோசனை.

அவர்கள் இப்படித் திடீரென்று மாறிப் போனது ராஜமார்த்தாண்டனுக்கும் ராணி கமலாவதிக்கும் அதிகக் கலக்கத்தைக் கொடுத்தது. அளவுக்கு அதிகமாகக் குழந்தைகளிடம் செல்லம் காண்பித்தார்கள். "ஏன் இப்படி இருக்கிறீர்கள்?" என்றும் கேட்டார்கள். ஆனால் ஒன்றும் அவர்களுக்குப் புரியவில்லை.

இருந்தாலும் எப்படியோ ராஜா ஒரு விதமாக அவர்களைத் தெரிந்து கொண்டார். அண்ணனும் தங்கையும் பேசிக் கொள்வதைக் கவனிக்கும்படியாக ஓர் ஆளிடம் சொல்லியிருந்தார். அவன் வந்து

வேடிக்கை விளையாட்டு

## விடுவித்துக் கொள்ள முடியுமா?

ஐந்து அடி நீளமுள்ள இரண்டு கயிற்றை எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு கயிற்றின் இரு முனைகளாலும் உங்கள் இரு கைகளிலும் கட்டிக் கொள்ளுங்கள். அதேபோல் மற்றொரு கயிற்றை உங்கள் கைக் கயிற்றுக்குள் நுழைத்து அதன் இரு முனைகளாலும் உங்கள் நண்பனின் கைகளைப் பிணைத்து விடுங்கள். இப்போது படம் ஒன்றில் காட்டியுள்ளபடி நீங்கள் இருவரும் பிணைத்துக் கட்டப்பட்டு விட்டீர்கள் இல்லையா? இனி இந்த விலங்கிலிருந்து உங்களால் விடுதலை பெற முடியாது. முடியுமானால் முயன்று பாருங்கள். கயிற்றை அறுக்கவோ முடிச்சை அவிழ்க்கவோ கூடாது.





முடியவில்லையானால், உங்களுக்கு மட்டும் இந்த ரகசிய வழியைச் சொல்லித் தருகிறேன். கண்பனின் கயிற்றை இழுத்து, படம் இரண்டில் காட்டியபடி உங்கள் ஒரு கைக் கட்டுக்குள் நுழைத்து வெளியே இழுத்து வரும் வளையத்துக்குள் படம் மூன்றில் காட்டிய படி உங்கள் கை விரல்களைச் சேர்த்து நுழைத்து, கண்பனின் கயிற்றை இழுத்தால் இருவருக்கும் விடுதலை கிடைக்கும்.



---

இந்த முக்கோணத்திலுள்ள வட்டங்களில் ஒன்றிலிருந்து 9 வரை உள்ள எண்களை எழுத வேண்டும். ஒரு எண்ணை ஒரு தடவைதான் எழுதலாம். வரிசையாக எழுத வேண்டும் என்ற நியதி இல்லை. ஆனால் எந்தப் பக்கத்தைக் கூட்டினாலும் 20 வரும்படியாக அமைக்க வேண்டும். முடியுமா வென்று முயன்று பாருங்கள்.



விஷயத்தைக் கூறினான். அவனுக்கு உள்ளூற நடுக்கம். அரசர் தன்னைக் கோபித்துக் கொள்வாரோ என்று பயந்தான். ஆனால் நடந்ததைச் சொல்லாவிட்டாலும் அதுவும் விபரீதமாகப் போய்விடும் அல்லவா? ஆகவே அவன் நடந்ததைக்கூறிவிட்டான். "குழந்தைகள் சந்திரத்துப் பிச்சைக்காரர்களைப் பற்றிப் பேசினார்கள். அவர்களுக்குக் கொடுக்கும் சாதம் போதாது என்று சொல்லிக்கொண்டார்கள்" என்று ராஜாவிடம் சொன்னான்.

ராஜா தம் குழந்தைகள் இருவரையும் கூப்பிட்டார். "இதற்காகத் தானா நீங்கள் இப்படி இருக்கிறீர்கள்? நாளையிலிருந்து அவர்களுக்கு இரண்டு பங்கு சாதம் போடச் சொல்லி உத்தரவு போடுகிறேன்."

குழந்தைகள் முகத்தில் கொஞ்சம் சிரிப்பு வந்தது. "இருந்தாலும் அப்பா, அதுவும் அவர்களுக்குப் போதாதே!" என்றனர்.

"போதாதுதான். என்ன செய்வது? அதற்கு மேலே போட நம்மால் முடியாது" என்றார் ராஜா.

ஒரு வாரம் கழித்து, ஒரு நாள் மாலை சந்திரனும் மல்லிகாவும் தோட்டத்தில் உலவிக் கொண்டிருந்தார்கள்.

"மல்லிகா! தோட்டத்தில் உள்ள பறவைகளையும், வண்ணத்துப் பூச்சிகளையும், அணில்களையும் பார்க்கும் போது உனக்கு ஆனந்தமாக இருக்கிறதல்லவா?" என்று கேட்டான் சந்திரன்.

"ஆமாம்" என்றாள் அவள்.

"ஏன் தெரியுமா?"

"ஏன்?"

"இந்தப் பிராணிகளில் ஏழைப் பிராணிகள் என்றும், கஷ்டப்படும் பிராணிகள் என்றும் கிடையாது."

"காரணம்தெரிந்தது, அண்ணா!" என்று நீண்ட பெருமூச்சு விட்டாள் மல்லிகா.

பிறகு சந்திரன் அவளைத் தன் அருகே அழைத்து அவள் காதோடு காதாக ஒரு ரகசியத்தைக் கூறினான். அதைக் கேட்டவுடன் மல்லிகாவின் தேகமே நடுங்கியது.

"மல்லிகா! இந்த ரகசியத்தை யாரிடமும் சொல்லாதே! அப்பா அம்மாவுக்குக் கூடத் தெரியக் கூடாது" என்றான்.

அவன் சொல்லிய சொல்லை நினைத்துப் பார்க்கவே மல்லிகாவுக்குப் பயமாக இருந்தது. (தொடரும்)



## பரதநாட்டியப் போட்டியில் நான் முதற் பரிசைப் பெற்றேன்—போர்ன்-விடாவுக்கு எனது நன்றி



நான் பரதநாட்டியக் கலையில் நன்கு திகழவேண்டுமென்ற
ஆர்வத்துடன் நாட்டியம் பயின்றேன். ஆனால் பலஹீனத்
தினால் நாட்டிய அப்பியாசம் செய்ய முடியாமல் சக்தியற்று
இருந்தேன். சக்திக்கு தினமும் போர்ன்-விடா அருந்தும்படி
எனது குரு சொன்னார். அப்படியே செய்ய விரைவில்
முன்னைவிட அதிக சக்தியையும் பலத்தையும் அடையப்
பெற்று தினமும் வெகு நேரம் நாட்டிய அப்பியாசம்
செய்ய இயன்றது. பின்னர் நாட்டிய விழாவில் போட்டி
விட்டு முதற்பரிசைப் பெற்றேன். போர்ன்-விடாவுக்கு
எனது நன்றி. அதிக சக்திக்கும் பலத்திற்கும்
தினமும் போர்ன்-விடா அருந்துங்கள்.








*For Strength and Vigour*

**BOURN-VITA**

MADE BY

*Cadbury's*



அத்தியாயம் 15

## மாறுதல்

இளவேனிற் காலத்து இளம் கொடியில், மலரப் போகும் மொட்டையரும்பு போல் இருந்தாள் உஷா. அந்தப் பாவையிடம் வெளிப்படையாகத் தெரிந்த வளர்ச்சியையே அனைவரும் கண்டார்கள். அவளுடைய உள்ளத்து மாறுதலைப் பற்றி ஒருவருமே சரியாகத் தெரிந்து கொள்ளவில்லை. முதலில் அவளே அதைச் சரிவர உணரவில்லை.

அன்பின் அருமையை உணரும் பருவத்தை அடைந்து வரும் அவளிடம் எல்லாரும் முன்னிலும் அன்பாகவே நடந்து கொண்டார்கள். ஆயினும் பெற்றோர்களிலிருந்து மற்றவர்கள் வரையில் எல்லாருமே பெரிதும் மாறியிருந்ததாகத்தான் அவளுக்குத் தோன்றியது.

அவளுடைய அழகிய கருவிழிகள் அங்கும் இங்கும் அலை பாய்ந்தன. ஒவ்வொன்றையும், ஒவ்வொருவரையும் அவள் கண்கள் கூர்ந்து நோக்கின. பிறருடைய முகத்திலே அவள் கண்கள் எதையோ தேடின! அவர்களுடைய பேச்சிலும் செயலிலும் எதையோ தீவிரமாகக் காண முயன்றன.

இவ்வளவு பிரயாசை யில்லாமலே பொன்னியும் குப்பனும் எவ்வளவு மாறியிருந்தார்கள் என்பது அவளுக்கு நன்றாகத் தெரிந்தது. சின்னக் குழந்தை சுந்தரி வளர வளர, தன்னிடம் அவர்களுக்கு அன்பும் பரிவும் மிகுந்து வருவதை அவள் கண்டாள். எதற்கெடுத்தாலும்

# தேன்கூடு

## ஆர்வி

அவர்கள் 'உஷா உஷா' என்று அவளிடம் உயிரையே வைத்திருந்தார்கள். சின்ன விஷயத்தில்கூட இது தெளிவாகப் பட்டது. அவ்வளவும் அவளுக்கு வேண்டித்தான் இருந்தது. அவள் மனத்தில் ஏக்கமோ, பொறுமையோ சுரக்காதபடி அவர்கள் மாறி மாறி அன்பைச் சொரிந்தார்கள். மறுக்க முயன்றும் அவர்களுடைய அன்பு வலுத்ததே தவிர, கொஞ்சமும் குறையவில்லை.

சின்னக் குழந்தை மொழுமொழுவென்று வளர்ந்தது; தவழ்ந்தது. தத்தித் தத்தி நடந்தது; மழலை பயின்றது. ஓடி விளையாடியது; உட்கார்ந்து பிடிவாதமாய் அழுதது. காரில் ஏறிக் கொண்டு காற்று வாங்கச் சென்றது; கான்வென்ட்டுக்கும் போயிற்று. எல்லாம் இருந்தாலும் பொன்னிக்கு உஷாதான் அருமையாகத் தோன்றினான். குப்பனுக்கும் உஷாதான் உயர்வாகத் தோன்றினாள்; உஷா எருதுவண்டியை ஓட்டுவது போலவே அவனுக்கு இருப்பதில்லை. சொர்ணம்பாளும் பரமசிவமும் இதை ஓரளவு அறிந்து கொண்டுதான் இருந்தார்கள்.



"அம்மாவும் ஐயாவும் முந்தியைப் போலவா இருக்காங்க இப்ப?" என்றான் பொன்னி.

"இதெல்லாம் சகஜந்தானே? ஒண்ணே ஒண்ணுன்னு, கண்ணே கண்ணுன்னு இருக்கும். இன்னொண்ணு புதுசா வந்துட்டா, பெரிசு பழசுதானே?" என்றான் குப்பன்.

"என்ன இருந்தாலும் பாசம் கூடவா பழசாயிடும்?"

"அதுக்குத்தான் நாம இருக்கிறமே—வட்டியும் முதலுமா ஆசைப்பட!"

பொன்னி ரோசத்தோடு மோவாயைத் தோளில் இடித்துக் கொண்டாள். "நாம தான் இருக்கிறமே, அன்னிக்கு இருந்ததுக்கு அழிவில்லாமெ! தெரியலியா?" என்றாள் அழாக்குறையாக.

"இந்தா, இந்தா! ரொம்பக் குறைப்பட்டுக்காதே! அப்புறம் நீயும் இவங்களைப் போல ஆயிடப் போறே!"

"நான் ஒரு நாளும் அப்படி ஆயிட மாட்டேன்; தெரிஞ்சிக்க! அதெல்லாம் ஆம்பிள்ளைங்களுக்கு—புதுசு வந்திட்டா பழசு தன்னுபடியாப் போறதுக்கு!"

"ஆனா, இங்கே அம்மாளுக்கு ஐயா தேவலாம் போலிருக்கே. ஆம்பிள்ளையை விடப் பொம்பிள்ளைங்க இல்லே ஒரேயடியா மாறிப் போயிடறாங்க!"

"இந்தா, எல்லாரையும் அந்தமாதிரி நெனைக்கப் பேசிப்பிடாதே!" என்று கறுவினான் பொன்னி.

இந்தப் பேச்சைக் காரியத்தில் செய்து காட்ட வேண்டும்போல் அவளுக்கு ரோசமாக இருந்தது. ஆனால் ஒரு குழந்தைக்கே வழியில்லாதபோது, அடுத்தபடி பிறக்கப் போவதைப் பற்றிப் பேசுவதில்

என்ன அர்த்தம் இருக்கிறது? வெள்ளையன் தோட்டத்து வெல்லப் பிள்ளையாரை நொந்து கொண்டு அவள் கண்ணீர் மல்க நின்றாள். அதே சமயத்தில், எத்தனை குழந்தைகள் பிறந்தாலும் உஷாவின் மீதுள்ள அன்பு ஒருநாளும் மாறாது என்ற எண்ணம் அவளுக்கு உண்டாயிற்று. இதை நினைக்கவே அவளுக்குப் பெரிய ஆறுதலாக இருந்தது.

"கவலைப்படாதே, பொன்னி! உன்னை நான் சரியானபடி கவனிக்கிறேன்!" என்றான் குப்பன் கேலியாக.

"பேச்சைப் பாரு, பேச்சை!" என்று தோள் பட்டையில் இடித்துக் கொண்டாள் பொன்னி.

எல்லாருமே அவர்களைப் போல் உஷாவைத்தான் அதிகமாகக் கொண்டாடினார்கள். இரண்டு குழந்தைகளில் எதைக் கொண்டாடினாலும் பெற்ற தாய்க்கு வேற்றுமையோ, வித்தியாசமோ ஏது? உஷாவின் அழகையும் காட்டியத்தையும் பற்றிச் சொர்ணம்பாளின் முகத்துக்கெதிரே புகழ்ந்தார்கள். ஆனால் சொர்ணம்பாள் தனிமையில் வந்து, தன் குழந்தை சுந்தரியை வாரியணைத்து உச்சி மோந்தாள். "என் செல்வமே! ஆயிரம் அவள் அழகாக இருக்கட்டும்; ஊரெல்லாம் மெச்ச காட்டியம் ஆடட்டும், எனக்கு அவள் உன்னைப் போல ஆவாளா?" என்று உதட்டுக்குள்ளேயே முணுமுணுத்தாள். தாயின் இந்தத் தவிப்பைக் குழந்தை சுந்தரி எவ்வாறு அறிவாள்? யாருக்குத்தான் அவளுடைய வேதனையைப் பற்றித் தெரியும்? இத்தனை வருஷங்களுக்குப் பிறகு அதை மறைக்கவோ, மாற்றவோ யாரால்தான் முடியும்? அம்மை குத்தும் ரிஜிஸ்டரிலிருந்து ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் ரிஜிஸ்டர் வரையில் பதிவாகிவிட்ட ஒன்றை அழித்து விடுவதுதான் சாத்தியமா?

பரமசிவம் மட்டும் எப்படியோ சமாளித்துக் கொண்டு வந்தார். ஆனால் அவளால்தான் தன்னை மாற்றிக் கொள்ள முடியவில்லை. முதலில் இது சுலபமாக இருக்கும் போலிருந்தது. 'அந்திய காலத்தில் இது ஏன் சிராடப் பிறந்தது?' என்று எரிச்சலாக வந்தது. 'உஷா நிறைந்திருக்கும் நெஞ்சிலே இதற்கு இடம், எங்கே இருக்கப்





புது தில்லி பாதுகாப்பு மந்திரி காரியாலய உதவிக் காரியதரிசியாக இருந்து ஓய்வு பெற்றவரான திரு ஏ. வி. ஷ்ய. நாராயணன் அவர்களுக்கு மே மாதம் 4ந் தேதி சஷ்டியப்த பூர்த்தி விழா அதி விமரிசையாக நடைபெற்றது. உறவினர்களும், நண்பர்களும், பிரமுகர்களும் திரளாக இவ்வைபவத்துக்கு விஜயம் செய்து சிறப்பித்தனர்.

---

போகிறது?' என்று இளப்பம் உண்டாயிற்று. கண் திறக்காத பூனைக்குட்டி போல் அது பக்கத்துத் தொட்டிலில் கிடந்தபோது அவளுக்கு அவமானமாகக் கூட இருந்தது. 'அப்பா! எத்தனை விகாரம்! உஷா எங்கே? இது எங்கே?' என்று அவள் நெஞ்சுக்குள்ளே புலம்பினாள். ஆனால் அது மூனுக்கென்று சின்னக் கண்ணைத் திறந்து அழுத போதும், காலையும் கையையும் உதைத்துக் கொண்டு பசியால் பறந்தபோதும் சொர்ணத்தின் நெஞ்சு பாறையாகக் கனக்கத் தொடங்கியது. நாளாக ஆக, அந்தக் குழந்தையின்மீதுள்ள வாஞ்சை தன் நெஞ்சிலே ஊன்றி நிற்கத் தொடங்கியதை அவள் உணர்ந்தாள். அங்கே உஷாவுக்குச் சரி பாதி இடம் ஒழித்துக் கொடுக்க அவளால் இயலவில்லை. தாய்ப் பாலோடு அன்பு சுரந்து வழிந்து பெருகியது. இதயத்துக்கும் அந்தக் குழந்தைக்கும் ஓர் உயிர் இணைப்பு உண்டாகி விட்டதை அவளால் உணர முடிந்தது. அந்த இணைப்பு பாட்டிலில் ரப்பரைப் போட்டுப் பாலூட்டி வளர்த்ததைப் போல் இல்லை. தன் சரீரத்திலே பாசத்தை மாட்டி, உயிரையே ஊட்டுவது போன்ற உணர்ச்சியைக் கொடுத்தது அவளுக்கு.

அவள் விவேகத்தினால் தன் உணர்ச்சிகளை அடக்கி வென்றுவிட முயன்றாள். ஆனால் அது சமயம் வரும்போது பளிக்க மறுத்துவிட்டது. தண்ணீரில் அழுத்திய பந்துபோல் அவளுடைய தாய்மை உணர்ச்சி கிளர்ந்து கொண்டு மேலே வந்தது. என்ன செய்தும் பெற்ற பெண்ணுக்குச் சமமாக வளர்த்த பெண்ணைப் பாவிக்க அவளால் முடியவில்லை.

இது அவளுக்கு மிகுந்த துக்கத்தைக் கொடுத்தது. உஷாவை அடியோடு வெறுக்கவும் ஒதுக்கவும் முடியாமல் அவள் சங்கடப்பட்டாள். "இத்தனை வருடங்களாக அவளை ஆசையாக எடுத்து வளர்த்துச் சீராட்டினேன். ஆனால் இன்று எல்லாம் மாறிப்போய் விட்டதே!" என்று கணவரிடம் சொல்லி அவள் வருத்தப்பட்டுக் கொண்டாள்.

"அப்படி இல்லை. எல்லாவற்றுக்கும் மனம்தான் காரணம். இரண்டு பேரும் உன் பெண்களே என்று நினைத்துக் கொள். எல்லாம் போகப் போகச் சரியாகி விடும்!" என்றார் பரமசிவம், மனத்தை அடக்கப் பழகியவரைப் போல்.

சொர்ணம்பாள் குற்றவாளியைப்போல் தன்னையே நொந்து கொண்டாள். எல்லாவற்றுக்கும் காரணமாக இருந்த கணவர் கூட இன்று தன்னை நட்டாற்றில் விட்டு விட்டதாக எண்ணிக் கலங்கினாள்.

ஆனால் தங்கைப் பாப்பா பிறந்த பிறகு, அப்பா, அம்மாவிடம் பெரிய மாறுதல் ஏற்பட்டிருப்பதை உணர்ந்தாள் உஷா. இது தவிர்க்க முடியாததாக அவளுக்குத் தோன்றியது. சின்னக் குழந்தையும் அவளும் ஒன்றாக முடியுமா? மேலும் அந்தக் குழந்தையை அவள் எல்லாரையும் விட அதிகமாக நேசித்தாள். அவள் பிறந்த பிறகு அவளுக்கு எவ்வளவோ பெருமையாக இருந்தது. அதை விதம் விதமாக அழகுபடுத்தச் செய்து கான்வென்ட்டுக்கு அழைத்துச் செல்வது அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது. அதனிடம் கொஞ்சி விளையாட அவள் அலுப்பதே யில்லை. ஜீஜீயைப் போல் இப்போது தனக்கும் ஒரு தங்கை இருப்பதை எண்ணி அவள் பூரித்துப் போனாள். தங்கை அழுதால் அவளைத் தேற்றுவதும் அவள் சிரித்தால் மகிழ்வதும் உஷாவுக்கு வித்தை நிறைந்த விளையாட்டாகத் தோன்றியது. தெரியாதவர்களிடமெல்லாம் போய், "இவள்தான் என் தங்கை; சுந்தரி!" என்று சொல்லி விட்டு வரவேண்டும் போலிருந்தது.

"இதுவா உன்னுடைய தங்கச்சி? ஆனால் இது உன்னைப்போல இல்லியே!" என்றாள் ஜீஜீ வீட்டு ஆயா, இருவரையும் பார்த்துவிட்டு.

உஷாவுக்கு ரோசம் பொத்துக்கொண்டு வந்தது. "ஆயாவும் ஒரு பொம்பிளை தானே? ஆனால் உன்னைப் பார்த்தால் பொம்பிளையைப் போல் இல்லியே! புடவை கட்டின பூதத்தைப் போல் இருக்கியே!" என்றாள் சடசட.

உஷா இப்பொழுது பெரிதும் மாறிப் போயிருந்தாள் என்றால் அவள் பேச்சுக் கூடவா துடுக்காக இருக்கும்? ஆயா இதை எதிர்பார்க்கவேயில்லை. அவளுடைய முகம் சுண்டிப் போயிற்று.

பொதுவாக, ஆயாக்கள் என்றாலே உஷாவுக்குப் பயம். அவர்களுக்கு வாயும் வம்பும் எத்தனை உண்டு என்பது அவளுக்கு நன்றாகத் தெரியும். நாலு பேராக மரத்தடி நிழலில் கூடி விட்டால் அவர்கள்

பேசுகிற பேச்சைக் காது கொண்டு கேட்க முடியாது. அவரவர் வேலை செய்யும் இடத்தைப் பற்றிய விஷயங்களை நாக்கில் நரம்பு இல்லாமல் வர்ணிக்கத் தொடங்கி விடுவார்கள். அவற்றில் உண்மையும் இருக்கும்; ஊகமும் அதிகமாகக் கலந்திருக்கும். அன்றாடம் நடப்பதைத் தொடர்கதை போலச் சொல்வார்கள். மறுநாள் விட்ட இடத்திலிருந்து பேச்சுத் தொடரும். ஆனால் ஜீஜீ வீட்டு ஆயா அவர்களைப் போன்றவள் இல்லை. பேசினால் அவளுக்கு இரைக்கும்; மூச்சு அடைக்கும். டிரைவர்கள், ரிக்ஷாக்காரர்கள் என்று யாராவது தங்கள் சொந்தப் பெருமையையோ, குறையையோ சொல்வதைக் கேட்பதில்தான் அவளுக்குப் பிரியம் அதிகம். இரண்டையும் வெகு சுவாரஸ்யமாக அவள் கேட்டுக் கொண்டிருப்பாள். புகையிலையோ, பொடியோ இருந்து விட்டால் போதும் அவளுக்கு.

உஷாவுக்கு அப்புறம்தான் அவளிடம் போய்த் துடுக்காகப் பேசினோமே என்று வருத்தமாக இருந்தது. ஆனால் அவள் தான் என்ன செய்வாள்? அன்றைக்கு என்று எத்தனை பேர் இதே கேள்வியைக் கேட்பது? 'உன்னைப் போல இல்லையே; உன் அழகைப் போல இல்லையே!' என்று சுந்தரியைப் பார்த்து விட்டு ஒருவரைப் பார்த்தாற் போல் எல்லாரும் கேட்டால், அதற்கு அவள்தான் என்ன செய்வாள்? அந்த ஆத்திரம்தான் கடைசியில் அந்த ஆயாவின் கேள்வியில் வந்து வெடித்தது.

அதற்காக ஒரு நாள் அவளைக் கூப்பிட்டுச் சமாதானப்படுத்தி விடலாம் என்று எண்ணிக் கொண்டாள் உஷா. இது ஒன்றும் பெரிய காரியமல்ல; ஓரணாப் புகையிலையில் ஆயாவை எளிதில் மயக்கி விடவா முடியாது? அப்படி முடியா விட்டால் ஓரணாப் பொடியில் அவளை நிச்சயம் மயக்கி விடலாம்.

## அத்தியாயம் 16

# பழைய புத்தகங்கள்

மூன்றுவாயிலில்,' கிணிங், கிணிங்' என்று சைக்கிள் மணிச் சத்தம் கேட்டது. உஷா விசுக்கென்று ஜன்னலருகே வந்து எட்டிப் பார்த்தாள். வேறு யார் அப்படி மணியடிக்கப் போகிறார்கள்? அவள் கண்கள் எதிர்பார்த்த பாபுதான் அங்கே காணப்பட்டான்.

என்றோ ஒரு நாள் காதிலே பதிந்து விட்ட அந்த ஒலியை அதன் இனிமையை அவள் அதற்குப் பிறகு மறக்கவேயில்லை. அந்த மணியோசையும் அதை அடிக்கும் விதமும் அவ்வளவு நன்றாகப் பதிந்து போயிருந்தன. உஷாவுக்கு அதுதான் ஆச்சரியமாக இருந்தது. புயல் அடித்து ஓய்ந்தும் புறாக் கூடு சிதையாதது போல், பாபுவின் நினைவுமட்டும் அப்படியேதான் இருந்தது.

உருவத்தில் என்னவோ அவளைப்போல் அவனும் மாறித்தான் போயிருந்தான். பார்த்துக் கொண்டிருக்கும் போதே அவன் பொடு பொடு வென்று வளர்ந்து விட்டான். களையான முகத்திலே இள மீசை அரும்பு கட்டியிருந்தது. இளமைக்குரிய மிடுக்கும் மினுமினுப்பும் கொண்டு விளங்கினான் அவன். அவனுடைய பார்வையில் இயல்பாகவே கூச்சம் கலந்திருந்தது. பார்வைக்கு அத்தனை கவர்ச்சியாக இருந்தான். பொன்னி சொன்னது அப்படியே உண்மையாகி விட்டது. அவன் நீதிபதி வீட்டுப் பிள்ளைகளுக்கு மேல் அழகாக மாறி விட்டான். சைக்கிளை விட்டு இறங்கியதுமே அவன் விரல்கள் மணியடித்துப் பழகியிருந்தன. அந்தக் குணம் மாறவில்லை. கண்கள் அவள் உட்காரும் அறையின் ஜன்னலைப் பார்க்கச் சுழன்றன. அதுவும் மாறவில்லை. நாட்டியப் பயிற்சிக்குப் பிறகு அநேகமாக அவள் அங்கேதான் உட்கார்ந்திருப்பாள். இது அவனுக்குத் தெரியும்.

வாசற்படி ஏறும்போதே அவள் பாபுவைப் பார்த்து, "வீட்டில் அம்மா இல்லை!" என்று கையையும் தலையையும் ஆட்டினாள்.

பாபு சிரித்துக் கொண்டே, "நான் அம்மாவைப் பார்க்க வரவில்லை" என்று சொன்னான்.

அவன் குரல்கூடச் சற்று விரிசல் கண்டது போல் ஒலித்தது. பெண்களுடைய குரலைப் போல் சன்னமாக ஒலித்த குரல் இப்போது உடைந்து, கட்டு விட்டுக் கம்மியிருந்தது. சில குரலைக் கேட்டாலே வண்டியில் பூட்டிய மாடுகள் மிரண்டு ஓடுமாம். அதைப் போல் அவனுடைய குரலிலே ஏதோ ஒரு மந்திர சக்தி ஒலிப்பதை அவள் கேட்டாள்.

"பொன்னிகூடக் கோயிலுக்குப் போயிருக்கிறாள்!"

"நான் அதற்காகவும் வரவில்லை."

"குப்பன்......"

"வாத்தியாரை அழைத்துக் கொண்டு வண்டியில் போய்க் கொண்டிருப்பதை வழியிலே பார்த்தேன்."

"அப்படியானால் அப்பாவையா பார்க்க வேண்டும்?"

"ஐயையோ—அவரிடம் எனக்கு என்ன வேலை இருக்கிறது?"

"பின்னே யாரைப் பார்க்க வேண்டுமாம்?" என்று கேட்டாள் உஷா.

"வேறு யாரை? இந்த வீட்டுச் சின்ன எசமானியம்மா உஷாவைத்தான்!" என்று கூறினான் பாபு.

"என்னையா? என்னை எதற்காக?" உஷாவுக்கு உண்மையிலேயே கொஞ்சம் கூச்சமாகத்தான் இருந்தது. அவன் பார்த்த பார்வையும் சொன்ன விதமும் அவளை என்னவோ செய்தன.

தன்னை உள்ளே வரவிடாமலே பேசி அனுப்பிவிடப் பார்க்கும் உஷாவுக்கு

## சிறு குழந்தையும் அறிந்த உண்மை...

# ரின்ஸோ வெளுப்பது அதிவெண்மை

விவேகமுள்ள தாய்மார்கள் சலவைக்கு உபயோகிப்பது ரின்ஸோ. வெள்ளைத் துணிகளை அதிவெண்மையாகவும் வர்ணத் துணிகளை அதிகப் பிரகாசமாகவும் வெளுக்கும் சோப் பவுடர் அதுதான். சக்தி வாய்ந்த ரின்ஸோவின் நுரை, மறைந்துள்ள அழுக்குகளையும் அறவே அகற்றிவிடுகிறது. ரின்ஸோ சலவை யென்றால் உங்களுக்கு வேலையும் இலகுவாவதோடு நேரமும் மிச்சம். குடும்பத்தின் சகல துணிகளுக்கும் ரின்ஸோ உபயோகியுங்கள்.




உங்கள் வேலையை இலகுவாக்குவதற்கென்றே

தயாரிக்கப்பட்ட அற்புத சோப் பவுடர்

R. 18-50 TM

ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு

அவன் தவற்றைச் சுட்டிக் காட்ட எண்ணி வாசலை ஒரு முறை சுற்றும் முற்றும் பார்த்தான் பாபு.

"உள்ளே வந்து பேசலாம் அல்லவா?" என்று வாயை விட்டே கேட்டான்.

உஷா வெட்கத்தால் குன்றிப் போனாள். பாவம், சரஸ்வதிதேவி பள்ளிக்கூடத்திலே மட்டும் அடைபட்டுக் கிடக்கவில்லை. பள்ளியை மிதிக்காதவர்களுக்கும் அவளுடைய கடாட்சம் இருக்க முடியும் என்பதற்கு உதாரணமாக அவன் திகழ்ந்தான்.

"நாங்கள் இரவுப் பாடசாலை ஒன்று ஆரம்பித்திருக்கிறோம். வாசகசாலை ஒன்றும் தொடங்கலாம் என்பது எங்கள் எண்ணம். அதற்காகவே உங்களைப் பார்க்க வந்தேன்!" என்றான் பாபு.

அவன் மரியாதை கொடுத்துப் பேசியது என்னவோ அவளுக்குப் பொருத்தமாகப் படவில்லை. மற்றதெல்லாம் கேட்க நன்றாகத்தான் இருந்தது. "அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?" என்றாள்.

"உங்களிடம் இருக்கும் பழைய புத்தகங்கள் எல்லாவற்றையும் கொடுக்க வேண்டும்."

"இவ்வளவுதானே?"

"பொருளுதவியும் இஷ்டமானால் செய்யலாம்."

"அப்புறம்?"

"இப்போதைக்கு இவ்வளவு செய்தால் போதுமானது."

உஷா சிறிது நேரம் பேசாமலிருந்துவிட்டு, "எனக்கு இந்த மரியாதை, கூழைக் கும்பிடு எல்லாம் பிடிப்பதில்லை. எதிரில் இருந்தால் ஒரு விதம், இல்லாவிட்டால் ஒருவிதம் என்று இருப்பவர்களைக் கண்டாலும் எனக்குக் கட்டோடு பிடிப்பதில்லை. புரிகிறதா?" என்று கூறினாள்.







இதற்குச் சரியானபடி பதிலளிக்க எண்ணினான் பாபு. ஆனால் என்ன முயன்றும் அதற்கேற்ற பதில் எதுவும் அவனுக்கு உதிக்கவேயில்லை. ஆகவே அவன், "எதிரில் இருந்தாலும் இல்லாவிட்டாலும் ஒருவரை மரியாதையாக அழைப்பது அப்படி ஒன்றும் வந்தவர்களை நின்றபடியே திருப்பி யனுப்புவது போல் குற்றமாகிவிடாது!" என்றான். அவள் தன்னை உட்காரும்படி சொல்ல வேண்டும் என்று எதிர்பார்ப்பது அதிகம் என்பது அவனுக்குத் தெரியும். இருந்தாலும் பேச்சுக்குத்தானே என்று சொல்லி விட்டான்.

"குற்றமாகிவிடாதுதான். ஆனால் அது உண்மையான மரியாதையும்ஆகிவிடாது. எனக்கு அவ்வளவு மரியாதை வேண்டாம். நானும் உனக்குக் கொடுக்கத் தயாராக இல்லை!" என்றாள் உஷா.

பாபுவுக்குச் சிரிப்புத்தான் வந்தது.

"மரியாதை கொடுக்காவிட்டால் வேண்டாம்; ஆனால் புத்தகம் கொடுக்காவிட்டால் நான் இதை விட்டுப் போக மாட்டேன்!" என்றான்.

உஷா கொண்டு வந்து போட்ட பழைய புத்தகங்களை எடுத்து அவன் அடுக்கி வைத்துக்கொண்டிருந்தபோது, "உன்னை முதலில் உள்ளேயே வரவிடாமல் அனுப்பி விட வேண்டும் என்றுதான் பார்த்தேன். ஆனால் உள்ளே வந்ததும் இல்லாமல் உட்காரச் சொல்லவில்லை என்று குற்றம் சாட்டுகிறாயே!" என்றாள்.

"நீ இருந்தாலும் பொல்லாதவள்!" என்றான் பாபு.

"ஆனால் நீ மிகவும் நல்லவன் என்று நான் ஒருநாளும் ஒப்புக் கொள்ள மாட்டேன். முதல் முதலில் நீ என்னை மிரட்டி அடக்கி, உங்கள் பங்களாவுக்கு அழைத்துச் சென்றதை நான் இன்னும் மறக்கவில்லை. மிஸஸ் மீனாட்சிக்கும் எங்கள் பொன்னிக்கும் அசையாத என்னை என்னவோ சொல்லி அழைத்துப் போய் விட்டாயே!" என்றாள் அவள்.

உண்மையில் அவள் உள்ளம் மகிழ்ச்சியால் துள்ளியது. பாபு வந்ததும் பேச்சு



லண்டனுக்கு விஜயம் செய்திருந்த பிரபல சினிமா நடிகை சூர்யகுமாரியை பி. பி. ஸி. தமிழோசைப் பகுதியைச் சேர்ந்த திரு எம். ஆர். எம். சுந்தரமும், ஸ்ரீமதி உமாசங்கரும் பேட்டியிட்டனர்.

எதிர்பாராதவாறெல்லாம் சென்றதும், அவளுக்குக் குதூகலத்தையே கொடுத்தன. அவனும் இவ்வளவு தூரம் நடக்கும் என்று எதிர்பார்க்கவில்லை. அவளிடம் ஏராளமான புத்தகங்கள் இருந்ததோடு அவற்றை வீணாக்காமலும் போட்டு வைத்திருந்தாள்.

"நீ ஒருத்தி இருந்து படித்த புஸ்தகங்கள் இவ்வளவு இருக்கிறதே. எங்கள் பங்களாவில் ஐந்து பேர்கள் படித்தும் ஐந்து புத்தகங்கள்கூட உருவாகத் தேறவில்லை!" என்று ஆச்சரியப்பட்டான் பாபு.

உஷா பெருமூச்சு விட்டாள். "ஆனால் இதெல்லாம் இப்படி ஒரு நாளைக்கு உபயோகப்படும் என்று நான் எண்ணவேயில்லை!" என்று பெருமிதத்தோடு கூறினாள்.

அவளுக்கு என்னவோ இவ்வளவையும் பாபுவிடம் கொடுப்பதைவிட இவற்றுக்குச் சிறந்த உபயோகம் வேறு இருக்காது என்றே தோன்றியது.

"அந்த இரவுப் பாடசாலை எங்கே இருக்கிறது?"

"வெள்ளையன் தோட்டத்தில்தான்!"

"இதில் ஈடுபட வேண்டும் என்று எப்படி உனக்குத் தோன்றியது? இதற்கெல்லாம் உனக்கு நேரம் இருக்க வேண்டாமா?" என்று கேட்டாள் அவள்.

பாபு புன்னகை செய்தவாறே, "ஒன்பது மணிக்கு மேல் எனக்கு வேறு என்ன வேலை? நான் போகும்வரையில் சண்முகம் பார்த்துக் கொள்வான். அவன் இல்லாவிட்டால் இந்த இரவுப் பாடசாலை ஏது. இலவச வாசகசாலைதான் ஏது? பழைய புஸ்தகங்கள் வியாபாரம் செய்தே படிக்கக் கற்றுக் கொண்டான் அவன். அவன்தான் இதற்கெல்லாம் காரணம்!" என்று கூறினான்.

உஷாவுக்கு அந்தச் சண்முகத்தை ஒரு தடவை பார்க்கவேண்டும் போலிருந்தது. அவன் உண்மையிலேயே சாமர்த்தியசாலியாகத்தான் இருக்கவேண்டும் என்று எண்ணினாள். இல்லாவிட்டால் பாபுவை இந்தக் காரியத்துக்கு இழுக்க வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியிருக்குமா?

பாபு புஸ்தகங்களையெல்லாம் சைக்கிளில் வைத்துக் கட்டிவிட்டு, "புஸ்தகங்கள் ஆயிற்று; பொருளுதவி கிடைக்குமா?" என்று கேட்டுவிட்டுச் சிரித்தான்.

அந்தச் சிரிப்பு உஷாவின் உள்ளத்தைப் போய்த் தொட்டது. தன்னலமற்றவர்களைத் தவிர வேறு யாராலும் அப்படிச் சிரிக்க முடியாது. இதை உஷாவால் உணர முடிந்ததோ, என்னவோ அந்தச் சிரிப்பு அவளை வெகுவாகக் கவர்ந்துவிட்டது மட்டும் உண்மை.

உஷாவிடம் இரண்டு மூன்று ரூபாய்கள்தான் இருந்தன. அதை அவனிடம் கொடுத்துவிட்டு அவள், "அப்பாவிடம் கேட்டு அப்புறம் பணம் வாங்கித் தருகிறேன்!" என்றாள்.

பாபுவின் சைக்கிள் பங்களா வாயிலை நெருங்குவதற்கும் பாரிஸ்டர் தம்பதிகள் வந்த வண்டி உள்ளே நுழைவதற்கும் சரியாக இருந்தது. உஷா இங்கிருந்தே அதைப் பார்த்துக் கொண்டிருந்தாள். பாபு சைக்கிளை விட்டு இறங்கி அப்பாவுடனே, அம்மாவுடனே பேசிக் கொண்டிருப்பது தெரிந்தது. பிறகு பாபு அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு போய்விட்டான்.

வண்டியிலிருந்து இறங்கி வந்த சொர்ணம்பாளின் முகத்தைக் கண்டு நடுங்கிவிட்டாள் உஷா. அவள் முகத்தில் எள்ளும் கொள்ளுமாக வெடித்துக் கொண்டிருந்தன. உஷாவின் காலைக் கட்ட வந்த சுந்தரியை அவள் கரகரவென்று இழுத்துச் சென்று, கதவை ஓங்கி அறைந்து சாத்திக் கொண்டாள். (தொடரும்)

புடவை

புதிதா?

இல்லை—லக்ஸினால் சலவை செய்தது!

ஜப்பான், ஷிஃபான், வாயில், பட்டு—நாஜூக்கான உங்கள் ஆடைகள் எல்லாவற்றிற்கும் மென்மையான, தூய லக்ஸ் பராமரிப்பு அவசியம். அற்புதமான சுத்தத்துடன் வெளுப்பதோடு, துணிகளின் மெருகு மாறாமல் பராமரிக்கும்.




அழகான ஆடைகளுக்கு நெடுங்காலம் புதுமைத் தோற்றம் அளித்துக் காப்பது லக்ஸ்

LX. 189-50 TM

பம்பாயிலுள்ள ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தயாரிப்பு

# குமாஸ்தா வேண்டாம்!

எந்தக் குமாஸ்தாவும் தம் பெண்ணுக்குக் கணவனாகத் தகுதி இல்லை என்றார் தந்தை. பெண்ணோ ஒரு குமாஸ்தாவைத் தேடிக் கொண்டபோது, அவர் என்ன செய்வார்? பாவம்! ●

இரவு பத்து மணி இருக்கும். ஒரு சிறிய வட்ட மேஜையின் முன்பு எதிர்எதிராக உட்கார்ந்து சீட்டாடிக் கொண்டிருந்தனர் யசோதாவும் பாலுவும். 'செட்' சேர்க்கும் ஆட்டம். பாலு யசோதாவின் அத்தை பிள்ளை. பி. ஏ. பட்டதாரி. பிரபல கம்பெனியொன்றில் குமாஸ்தாவாகப் பணியாற்றி வந்தான். சற்றுத் தள்ளி ஒரு சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு அன்றைய ஆங்கிலத் தினசரியைப் படித்துக் கொண்டிருந்தார் யசோதாவின் தந்தை துரைசாமி. அரசாங்கக் காரியாலய மொன்றில் அவர் உயர்ந்த பதவி வகித்து வந்தார். பணமும் நிறையச் சேர்த்திருந்தார். கொஞ்சம் பெரும்போக்கான ஆசாமி—சில விஷயங்களில்.

ஏதோ ஒரு திரைப்படத்தின் பெயரைச் சொல்லி, ''அதைப் பார்த்து விட்டாயா, பாலு?'' என்று ஆட்டத்தின் மத்தியில் ஒரு கேள்வியைப் போட்டாள் யசோதா. கையிலிருந்த சீட்டுக் கனைக் கவனித்தவாறே ''ஓ!'' என்றான் பாலு.

''பார்த்துவிட்டாயா? எப்பொழுது?''

''போனவாரம்!''

''படம் எப்படி?''

''பிரமாதம்!''

''என்னிடம் சொல்லாமல் நீ மட்டும் தானே போனாய்?'' என்று சிணுங்கியவாறு சீட்டுக்களை மேஜைமீது வீசி எறிந்தாள். பாலுவுக்கு அப்பொழுது அவள் முகத்தைப் பார்க்கவே பரிதாபமாக இருந்தது.

''ஆபீஸில் பலவந்தமாக இரண்டு பேர்கள் கூப்பிட்டார்கள், அப்படியே போய் விட்டேன்...'' என்று மன்னிப்புக் கோரு





ஸ்ரீரங்கம் நரசிம்மன்

வதுபோல் அவனுக்குச் சமாதானம் சொன்னான் பாலு.

"அப்போ நாளைக்கு என்னை அழைத்துக் கொண்டு போறியா?"

"நான்தான் ஒருமுறை பார்த்து விட்டேனே! உன் சிநேகிதி யாரையாவது அழைத்துக் கொண்டு போவேன்."

"முடியாது! உன்னால் நாளைக்கு வர முடியுமா, முடியாதா?"

"பார்க்கலாம்...."

"இப்படி யெல்லாம் சந்தேகமாகச் சொல்லக் கூடாது. 'முடியும்' 'முடியாது' - ஒரே வார்த்தை! என்ன, சீக்கிரம், சொல்லு!"

பாலு சட்டென்று பதில் சொல்லிவிடவில்லை. பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் மாமா ஏதாவது நினைத்துக் கொண்டு விடப் போகிறாரேயென்று பேச்சை மாற்ற முயன்றான். "ஆட்டத்தைக் கவனி!" என்றான்.

"முதலில் நான் கேட்டதற்கு நீ பதில் சொல்லு: 'எஸ், ஆர் நோ?'"

ஓரக் கண்களால் மாமாவைப் பார்த்தான் பாலு. அவர் இந்த உலகையே மறந்து பத்திரிகை படிப்பதில் ஈடுபட்டிருந்தார்.

"ஆகட்டும்" என்று அவன் உதடுகள் முணுமுணுத்தன. அழும் குழந்தைகளுக்குத் தாற்காலிகமாகச் செய்யும் சமாதானத்தைப் போல் இருந்தது அவன் கூறிய விதம்.

"சரி; ஆட்டம் போதும். புத்தகசாலையிலிருந்து 'லாரென்ஸ்' சிறுகதைத் தொகுதி யொன்று கொண்டு வந்திருக்கிறேன். இரண்டு கதைகளாவது படித்துச் சொல்லு." என்று கூறியவாறு தயாராகப் பக்கத்தில் வைத்திருந்த புத்தகம் ஒன்றை எடுத்துப் போட்டாள்.

பாலு மெல்லச் சிரித்துவிட்டு "என்ன யசோதா இது? இண்டர் படித்த உனக்கு ஒருவர் படித்துச் சொல்லணுமா? நீயாகப் புரிந்து கொள்ள முடியாதா?" என்றான்

"புரிந்தால் மட்டும் போதுமா? நீ படித்துச் சொன்னால் இன்னும் நன்கு ரசிக்க முடிகிறது. கதாபாத்திரங்களுடன் நானும் ஒன்றிவிடுகிறேன்....... தயவுசெய்து ......... இரண்டே இரண்டு கதைகள்!" என்றாள் யசோதா பாலுவிடம் கெஞ்சாக் குறையாக.

"இன்றைக்கு வேண்டாம், யசோதா! வீட்டுக்குப் போய் ஆபீஸ் வேலை கொஞ்சம் செய்ய வேண்டும். அப்பாவைப் படித்துச் சொல்லச் சொல்லேன்..."

"அப்பா படித்துச் சொன்னால் யாருக்குப் புரியும்...? சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லி மூளையைக் குழப்பிவிட மாட்டாரா...? நீ படித்துச் சொல்லு..."

"இன்று வேண்டாம், யசோதா...!"

"ஒரே ஒரு கதை!"

"வேலை நிறைய இருக்கு, யசோதா..."

"அதெல்லாம் எனக்குத் தெரியாது!" என்று பிடிவாதம் பிடித்தாள் யசோதா. தர்மசங்கடமான நிலையில் பதில் ஒன்றும் சொல்ல முடியாமல் நின்று கொண்டிருந்தான்பாலு. இவ்வளவு நேரமும் இவர்கள் பேச்சைக் கவனித்துக் கொண்டிருந்த துரைசாமி, பேப்பர் படிப்பதை விட்டு பாலுவுக்கு உதவ முன் வந்தார்.

"என்னம்மா இது, அசடாட்டமா? அவனுக்குத்தான் ஆபீஸ் வேலை நிறைய இருக்கு என்கிறானே! நீ போ, பாலு! பாவம், உன்னுடைய காரியத்தைக் கவனி..." என்றார் துரைசாமி.

பாலு போய் விட்டான். யசோதா சிறிது நேரம் புத்தகத்தை வைத்துக் கொண்டிருந்தாள். பிறகு மேஜை மீது அலட்சியமாக வீசி எறிந்து விட்டுப் போய்ப் படுத்துக் கொண்டாள். சற்றைக்கெல்லாம் தூங்கியும் விட்டாள்!

துரைசாமிக்குப் பத்திரிகையில் கவனம் செல்லவில்லை. வெகு நேரம் வரையில் ஏதோ யோசித்தவாறு உட்கார்ந்திருந்தார். "ஏன், தூக்கம் வரல்லேயா?" என்று கேட்டவாறு அங்கு வந்தாள் அவர் மனைவி ராஜம். கண்ணாடியின் மேல் பக்கமாக அவளை ஒரு கணம் ஏறிட்டுப் பார்த்தார். பிறகு ஒரு பெருமூச்சு விட்டவாறு, "இனிமேல் தூக்கமே வராது போலிருக்கே!" என்றார். ராஜம் ஒன்றும் புரியாமல் அவரைப் பார்த்தாள். "என்னுடன் வா..." என்று கூறிவிட்டு எழுந்து மாடிக்குப் போனார். ராஜமும் அவரைத் தொடர்ந்தாள். கீழே நிம்மதியாக உறங்கிக் கொண்டிருந்தாள் யசோதா.

மாடியறைக்கு வந்து ஒரு நாற்காலியில் உட்கார்ந்தார் துரைசாமி. ராஜமும் மற்றொன்றில் அமர்ந்து கொண்டு என்னவென்று கேட்கும் பாவனையில் அவரைப் பார்த்தாள்.

துரைசாமியும் மனைவியின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாரே தவிர வாய் திறந்து ஒன்றும் சொல்லவில்லை; சொல்லத் தெரியவில்லை. திடீரென்று எதைச் சொல்வதென்று புரியாமல் சிறிது விழித்தார். "என்ன விஷயம்?" என்றாள் ராஜம்.

"ஒன்றுமில்லே ... வந்து.........கவனித்தாயா? யசோதா பாலுவிடம் ரொம்பவும் நெருங்கிப் பழகுகிறாள்...போகிற போக்கைப் பார்த்தால் நாளடைவில் தன் உள்ளத்தையே அவனிடம் பறி

கொடுத்து விடுவாள் போலிருக்கே...'' என்றார் குரலில் கவலைதொனிக்க. ராஜத்தின் உதட்டில் இலேசாக ஒரு புன்னகை நெளிந்து மறைந்தது.

''இதற்காகக் கவலைப் படுவானேன்? பாலு யார்? உங்கள் தங்கை பையன் தானே! உரிமை உள்ளவனாயிற்றே!'' என்றாள் அவள்.

''உரிமை இருந்தால் போதுமா?''

''அவனுக்கு வேறு என்ன குறைச்சல்? பி. ஏ. படித்திருக்கிறான். கண்ணுக்கும் லக்ஷணமாயிருக்கிறான்; நல்ல குணசாலி. இன்னும் என்ன வேண்டும்?''

''ராஜம்! நீ உலகம் தெரியாமல் பேசுகிறாய். படிப்பும் குணமும் இருந்தால் போதுமா? அந்தஸ்து வேண்டாமா? காலணா சொத்து கிடையாது. வேலையோ குமாஸ்தா வேலை. அதுவும் நான் செய்து வைத்தது! நம் பெண்ணை ஒரு சாதாரணக் குமாஸ்தாவுக்குக் கொடுக்கச் சொல்றியா? அதைவிட அவளை ஒரு கிணற்றில் தள்ளி விடலாம்!'' என்று கூறும்பொழுது துரைசாமியின் முகத்தில் ஒருவித வெறுப்பும் வேதனையும் படர்ந்தன.

''உலகத்திலே எல்லோருமே அதிகாரிகளாகத்தான் இருக்கிறார்களா? குமாஸ்தாக்களின் மனைவிகளெல்லாம் சந்தோஷமாயில்லையா? ஆரம்பகாலத்தில் நீங்களும் ஒரு குமாஸ்தாவாகத்தானே வேலையில் சேர்ந்தீர்கள்! அப்பொழுது நான் கண்ணைக் கசக்திக் கொண்டா இருந்தேன்? ஏதோ அதிருஷ்டம் அடித்தது; வேலையும் உயர்ந்தது. கையில் நாலு காசும் சேர்ந்தது.''

''அதற்காக? நம் பெண்ணையும் ஒரு குமாஸ்தாவுக்கே கொடுக்கணுமா? அவனுக்கும் அதிருஷ்டம் அடிக்கும்னு என்ன நிச்சயம்?'' என்று சிறிது அலட்சியமாகக் கேட்டார் துரைசாமி.

''எல்லாம் நம்பிக்கைதான்! நம் பெண்ணின் ஜாதகம் அதிருஷ்ட ஜாதகமாயிருந்தால், தானே முன்னுக்கு வருகிறான்!''

''நீ, என்னதான் சொல்லு, ராஜம்; யசோதாவைப் பாலுவுக்குக் கொடுப்பதென்பது முடியாத காரியம். நல்ல பதவியில் இருப்பவன் எவனுக்காவது தான் கொடுக்க வேண்டும். ஆனால் ஒன்று: யசோதாவின் விருப்பத்துக்கு மாறாக என்னால் எதுவும் செய்ய முடியாது! 'பாலுவைத்தான் செய்து கொள்வேன்' என்றால், கொடுக்கத்தான் வேண்டியிருக்கும். ஆகையால்தான் ஒரு முடிவுக்கு வந்து விட்டேன். பாலுவிடம் அவளுக்குக் காதல் உண்டாவதற்குள்...'' என்று கூறிவிட்டுத் தயங்கினாற்போல் இழுத்தார்.



ஏண்டா! இந்த ''லாண்டரி''க் கணக்கிலே ''ரவி'' - ஒண்ணுன்னு எழுதி வீருக்கயே! என்னடா அது?

''அதுவா! ''ரவிக்கை'' ஒண்ணு ''கை'' இல்லாம இருந்தது! இதைத்தான் ''ரவி'' ஒண்ணுன்னு எழுதி வைத்தேன்!''

''அவள் கல்யாணத்தை முடித்து விடப்போகிறீர்களா?'' என்றாள் ராஜம்.

''அது சாத்தியமா? அவள் அழகுக்கும் அந்தஸ்துக்கும் ஏற்ற இடம் கிடைக்கவேண்டாமா? அதுவரையில்...'' என்று ஏதோ சொல்ல வந்தவர் ராஜத்தின் முகத்தைப் பார்த்தார்.

''சொல்லுங்கள்!''

''யசோதாவைக் கொஞ்ச நாளைக்கு மைசூரில் பத்மாவின் வீட்டில் விட்டு வைக்கலாமென்று பார்க்கிறேன்...எப்படியாவது முயற்சி செய்து பாலுவை வேறு ஊருக்கு மாற்றும்படி செய்துவிட்டுப் பிறகு அவளை அழைத்து வந்தால்..''

''தங்கை பிள்ளையை நாடு கடத்தவா?''

''கொஞ்ச நாளைக்கு! அவள் விவாகம் முடிந்த பிறகு திரும்பவும் அவனை இங்கேயே மாற்றும்படி செய்துவிடுகிறேன். பிறகு அவனுக்கும் ஒரு நல்ல பெண்ணாகப் பார்த்து முடித்து விட்டால் போகிறது! அவனிடம் எனக்குப் பாசமில்லையா? அதோடு கடமை ஒன்று இருக்கிறதே!''

ராஜம் பதிலே சொல்லவில்லை. அவளுக்கு இந்த யோசனை சிறிதும் பிடிக்கவில்லை. துரைசாமி பிறர் யோசனையைக்

கேட்கவும் மாட்டார். எனவே சும்மென்றிருந்தாள்.

"என்ன சொல்லறே?" என்று கேட்டார் துரைசாமி.

"என்னத்தைச் சொல்வது? நம்முடைய பயத்துக்காக இன்னொருவருக்குக் கஷ்டம் கொடுப்பதா? பாவம், அக்காவுக்குப் பாலு ஒருவன்தானே சகலமும். அவனையும் அவனிடமிருந்து பிரித்து அனுப்புவது நியாயமா? ஒரு சகோதரன் செய்யும் உபகாரம் இது தானா? நம்மைப் பற்றி என்ன நினைப்பார்கள்? அதைவிடப் பாலுவை இங்கு அடிக்கடி வர வேண்டாமென்று கூறி விட்டால் போகிறது. அல்லது நம் பெண்ணைக் கண்டித்து வைக்க வேண்டும்."

"பைத்தியமே! அவனை இங்கு வர வேண்டாமென்றால் அப்புறம் மனஸ்தாபம்தான் மிஞ்சும். அவனும் கொஞ்ச நாளைக்கு வெளியூர் போய்விட்டு வந்தால் நாலு விஷயங்களைத் தெரிந்து கொள்ளுகிறான்! யசோதாவை மைசூரில் விட்டு வைப்பதில் இன்னொரு லாபமும் இருக்கிறது. பத்மாவின் பிள்ளை இந்த வருஷம் ஐ. ஏ. எஸ். எழுதப் போகிறானாம். பெரிய பெரிய பிரபுக்களெல்லாம் பெண் கொடுக்கப் போட்டியிடுவதாக வதந்தி. யசோதா சில நாட்களுக்கு அங்குதான் இருக்கட்டுமே!" என்று கூறி விட்டு அர்த்தபுஷ்டியுடன் தம் மனைவியைப் பார்த்தார் துரைசாமி.

"சரி; போய்ப் படுத்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லி விட்டு எழுந்து போய் விட்டாள் ராஜம். துரைசாமி சிறிது நேரம் யோசித்தவாறு உட்கார்ந்திருந்தார். பிறகு ஏதோ முடிவுக்கு வந்தவராய் எழுந்து படுக்கப் போனார்.

அடுத்த வாரமே யசோதாவை அழைத்துக்கொண்டு மைசூருக்குப் போனார் துரைசாமி. மைசூருக்கு வந்த காரணம் யசோதாவுக்குத் தெரியாது. சும்மா ஊரை சுற்றிப் பார்ப்பதற்காக வந்திருப்பதாக நினைத்தாள்.

துரைசாமிக்கு இரண்டு சகோதரிகள். ஒருத்தி பத்மா. இன்னொருத்தி, பாலுவின் தாயார். பத்மா மைசூரில் அவரை விடப் பன்மடங்கு செல்வ நிலையில் செழித்துக் கொண்டிருந்தாள். பாலுவின் தாயார் இளமையிலேயே விதவையாகிவிட்ட ஏழை. அவளுடைய சொத்து சுகம் எல்லாம் பாலுஒருவன்தான். துரைசாமி இருந்த ஊரிலேயே ஒரு சிறிய வீட்டில் இருந்து கொண்டு கணவன் விட்டுச் சென்ற சொற்பப் பணத்தை வைத்துக் கொண்டு பாலுவை ஒரு ஆளாக்கி விட்டாள். எதற்கும் சகோதரன் முன்பு கையேந்தி வந்து நின்றவளில்லை. "ஏன் அம்மா, இப்படித் தனியாகக் கஷ்டப்படுகிறாய்? எங்களுடன் வந்து இருந்து விடேன்! உனக்கு ஏதாவது வேண்டுமானால் என்னைக் கேளேன். இப்படி ஏன் ஒதுங்கியே இருக்கிறாய்?" என்று துரைசாமி அடிக்கடி சொல்வார். அப்படிச் சொல்லுவாரே தவிர, உண்மையில், அவர் உள்ளம் 'எங்கே வந்து ஒட்டிக் கொண்டு விடுவாளோ' என்றே நடுங்கும். இதை நன்றாகப் புரிந்து கொண்டே "எங்கே இருந்தால் என்ன அண்ணா? நீ ஒருவன் இருக்கிறாய் என்கிற தெம்பு ஒன்றே போதாதா?" என்று, கூறி விடுவாள்.

தங்கைக்காக அவர் செய்த உபகாரம், பாலுவுக்கு ஒரு வேலை தேடித் தந்தது தான். பாலு மட்டும் இவர்கள் வீட்டுக்கு அடிக்கடி வந்து போய்க் கொண்டிருப்பான். அதுவும் முதலில் தம்முடைய சௌகர்யத்துக்காக அவனை வரவழைத்துக் கொண்டிருந்தார். அந்தஸ்துக்கும் ஏழைமைக்கும் வித்தியாசம் தெரியாத யசோதா அவனுடன் சரி சமமாகப் பழகத் தொடங்கினாள். திடீர் திடீரென்று அவளுக்கு ஏதாவது தேவைப்படும். அல்லது எங்கேயாவது போக வேண்டியிருக்கும். எல்லாவற்றுக்கும் பாலுதான்! துரைசாமிக்கு இதில் அவ்வளவு விருப்பமில்லை என்றாலும் எதையும் கவனியாதவர் போலத்தான் நடிக்க வேண்டியிருந்தது. ஏதாவது சொன்னால் யசோதாவின் வதனம் வாடிவிடும். அதைக் காண அவர் உள்ளம் சகியாது. எல்லாவற்றையும் தீர ஆலோசித்த பிறகுதான் இந்த முடிவுக்கு வந்தார்.

மைசூருக்கு வந்து இரண்டு மூன்று நாட்களாகி விட்டன. யசோதா இல்லாத சமயம் பத்மாவிடம் சொன்னார்: "அக்கா! யசோதா கொஞ்ச நாளைக்கு இங்கு இருக்கட்டும். அவள் உடம்புக்கு ஊர் மாற்றம் இருந்தால் நல்லது என்று டாக்டர் சொல்லுகிறார். அதைச் சொன்னால் அவள் கேட்க மாட்டாள். 'எனக்கு என்ன உடம்பு?' என்று சண்டைக்கு வருவாள். அவளைப் பிடித்து வைத்துக் கொள்வது உன் பொறுப்பு!" என்றார். "அதற்கென்ன? ஆகட்டும்!" என்றாள் பத்மா. அதே போல் யசோதாவிடம், "நீ ஒரு மாசம் இங்கு இருக்கவேண்டுமென்று அத்தை ரொம்பச் சொன்னாள். ஏதோ அத்தை ஆசைப்படுகிறாள். நீஇருந்துவிட்டுத்தான் வாயேன்..." என்றார் துரைசாமி. வேறு வழியின்றி அரை மனத்துடன் ஒப்புக் கொண்டாள் யசோதா. ஒரு பெரிய

பாரத்தை இறக்கிவிட்ட திருப்தியுடன் ஊர் திரும்பினார் துரைசாமி.

அத்துடன் கவலை தீர்ந்து விட்டதா?

மறுநாள் முதற்கொண்டே பாலுவை வேறு ஊருக்கு மாற்றுவதற்கான பணியில் ஈடுபட்டார். அவர் அந்தரங்கத்தையோ முயற்சியைப் பற்றியோ எள்ளளவும் பாலுவுக்குத் தெரியாது.

ஒரு வழியாகக் காரியம் வெற்றியடைந்தது. பாலு பம்பாய்க்குப் போய் விட்டான்!

இதற்குள் நான்கு மாதங்கள் ஓடி விட்டன!

இனியும் பெண்ணைப் பார்க்காமல் சாப்பிடப் பிடிக்காது போலிருந்தது துரைசாமிக்கு. யசோதாவை அழைத்து வர மனைவியை அழைத்துக் கொண்டு மைசூருக்குப் பயணமானார்.

"என்னப்பா இது? ஒரு மாதத்தில் அழைத்துப் போவதாகச் சொல்லிவிட்டு நான்கு மாதங்கள் கழித்து வந்திருக்கிறீர்களே!" என்று கடிந்து கொண்டாள் யசோதா.

"என்னம்மா செய்யட்டும்? வேலைத் தொந்தரவு! உனக்கு இங்கு ஒரு குறைவுமில்லையே!"

இல்லையென்பதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டினாள் யசோதா.

"நாளைக்கு ஊருக்குப் போகலாமா?" என்றார் துரைசாமி.

"நான் இங்கேயே இருக்கேனே, அப்பா! இந்த ஊரை விட்டு வரவே மனசில்லை, அப்பா!" என்றாள் யசோதா கெஞ்சாக் குறையாக.

"இந்த ஊரை விட்டு வர யாருக்குத் தான் மனம் வரும்? அதற்காக!..."

"அதில்லையப்பா.....நான் இங்கு ஒருவரை..... மேற்கொண்டு பேச முடியாமல் நாணம் அவள் தலையைத் தாழ்த்தியது. துரைசாமி புரிந்து கொண்டார். இருந்தாலும் ஒன்றும் தெரியாதவர் போல், "சொல்லம்மா....." என்றார்.

"ஒருவரை நான் ரொம்பவும் நேசிக்கிறேன், அப்பா..."

"யாரம்மா அந்த அதிருஷ்டசாலி? சொல்லு! சீக்கிரமே உன் கல்யாணத்தை நடத்தி விடுகிறேன். பத்மாவின் பிள்ளையா?" அவர் குரலில் ஆவல் தொனித்தது.

"இல்லை, அப்பா! இன்னொருவர். இங்குதானப்பா பக்கத்து வீட்டில் இருக்கிறார்..." என்று இழுத்தாள் யசோதா.

"யாரம்மா அவர்?" துரைசாமியின் ஆவல் இன்னும் அதிகமாயிற்று. ஒருவேளை பத்மாவின் பிள்ளையை விட உயர்ந்தவனாயிருப்பானோ...?

"அத்திம்பேரின் ஆபீஸில் குமாஸ்தாவாக இருக்கிறார், அப்பா......"

துரைசாமியின் தலை சுழன்றது. கண்கள் இருண்டு வந்தன. சுழன்று சுழன்று எங்கோ பறப்பதைப் போல் உணர்ந்தார். மனைவியைப் பார்த்தார். "இதற்கு என்ன சொல்லுகிறீர்கள்?" என்று கேட்பதைப் போலிருந்தது, அவள் பார்த்த பார்வை.

"கல்யாணம் கடவுளால் நிச்சயிக்கப் படுகிறதென்று சும்மாவா சொல்லுகிறார்கள்! யார் யாருக்கு எதெது பிராப்தமோ, அதுதான் நடக்கும்! எங்கெங்கோ இருந்த இருவர்களையும் உங்களைக் கொண்டே விதி சேர்த்து விட்டது, பார்த்தீர்களா?" என்றாள் ராஜம்.

"ஏம்மா! பாலுவிடம் அப்படிப் பழகினாயே!" என்றார் துரைசாமி யசோதாவைப் பார்த்து.

"பழகினால்...? நானே விரும்பினாலும் அவன் என்னை ஏற்றுக் கொள்ள மாட்டான், அப்பா! அவன் ஒரு ஏழைப் பெண்ணைப் பார்த்து மணந்து கொள்ள விரும்புகிறான்....!" என்றாள். துரைசாமி சிலையாக நின்று கொண்டிருந்தார். ராஜத்தின் உதட்டில் ஒரு புன்னகை நெளிந்தது. அதற்கு அர்த்தம் அவளுக்குத்தான் தெரியும்!

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 104 சூலை

"ஓஹோ! வாதசூலைக்கு! ஓஹோ! பித்தசூலைக்கு! ஓஹோ! கர்ப்பசூலைக்கு!"

"ஓஹோ! வாரசூலைக்கு!....ஓஹோ! மாலை சூலைக்கு! வேண்டாமய்யா, நிறுத்தும். வாரசூலைக்கு ஒரு சம்பந்தமுமில்லை. அப்படி இருக்க மாலைசூலை—அயனசூலை என்று உமது கற்பனை கரைபுரண்டு ஓடுகிறதே!"

"ஆமாம். என் கற்பனை கரைபுரள வேண்டாம். உமது கற்பனை மட்டும் கட்டவிழ்ந்து ஓடலாமா?"

"நான் சொன்னது கற்பனையல்ல. மூர் மார்க்கெட்டின் முன் ஒரு நரிக்குறவன். ஏதோ சில வேர்களையும் கிழங்குகளையும் பரப்பி வைத்துக்கொண்டு சகலவித சூலைகளுக்கும் நல்ல மருந்துகளென்று ஸர்வ சூல நிவாரிணியாக மேற்சொன்ன விதம் விளம்பரம் செய்துகொண்டிருந்தான்..."

"ஓஹோ! அப்போது இந்த நரிக்குறவர்கள் ஊஸ்யோஹ்! பால்மணியோஹ்! கிரமணியோஹ்! என்று வியாபாரம் செய்வதைக் கைவிட்டு விட்டனரா?"

"முன்னேற்றம் ஐயா, முன்னேற்றம்! எல்லோரும் நம்நாட்டு மன்னரல்லவா?"

அதெல்லாம் எப்படியோ போகட்டும். 'சூலம்' என்ற சொல்லை, வலி, நோவு, என்ற பொருளில்தான் உபயோகிப்பது. ஆனாலும் சூலம் அல்லது சூலை என்றால் உதரசூலம் அல்லது வயிற்று வலி என்றுதான் வைத்தியர்களும், பாமரர்களும் புரிந்து கொள்வது வழக்கமாகி விட்டது. மற்ற சூலங்களைத் தலைவலியானால் சிரச்சூலம் என்றும் காது வலியானால் கர்ண சூலம் என்றும் குறிப்பிட்டுத் தெரிவிப்பதும் வழக்கந்தான்.

சூலம் அல்லது சூலை என்பதை வயிற்று வலி என்று அறியும்போது, வைத்திய சாஸ்திரங்களில் பலவிதமாகப் பிரித்துச் சொல்லியிருப்பதைக் காண நேரிடுகிறது. ஒவ்வொன்றுக்கும் காரணங்கள், அதற்கு உள்ள முக்கிய லக்ஷணங்கள், ஒவ்வொன்றுக்கும் உள்ள சிகிச்சை செய்யாவிடின் ஏற்படக் கூடிய விளைவு, இவை எல்லாம் சொல்லப் போனால் பெரியதொரு சிரச் சூலமாகி விடும். வைத்தியம் படிப்பவர்களுக்கு இத் தலைவலியை விட்டு விடலாம். வாதமா? பித்தமா? கபமா? ஆமமா? அன்ன திரவமா? பரிணாமமா? என்ற சாஸ்திர விசாரம் நமக்கேன்!

"வயிற்று வலியா? சரி! இதோ கொஞ்சம் குணமாக்க வகை சொல்கிறேன். தற்போதைக்குச் சிறிது குணமாகட்டும். பிறகு வைத்தியர்களோ டாக்டர்களோ சாவதானமாக வேண்டியதைச் செய்து கொள்ளட்டும்" என்ற வகையில் சில உபயோகங்களைத் தெரிவிக்கலாமே!

ஆகாரத்தை ருசித்துப் சாப்பிடுவான். பசித்த பிறகுதான் சாப்பிடுவான். ஆனால் அச்சமயத்தில் சரீர நிலைக்கு அஹிதமான ஆகாரத்தைப் புசித்திருப்பான். அல்லது அவசர அவசரமாக அள்ளிப் போட்டுக் கொண்டு விழுங்கி இருப்பான். அல்லது அளவுக்குச் சிறிது அதிகமாகச் சாப்பிட்டும் இருக்கலாம். இப்படிப் பலதரத்தில் ஏதோ ஒரு வகையில் அன்ன பானங்களில் அபத்தியமேற்பட்டிருக்கலாம். அவ்வளவுதான். சாப்பிட்ட பத்துப் பதினைந்து நிமிஷங்களுக்குள் வயிற்று வலி தொடங்கும். ஆகார விஷயத்தில் அபத்தியத்தைச் சகிக்க மாட்டேன் என்று அன்ன கோசம் சீற்றமுறுவதால் இந்நிலை ஏற்படுகிறது.

"அட கஷ்டகாலமே! சீற்றமுறும் அன்னகோசம், சீற்றத்துக்குக் காரணமான அபத்தியாஹாரத்தை ஒரு 'ஊவே' போட்டு வாந்தியாக வெளியே தள்ளி விட்டால் உபத்திரவம் தீருமே! இதைச் செய்யக்கூடாதா?" என்கிறீர்களா?

அப்படிச் செய்வதும் உண்டு. சீற்றத்துக்குக் காரணமான அபத்தியாஹாரத்தை "வாந்தியாகவும்—கிந்தியாகவும்" வெளிப்படுத்திவிடுவதும் உண்டு. அப்படிச் செய்யாமலிருப்பதும் உண்டு. ஆனால் வெளிப்படாமல் இருக்கும் நிலையில் தீவிரமான வயிற்றுவலிஉண்டாகும்.

இதென்னதென்று சொல்லத் தெரியாத ஒருவகை வலி. அந்த வலி அல்லது சூலத்துக்குக் காரணமான அபத்திய ஆகாரம் ஏறத்தாழ அன்ன கோசம் முழுதும் கடந்து செல்லும் வரையில் வலி இருந்து கொண்டே இருக்கும்.

சமுத்திரத்தில் அலை வருவதைப் பார்த்திருப்பீர்களே! ஒரு அலை எழும் - அப்போது ஒரு அலை விழுந்து கொண்டிருக்கும்-அதில் ஏற்கனவே எழுந்து பின் விழுந்து பின் வாங்கிக் கொண்டிருக்கும் அலை மறைந்தவண்ணம் ஓயும். முதலில் எழுந்த அலை விழும்-விழுந்து கரையை நோக்கி ஓடும்.

இதே விதந்தான் இந்த சூலம் என்னும் வயிற்று வலியும். குறிப்பிட்ட ஓரிடத்தில் மெதுவாகத் தொடங்கும். இந்த

வலி வரவர அதிகமாகிக் கொண்டே போய் ஒரு சமயம் உச்ச நிலையை அடையும். அந்நிலையில் சிறிது நேரம் அப்படியே நின்று பிறகு சிறிது சிறிதா கக் குறைந்து கொண்டே வரும். "அப்பாடா!" என்று எண்ணும் முன்பு இன்னொரு வலியின் அலை ஆரம்பித்து விடும். சில சமயங்களில், சிலருக்கு ஓயும் அலைக்கும், மறுபடியும் தொடங்கும் அலைக்கும் இடையே சிறிதுகூடத் தாமதமேஇராது. அதனால் விட்டு விட்டு அலை அலையாக நோவு உண்டாகிறது என்று தெரியாமல் தொடர்ந்து நொந்து கொண்டே இருப்பது போல் தோன்றும்

வயிற்றில் இந்த சூலம் வலியுடன்கூட வயிறு உப்பியும் இருக்கிறதா என்றும்- வயிற்றைத் தொட்டுப் பார்த்தால் கெட்டியாகக் கல் போலிருக்கிறதா? தொட்டாலும் சகிக்க முடியாத அல்லது தொட்டால் அதிகமாகும் வலியா என்பதை யெல்லாம் அறிய வேண்டும்.

மேலே தெரிவித்த குறிகளுடன் கூடிய வயிற்றுவலி - [சூலம்] யானால் அதற்கு ஒத்தடங்கள் மிகவும் ஹிதம். ஒரு கெட்டியான புட்டியிலோ - அல்லது வேறு பித்தளை அல்லது செப்புப் பாத்திரத்திலோ கொஞ்சம் வெந்நீரை எடுத்துக் கொண்டு வயிற்றின்மேல் வைத்துக் கொண்டால் வலிக்கு இதமாக இருக்கும். கொஞ்சநேரம் செல்லச் செல்ல வலியும் குறைந்து கொண்டே வரும். பழுக்கச் சூடான ஓட்டின் சில்லியை அரிசித்தவிட்டின் உள்ளிட்டு, ஒரு சிறு துணியில் மூட்டையாகக் கட்டிக் கொண்டு, பொறுக்கும் சூடுள்ள நிலையில் ஒத்தடங் கொடுக்கலாம். முன்னொரு கால் வாத சிகிச்சையின் கீழ் விளக்கியிருக்கும் தாபஸ்வேதத்தைத் தரலாம். ரப்பரில் செய்த வெந்நீர்ப் பையில் வெந்நீரை நிரப்பியும் வயிற்றின்மேல் வைத்துக்கொண்டு கிடக்கலாம். ."

ஆமாம், இப்படி ஏதாவதொரு வகையில் ஒத்தடங் கொடுப்பதானால் மனிதன் மல்லாந்து படுத்திருத்தல் அவசியமில்லையா? அப்படிப் படுக்கவே இயலாத தான வலியொன்று உண்டு. ஏன்? நிமிர்ந்து நிற்கவும் முடியாது. குனிந்தபடி கூனனைப் போல்தான் நடக்க முடியும். மரவட்டை போல் சுருட்டிக் கொண்டுதான் படுத்திருக்க முடியும். நோவென்னமோ முன் சொன்னது போல் அலையலையாய் வருவது. இதில் மேலே தெரிவித்த வைத்தியமும் நோயாளிக்கு ஒத்தடங் கொடுக்க இயலாதே என்கிறீர்களா?

கவலைப்பட வேண்டாம். என்ன செய்யலாமென்பதைத் தெரிவிக்கிறேன்.

# சிரிக்காதே!

"ஒரு பேப்பரில் வந்த விளம்பரத்தைப் பார்த்து இவரைக் கல்யாணம் செய்து கொண்டேன்."

"சந்தோஷமாய் இருக்கிறாயா?"

"அந்தப் பேப்பருக்குச் சந்தா கட்டுவதை நிறுத்தி விட்டேன்."

❋

"உங்கள் உடம்பில் ரத்தமேயில்லை. நீங்கள் ஆகாரத்தில் இரும்பு சேர்த்துக் கொள்ள வேணும்!"

"இந்த உடல் நிலையில் இரும்பை எப்படிச் சாப்பிடுவது? பல்லெல்லாம் வேறு ஆட்டம் கண்டிருக்கிறதே!"

❋

"நீ இறந்து போகும் காட்சியில் நன்றாக நடிக்கவில்லை!"

"என்ன சார்! அப்படிச் சொல்லி விட்டீர்கள்! நான் அதில் என் உயிரைக் கொடுத்தல்லவா நடித்திருக்கிறேன், சார்!"

❋

டாக்டர்: (பாட்டியிடம்) உங்கள் கணவருக்குத் தண்ணீரைத் தவிர வேறு எதுவும் கொடுக்காதீர்கள். கொடுத்தால் அது அவரைக் கொன்று விடும்.

பாட்டி: கொடுக்கா விட்டால் அவர் என்னைக் கொன்று விடுவாரே!

❋

மனைவி: எனக்கு இன்னொரு 'செட்' புடவை வாங்கிக் கொடுங்கள்! இந்தத் தெருவில் இருப்பவர்களுக்கெல்லாம் இவ்வளவு புடவைகள்தான் எனக்கு இருக்கிறது என்று பார்த்துப் பழகிப் போய் விட்டது!

கணவர்: அதற்கென்ன! வேறு தெருவுக்குக் குடி போய் விடலாம்!

❋

"நாடகம் ஆரம்பிக்கும் போது கலர் இரண்டணாவுக்குக் கொடுத்தே. இடைவேளைக்கு மேல் மூன்றணா என்கிறாயே!"

"நாடகம் முதலில் மோசமா இருந்தது. இடைவேளைக்கு மேல் நன்றாயிருந்து விட்டதே, சார்!"

❋

"காதலியே! உன் மேல் உள்ள காதலுக்காக என்னை நீ சந்திரமண்டலத்துக்குப் போ என்று சொன்னால் கூட நான் போகத் தயார்!"

"நிச்சயம் போகச் சொல்லுகிறேன்! ஆனால் நான் சொல்லுகிற வரையில் நீங்கள் அங்கிருந்து திரும்பக் கூடாது!"



# ஞானம்

பிலஹரி

மில் சட்டையை எடுத்து அணிந்த வண்ணம், சீமா கடையிலிருந்து வெளியேறிய போது, மணி பத்துக்கு மேல் இருக்கும். ஊர் அடங்கி விட்டது.

விடியற்காலை நாலரை மணிக்கு—அதாவது தினந்தோறும் வீதி வலம் வரும் பஜனை கோஷ்டியை விட்டுக் கிளம்பிய நேரத்தில்—கடைக்குள் புகுந்தவன்தான். இப்போது தான் வெளியே வருகிறான். வேலை, இடுப்பை ஒடித்து விட்டது. வழக்கமாக, நடுப்பகல் நேரத்தில் கிடைக்கும் இரண்டு மணி நேர ஓய்வு இன்று கிடையாது. ஊரில் தேர்த்திருவிழா. கூட்டத்துக்குக் கேட்க வேண்டுமா? போடப்பட்ட சரக்குகளில் இம்மியளவு கூட மிஞ்சவில்லை. ஒரு வாரத்தில் கிடைக்கும் லாபத்தை, இன்று ஒரு நாள் வியாபாரத்திலேயே முதலாளி பார்த்திருப்பார்.

மடியைத் தடவிப் பார்த்துக் கொண்டான் சீமா. அன்று செய்த விசேஷ வேலைக்காக உபரியாக முதலாளி கொடுத்த இரண்டு ரூபாய்கள் பத்திரமாக இருந்தன.

'இன்னும் கடைசி பஸ் கிளம்பியிருக்காது. அதைப் பிடித்தால் 'டாண்'னு கால் மணியில் மெயின்கார்டு கேட் போயிடலாம். 'ராஜா'வில் பத்தரை மணி ஆட்டம் பார்க்கலாமே!' கடை வாசலில் நின்றபடியே யோசனை செய்தான் சீமா.

மறுகணமே, தன் முடிவை மாற்றிக் கொண்டு விட்டான்.

மறுநாள் கடை விடுமுறை, சீட்டுக் கச்சேரி உண்டு என்ற ஞாபகம் வந்து விட்டது அவனுக்கு.

'இதுவே ஒரு 'ரவுண்டு'க்குக் கூடப் பற்றாதே! என்ன சினிமா வேண்டிக் கிடக்கு? விடிந்தவுடன், முதல் காரியமா எங்கேயாவது பத்து ரூபாய் புரட்டினால்தான், ஆட்டத்தில் உட்கார முடியும்!'

சிந்தித்தபடியே, வீட்டை நோக்கி நடை போடத் தொடங்கினான் அவன்.

'டக்...டக்...டக்'

ஒரு விரலால், வாசற்கதவை மெதுவாகத் தட்டினான் சீமா. கொஞ்ச நேரம் பதிலில்லை.

''நாத்திரம்! புருஷன் வீட்டுக்கு வரல்லியேன்னு ஒரு பெண்ணுக்குக் கவலை இருக்காது? அதற்குள் என்ன தூக்கம் வேண்டிக் கிடக்கு?'' என்று முணுமுணுத்தபடியே, கொஞ்சம் பலமாகவே கதவைத் தட்டினான்.

யாரோ நடந்து வரும் ஓசை எழுந்தது. அவனுக்கு வந்த ஆத்திரத்தில், அது மாத்திரம் மரகதமாக இருந்திருந்தால், வாசலிலேயே நாலு அறை விட்டிருப்பான்.

அவன் குடியிருக்கும் ஒரே ஒரு இருட்டறையைத் தவிர, பாக்கி வீடு முழுமையையும் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும் மற்றொரு குடித்தனக்காரர், கதவைத் திறந்தார்.

அவரை நேருக்கு நேர் பார்க்கவே, அவன் முகம் கூசியது. தான் தொந்தரவு கொடுத்து விட்டதற்காக, எங்கே கோபித்துக் கொள்ளப் போகிறாரோ என்று பயந்தான். ரயில்வேயில் நானூறு ரூபாய் சம்பளம் வாங்கும் உத்தியோகஸ்தர் அவர். அவனோ, ஹோட்டலில் வேலை பார்க்கும் சர்வர். இருவர் அந்தஸ்துக்கும் வேறுபாடு, கொஞ்சமா நஞ்சமா?

கதவைப் பின்புறம் தாழிட்டு விட்டுத் தன் அறையை நோக்கி நடந்து கொண்டிருந்தவனை அவர் குரல் நிறுத்தியது.

''இந்தாப்பா!...ஒரு விஷயம்!...''

நின்றபடியே, தலையைத் திருப்பிப் பார்த்தான் சீமா.

''என்னப்பா இது?...உங்க தொந்தரவு பெரிசாப் போச்சே!... நினைச்ச சமயம் நீ பாட்டுக்கு வந்து கதவைத் தட்டறே!...எங்க தூக்கமெல்லாம் கலைஞ்சு போறது!... ஒவ்வொரு நாள் நடுராத்திரிக்கு வரே!...'ஏன்'னு கேட்க யாரும் கிடையாதுன்னு நினைப்போ?''

ஏதோ சண்டைக்குக் கிளம்பத் தயாராக இருப்பதுபோல் பேசினார் அவர். அவன் வாய் திறக்கவில்லை. அவர் அந்தஸ்து என்ன? அவன் அந்தஸ்து என்ன?

'முதல்லேயே நான் வீட்டுக்காரர்கிட்டே முட்டிக் கொண்டேன். அவர் கேட்காமல், உன்னைக் குடித்தனம் வைச்சிருக்கார்!''

''என்ன சார் இது? அப்படி ஒண்ணும் நாங்க தப்புத்தண்டா...'' என்று மெதுவாக ஆரம்பித்தான் சீமா.

''சர்தாம்பா! எல்லாம் ஒழுங்குதான்! உன் நடவடிக்கை யெல்லாம் எனக்குத் தெரியாதுன்னு எண்ணமா? உனக்கு மேலே இருக்கான் உன் பிள்ளை. வீட்டிலே ஒரு சாமான் பாக்கிவிடாமல், கிணற்றிலே தூக்கித் தூக்கிப் போடறான்! இன்னைக்குச் சாயங்காலம் எங்க வீட்டு வெள்ளிச் செம்பை எடுத்துப் போட்டுட்டான்!''

''நாளை விடிஞ்சதும் முதல் காரியமா, ஆளை விட்டுக் கிணற்றிலே இறங்கி எடுத்துக் கொடுக்கச் சொல்லிடறேன், சார்!''

பணிவுடன் கூறினான் சீமா. வாசற்படி தாண்டி விட்டால், அவன் போக்கிரிதான். ஆனால் வீட்டுக்குள் அவருடன் எதிர்த்து வாயாட, அவர் வார்த்தைகளுக்கு மறுப்புக் கூற அவனுக்கு ஏனோ தைரியம் கிடையாது.

''அவ்வளவு ரோசம் இருக்கிறவன் தனக்கு ஏற்ற இடமாகப் பார்த்துக் குடியிருக்கணும். பிள்ளையை அடிச்சு உதைச்சு வளர்க்கணும்!'' பெரிய மனிதர் அடுக்கிக் கொண்டே போனார்.

''என்ன சார் இப்படிச் சொல்றேளே! நான் தினமும் குழந்தையை எப்படிக் கொல்றேன்? அதுக்கு எங்கே சார் தெரியறது? அதுவும் ரெண்டுங்கெட்டான்தானே?''

'ஞானம்' எங்கிருந்தும் பிறக்க முடியும்! குழந்தையின் கைத்தவறுதலில் கூடத்தான்

"வாயிலே ஒண்ணும் குறைச்சல் இல்லே! சோத்துக்கு வழியில்லாவிட்டாலும், 'இது' களுக்கு ஜம்பம் மாத்திரம் குறையாது! சரி, சரி! உங்கிட்டே என்ன பேச்சு? நாளைக்கே வீட்டுக்காரரைப் பார்த்து ரெண்டிலே ஒண்ணு முடிவு பண்ணிடறேன்!"

உறுமியபடியே அவர் உள்ளே சென்றார்.

கொதிக்கும் உள்ளத்துடன், பிற்பகுதியிலுள்ள தன் அறைக்குள் நுழைந்தான் சீமா.

உள்ளே மங்கிய வெளிச்சத்தைப் பரப்பிக் கொண்டிருந்தது புகை ஏறிய சிம்னி விளக்கு. சுவரில் சாய்ந்தபடியே அரைத் தூக்கத்தில் ஆழ்ந்திருந்த மரகதமும், அவள் தொடையில் தலைவைத்துக் கொண்டு அப்போதுதான் கண்ணயரத் தொடங்கிய குழந்தை நீலகண்டனும் விழித்துக் கொண்டனர்.

"ஏய்! இன்னிக்கு என்ன கலாட்டா நடந்தது?" கண்களில் அனலைக் கக்கியபடியே, வினவினான் சீமா. மரகதம் நடுநடுங்கி விட்டாள். எழுந்து நின்ற தாயின் சேலையில், ஒளிந்து கொண்டான் நீலகண்டன். நான்கு வயதுக் குழந்தை அவன்.

'என்னடி, கல்லாட்டம் நிக்கறே! கேட்கறதுக்குப் பதில் சொல்லு!" அவன் உறுமினான். ஏற்கெனவே முன்கோபியான அவன், ஆத்திரம் வேறு சேர்ந்துகொண்டால் என்ன செய்வான் என்று அவளுக்குத் தெரியாதா?

"ஒண்ணுமில்லே! என்னவோ குழந்தை விளையாட்டுப் போல......" தடுமாறியபடியே ஆரம்பித்தாள் மரகதம்.

"சீ!...வாயை மூடு!"

குழந்தையை நெருங்கினான் சீமா. பயத்துடன் தாயைப் பற்றிக்கொண்டது குழந்தை. அவள் கண்களில் நீர் பெருகிவிட்டது.

"வேண்டாமே! நீங்க வேறு கொலே பண்ணுதீங்கோ! நான் அடிச்சதே இன்னும் நாலு ஜன்மத்துக்குப் போதும்!"

அவள் முடிக்கவில்லை. சடேரென்று, குழந்தையைப் பற்றி இழுத்தான் சீமா. வேடன் கையில் அகப்பட்ட மான் போல் மலங்க மலங்க விழித்தது குழந்தை.

"எலே! இனிமேல் இப்படியெல்லாம் செய்ய மாட்டியே?" என்று கூறியபடியே, தன் அசுர பலத்தை யெல்லாம் கைகளில் தேக்கிக் குழந்தையின் பட்டுப்போன்ற முதுகைப் பதம்பார்த்து விட்டான்.

நெளிந்து, வளைந்த குழந்தையை ஓடி வந்து அணைத்துக் கொண்டாள் மரகதம். குழந்தை துடிதுடித்துப் போய் விட்டான்.

"வேண்டாம்! வேண்டாம்! கொலே பண்ணாமல் இருக்க மாட்டேளா? நம்ம வயித்திலே பிறந்ததுக்கு, நாய் வயித்திலாவது இது பிறந்திருக்கக் கூடாதா?" என்றபடியே விசும்பிய மனைவியை நெற்றிக் கண் கொண்டு நோக்கினான் சீமா.

மறு நிமிஷம் சட்டையைக் கழற்றி வீசி விட்டு, அப்படியே கீழே படுத்துக் கொண்டான் சீமா. ஒரு மூலையில் ஒடுங்கி விட்டாள் மரகதம், நீலகண்டனை அணைத்தபடியே. வெகு நேரம் அவள் விசும்பல் கேட்டது.

பத்தாவது பிராயத்தில் எந்த வேளையில் சீமா காப்பி டபராவைக் கையில் பிடிக்கத் தொடங்கினானோ, தெரியவில்லை! இன்றுவயது முப்பதாகியும், டபரா அவன் கையிலிருந்து விலகவில்லை. ஒன்றல்ல, இரண்டல்ல—இருபது வருஷங்கள். இயந்திரம்போல் ஒரே வேலைதான். ஆரம்பத்துக்கு இப்போது ஏதோ நாலைந்து அதிகமாகக் கிடைத்ததேயன்றி, வேறு அபிவிருத்தி கிடையாது.

திருச்சி ஜில்லாவிலே அவன் பணி புரிந்திராத கடையே கிடையாது என்று துணிந்து கூறலாம். ஒரு மாதம் மலைக்கோட்டை அடியில் ஒரு தண்ணீர்ப் பந்தலில் வேலை பார்ப்பவன், மறு மாதம் தென்னூரில் எங்கேயாவது ஒரு 'கபே'யில் காப்பி ஆற்றிக் கொண்டிருப்பான். அதற்கு மறுமாதம் பாலக்கரை, பிறகு, சிந்தாமணி, திருவானைக் காவல்—இப்படி ஒவ்வொரு இடமாக மாறிக் கொண்டிருப்பான். எந்த இடத்திலும் ஒரு மாத காலத்துக்குமேல் அவன் தங்குவது கிடையாது என்பது ஊரறிந்த ரகசியம்.

பொறுப்பற்ற தன்மை, திமிர் தாங்கிய உத்தண்டமான பேச்சு, கெட்ட சகவாசம்—இவை யெல்லாம் ஒன்று சேர்ந்திருக்கும் போது, அவன் எப்படி உலகத்தாரைப் போல் வாழ முடியும்?

பாவம், அவனையும் குற்றம் சொல்ல முடியாது. மனிதர் வஞ்சனை செய்தால், மறந்து விடலாம். தெய்வமே வஞ்சித்தபோது, யாரைக் குறை கூறுவது? இல்லா விட்டால், தாயின் கருவறையில் வாசம் செய்தபோதே, தந்தையை விழுங்கியிருப்பானா? இவ்வுலகில் ஜனித்த பத்து மாதத்துக்கெல்லாம், தன்னைப் பத்துமாதம் சுமந்தவளுக்கும் பிரியா விடை கொடுத்திருப்பானா? ஓராண்டு காலத்துக்குள், ஒருவர்பின் ஒருவராக ஒழிந்துவிட்டு, ஏன் தனியாக நிற்க வேண்டும்?

ஏதோ பாவ புண்ணியத்துக்கு அஞ்சிய தூரத்து உறவுக் கிழவி ஒருத்தி அவனை எடுத்துப் பத்து வயது வரை ஆளாக்கி, தலையில் தண்ணீர் தெளித்துத் தெருவில் இறக்கி விட்டாள். அன்று ஒரு முழத் துண்டு உடம்பை அலங்கரிக்கத் தேரடிக் கடையில் முதன் முறையாக நுழைந்தவன்தான். இன்றுவரையில் அத்தொழிலை விட்டு அகலவில்லை.

அடிக்கவும், அணைக்கவும் எவருமின்றிக் கழித்துவிட்ட குழந்தைப் பருவம். பாசமும் பரிவும் பாராட்டப் பந்தம் எதுவுமில்லாத சூழ்நிலை. உறவும் உரிமையும் கொண்டாட உலகில் எவருமில்லாத [illegible]தமான சுற்றுப்புறம். தன்னிச்சையாக, அடக்குவாரின்றித் தறுதலையாக வளர்ந்து விட்டது அவன் குற்றம் என்று எப்படிக் கூற முடியும்?

ஏதோ தன் போக்கிலே ஓடிக் கொண்டிருந்த அவன் வாழ்க்கையில் விதி குறுக்கிட்டது. சுற்றியிருந்த நண்பர்களும், ஏதோ எல்லாம் போக எஞ்சியிருந்த ஓரிரு உறவினர்களும், தொந்தரவு செய்து அவனுக்குக் குடும்பம் என்று ஏற்படுத்திவிட்டனர்.

உள்ளூர்ப் பள்ளியொன்றில் ஆசிரியர் வேலை பார்க்கும் ஒரு அபாக்கியசாலி—வரிசையாக ஏழு பெண்களைப் பெற்றவர்—துணிந்து வந்து, தமது மூத்த மகளைக் கொடுத்தார். ஐந்து வருஷங்களுக்கு முன்புதான் கல்யாணம் நடந்தது.

இல்லறத்தை ஏற்றுக்கொண்ட பிறகாவது, அவன் ஒழுங்காக இருந்தானா? பொறுப்

புணர்ச்சி அடைந்தானா? ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா?

அதே ஊதாரித்தனம், ஊர் சுற்றல், திமிர்ப் பேச்சு — இவைகளுக்குக் குறைவில்லை. இருந்தும், ஒருவிதத்தில் அவனைக் கோவிலில் வைத்துத்தான் கும்பிட வேண்டும். கொண்டவளை நட்டாற்றில் விட்டு விடும் வர்க்கத்தில் மட்டும் அவன் ஏனோ சேரவில்லை. மாதச் சம்பளம் கைக்கு வந்தவுடன்—அது சொற்பமாக இருந்தாலும் — கொஞ்சம் தனக்காக எடுத்துக்கொண்டு பாக்கி எல்லாவற்றையும் அவளிடம் கொடுத்து விடுவான். அந்தமட்டும் மரகதம் அதிர்ஷ்டசாலிதானே?



கலியாணமான ஒரு வருஷத்துக்கெல்லாம் நீலகண்டன் பிறந்தான். சீமாவின் குழந்தை என்று சொல்லும்படியாகவா இருந்தது அது?

கொள்ளை அழகு: செக்கச் செவேலென்ற உடல், கருண்ட கேசம், தலை கொள்ளாத மயிர். எடுப்பான நாசி. சதா குறும்பு வழிந்தோடும் கள்ளப் பார்வை. இவ்வளவுக்கும், ஒன்றுக்கு நாலு பங்கு விலை கொடுத்து உயர்ந்தரகப் பால் பொடியா அவனுக்கு வாங்கிக் கொடுத்தான் மரகதம்? சாதம் வடிக்கும் போது, கொதிக்கும் கஞ்சியில் கொஞ்சம் எடுத்து, இரண்டு உப்பைப் போட்டுக் கொடுப்பான். அதுவே, குழந்தையை எவ்வளவு புஷ்டியுடன் வளர்த்தது?

விஷமம் என்றால் சாதாரண விஷமமா? நாள் ஆக ஆகக் குழந்தையின் போக்கிரித்தனத்துக்கு அளவுமில்லை, அணையுமில்லை என்றாகி விட்டது. ஒவ்வொரு குழந்தைக்கும் ஒவ்வொரு வித விளையாட்டு. மற்றக் குழந்தைகளிடம் காண முடியாத ஒரு விநோத விஷமம், நீலகண்டனிடம் குடி புகுந்திருந்தது. கையில் எந்தப் பொருள் கிடைத்தாலும் சரிதான்—அது எவருடையதாக இருந்தாலும்—மடமட வென்று ஓடிக் கிணற்றில் போட்டுவிட்டுக் கைகொட்டிச் சிரிப்பான். சீமா எவ்வளவோ அடக்கிப் பார்த்து விட்டான். ஒன்றும் பயனில்லை.

பெற்றவள் வேண்டுமானாலும், பல்லைக் கடித்துக் கொண்டு பொறுக்கலாம். ஊராருக்குத் தலையெழுத்தா, என்ன? அதுவும், இப்போது அவன் குடியிருக்கும் வீட்டில் உள்ள ரயில்வேக்காரரைப் பற்றியோ கேட்க வேண்டாம்.

யார் செய்த புண்ணியமோ, கடந்த ஓராண்டாக விடாமல் வேலைபார்த்து வந்தான் சீமா. கடைக்கு அடிக்கடி சாப்பிட வரும், ஒரு பெரிய மனிதரை எப்படியோ சிநேகம் பிடித்துக் கொண்டு விட்டான். அவருக்குச் சொந்தமான ஒரு வீட்டில், ஒரே ஒரு சிறு அறை மாத்திரம் பூட்டி வைக்கப்பட்டிருந்தது. ஊருக்கெல்லாம் பொல்லாதவன், ஒருவர் கண்ணுக்காவது நல்லவனாகத் தோன்ற மாட்டானா? அவன் அதிர்ஷ்டம், அவர் பச்சாத்தாபத்துக்குப் பாத்திரமானான்: மிகக் குறைந்த வாடகையில், அந்த அறையை அவனுக்கு இருக்கக் கொடுத்து விட்டார் அவர்.

மற்றொரு குடித்தனக்காரரான ரயில்வேக்காரர், எவ்வளவோ ஆட்சேபணை தெரிவித்துப் பார்த்துவிட்டார். வீட்டுக்காரர் அதற்கெல்லாம் மசியவில்லை.

ஆனால், இரு குடித்தனக்காரர்களுக்கும் வந்த நாள் முதற்கொண்டு சண்டை சச்சரவுதான். சீமாவும் அவன் குடும்பத்தாரும் செய்ததெல்லாம் குற்றமாகப்பட்டது மற்றவருக்கு. அதுவும், குழந்தை நீலகண்டனின் விஷமம், அவர் கண்களை உறுத்தியபடியே இருந்தது. எனவே, மறைமுகமாகவும், நேரடியாகவும் எவ்வளவோ ஏசுவார்.

விடியற்காலைநேரம். மணி நாலரை இருக்கும். தெருவிலிருந்து ஜாலரா சத்தம் எழத் தொடங்கியது. பஜனை புறப்பட்டு விட்டது.

வழக்கம்போல் கண் விழித்தான் சீமா. இனிமேல் உறக்கம் எங்கேயோ வரப்போவதில்லை. இடுப்பில் செருகியிருந்த டப்பியை எடுத்து, ஒருதரம் மூக்கில் உறிஞ்சினான். பொடியின் காரம் உள்ளத்தில் விழிப்பை ஏற்படுத்தியது.

'ஆறுமணிக்குக் காவேரிக்குப் போய் ஒரு முழுக்குப் போட்டு விட்டு வரவேண்டும். வழக்கமாக எட்டு மணிக்கெல்லாம் சீட்டாட்டம் தொடங்கிவிடும். இன்னும் பத்து ரூபாயாவது புரட்ட வேண்டாமா? அடகு வைக்கலாமென்றால், என்ன இருக்கிறது? நாலு மாதங்களுக்கு முன்பு நீலகண்டனுக்கு வந்த வியாதி, மரகதத்தின் அரைப் பவுன் மாங்கல்

யத்தையும் கட்டிப் பறித்து விட்டது. இப்போது, அதன் இடத்தில் மஞ்சள் சரடுதான் தொங்குகிறது ... உம்! ... எப்படிச் சமாளிப்பது?...சிந்தித்தபடியே எழுந்து நின்றான் சீமா. சற்று நேரம் காற்றாட வெளியில் போகலாமே என்று தோன்றியது அவனுக்கு.

அறைக் கதவைத் திறந்து கொண்டு, வெளியே வந்தான். முன்கட்டைக் கடக்கும் போது, மெதுவாகவே நடந்தான். எங்கேயாவது அந்தப் புண்ணியவான் விழித்துக் கொண்டு விட்டால் என்ன செய்வது?

ரேழியைக் கடந்து கொண்டிருந்தான். சடேரென்று, காலில் ஏதோ ஒன்று இடறியது. குனிந்து அதைக் கையில் எடுத்தான்.

தூக்கிவாரிப் போட்டது அவனுக்கு. சிறிய வெள்ளிக் கிண்ணம் அது. அந்தப் பெரிய மனிதர் வீட்டுக் கிண்ணம்தான் என்று அவனுக்கு நன்றாகத் தெரியும். அவர்கள் வீட்டுக் குழந்தைக்கு அதில் சாதம் போடுவதை, எவ்வளவோ முறைகள் அவனே தன் கண்ணால் பார்த்திருக்கிறான்.

சுற்றி ஒருமுறை பார்த்தான் சீமா. எங்கும் இருள்தான். யாரும் அவனைக் கவனிப்பதாகத் தோன்றவில்லை. ஏன்? இன்னும் ஒருவருமே கண் விழிக்க வில்லையே! அதை நாம் ஏன் எடுத்துக் கொள்ளக் கூடாது? விடிந்தால், ஆட்டத்துக்குப் பணம் வேண்டாமா?

சீமாவுக்கு உள்ளங் கை அரித்தது. சபலம் தலை தூக்கியது. மேற்கொண்டு யோசிக்காமல், கிண்ணத்தைத் துண்டில் மறைத்துக்கொண்டு, வேகமாகத் தன் அறைக்குச் சென்றுவிட்டான்.

அவன் நுழையும் சமயம், மரகதம் புரண்டு படுத்தாள். அவனுக்கு வியர்த்துக் கொட்டியது. அவள் கண்களில் இது படவே கூடாது.

அறையின் ஒரு மூலையிலே—மிகவும் இருட்டான இடத்திலே—கரி மூட்டை... வைத்திருந்தாள் மரகதம். விளக்கு ஏற்றினால் கூட, அந்த இடத்தில் வெளிச்சம் தெரியாது. அந்தக் கரி மூட்டைக்குப் பக்கத்தில், கிண்ணத்தை மறைத்து வைத்தான் சீமா. அதன் அருகிலேயே, துண்டை உதறிவிட்டு, மறுபடியும் படுத்துக் கொண்டான்—அதற்குக் காவலாக. விடிந்தவுடன் முதல் காரியமாக,கட்டிக் கடை செட்டியாரிடம் அதைக் கொடுத்துப் பணமாக்கி விட வேண்டியதுதான்!

தன்னை மறந்து உறங்கிக் கொண்டிருந்த சீமா, சடாரென்று விழித்துக் கொண்டான். வெளி முற்றத்தில் பளீரென்று வெய்யில் காய்ந்து கொண்டிருந்தது.

'அடேடே!...மணி எட்டு ஆயிடுத்துப்போல் இருக்கே!...' என்று முணு முணுத்தபடியே எழுந்து உட்கார்ந்து கொண்டான்.

''பேச்சைப் பாரு, பேச்சை! விடிந்ததும் முதல் காரியமா கிணற்றிலிருந்து சொம்பை எடுத்துத் தரேன்னு வாய் கிழியப் பேசினானே! எடுத்துக் கொடுத்தானா? அவனுக்கு என்ன அக்கறை?...'' என்று முற்றக் கட்டில், குடித்தனக்காரர் கூச்சல் போட்டுக் கொண்டிருந்தார். அது சீமாவின் காதில் வந்து மோதியது.

சுறுசுறுப்புடன் எழுந்து நின்றான் சீமா. முன்பக்கம் விரைந்து சென்றான். முற்றத்தை ஒட்டி அமைந்துள்ள கிணற்றுப் பக்கம் நின்று கொண்டிருந்தார் ரயில்வேக்காரர். அவர் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்துக் கொண்டிருந்தன.

''இதோ போய் ஆளை அழைச்சிண்டு வரேன், சார்!...என்னவோ கொஞ்சம் அசதியா தூங்கிட்டேன்.'' என்று மெதுவாகக் கூறினான் சீமா.

ரயில்வேக்காரர், அவனை அலட்சியமாகப் பார்த்தார்.

''தேவை இல்லே! எந்தக் காரியத்துக்கும் நான் பிறத்தியாரை எதிர்பார்ப்பதே கிடையாது. நானே ஆளை அழைச்சுக் கிணற்றிலே இறங்கச் சொல்லியிருக்கேன்! ஆசாமி கிணற்றுக்குள் இறங்கியாச்சு!'' என்று எங்கோ பார்த்தபடி பதிலுரைத்தார் அவர்.

திடீரென்று, சமையலறையிலிருந்து ரயில்வேக்காரரின் மனைவி பரபரப்புடன் ஓடி வந்தாள். ''இந்த அநியாயத்தைக் கேளுங்களேன்!... குழந்தை சாதம் சாப்பிடற கிண்ணம் தொலைஞ்சு போச்சு!...'' என்று அலறினாள்.

அப்படியே வெலவெலத்து நின்றுவிட்டான் சீமா. உள்ளங்காலிலிருந்து உச்சந்தலை வரை மின்சாரம் பாய்ந்தது போன்ற உணர்ச்சி பரவியது. கை கால்கள் நடுக்கம் கண்டன. அவன் செய்த குற்றம், இவ்வளவு சீக்கிரத்தில் அம்பலத்துக்கு வந்து விடும் என்று அவன் சொப்பனத்தில் கூட நினைக்கவில்லை!

காலில் தேள் கொட்டிவிட்டாற் போல் துள்ளினார் குடித்தனக்காரர்.

''என்ன?...என்ன சொன்னே?...கிண்ணம் தொலைஞ்சு போச்சா?...நன்னா தேடிப் பார்த்தியா?...'' என்று படபடப்புடன் வினவினார். அவரையும் அறியாமல், அவர் பார்வை சீமாவின் மீது விழுந்தது. அவன் உடல் கூனிக் குறுகியது.

''சல்லடை போட்டுத் தேடியாச்சு! ஒரு மூலை முடுக்கு பாக்கியில்லே! நேற்று ராத்திரி குழந்தை அதிலேதான் சாப்பிட்டான்! எனக்கு நன்னா நினைவு இருக்கு! திடீர்னு இப்போ பார்த்தால் காணோம்!...'' என்று அடுக்கிக் கொண்டே போனாள் அவள்.

வெறும் வாயை மெல்பவனுக்கு அவலும் கிடைத்து விட்டால், கேட்க வேண்டுமா? தம்முடைய பத்து வயதுப் பையனை அழைத்தார் பெரியவர்.

''எலே! உடனே வீட்டுக்காரர் கிட்டே போய், விஷயத்தைச் சொல்லிக் கையோடு அழைத்து வா! அவரிடம் ஒரு வார்த்தை போட்டுவிட்டு, போலீசுக்குத் தெரிவிக்க வேண்டியதுதான்!''

பையன் சிட்டாகப் பறந்தான்.

சீமாவுக்கு இவ்வுலக நினைவே இல்லை. அவன் அகக் கண்ணில் ஓர் காட்சி:

'வீட்டுக்காரர் ஓடி வருகிறார். பெரிய மனிதரின் உத்தரவுப்படி, வீடு முழுவதும் சோதனை நடைபெறுகிறது. காணாமற்போன கிண்ணம் அவன் வீட்டிலிருந்து கிடைக்கிறது. இரக்கம் காட்டிய வீட்டுக்காரர் அவன்மீது காறித் துப்புகிறார். ரயில்வேக்காரரோ நாக்கைச் சாட்டையாகச் சுழற்றி வீசுகிறார். புடவைத் தலைப்பால் முகத்தை மூடிக் கொண்டு, நெஞ்சு பிளக்க விம்முகிறாள் மரகதம். குழந்தை நீலகண்டன் பரிதாபமாக மலங்க மலங்க விழிக்கிறான்.'

# சிறந்த உழைப்பிற்கு உகந்த தயாரிப்புகள்



தரத்தில் உயர்ந்ததும், குறைந்த விலையுள்ளதுமான நேஷனல்-எக்கோ ரேடியோக்களும் க்ளியர்டோன் தயாரிப்புகளும் நீங்கள் தேர்ந்தெடுத்துக்கொள்ளுமாறு விதவிதமாக உள்ளன!

## நேஷனல் எக்கோ ரேடியோக்கள்



நேஷனல்-எக்கோ மாடல் U-717: 5 வால்வுகளும் 3 பாண்டுகளும் கொண்ட இந்த ஏஸி/டிஸி ரேடியோவில் பெரிய நேஷனல்-எக்கோ ஸெட்டுகளில் உள்ள சில அம்சங்கள் அடங்கியுள்ளன. 'மான்ஸூனைஸ்' செய்யப்பட்டது. ரூ. 350/-



நேஷனல்-எக்கோ மாடல் 732: அதன் ரகத்தில் இணையற்றது. சிறந்த உழைப்பு. 6 வால்வுகளும் 3 பாண்டுகளும் கொண்ட ஏஸி மற்றும் ஏஸி/டிஸி ஸெட்டுகள் கிடைக்கும். 'மான்ஸூனைஸ்' செய்யப்பட்டது. ரூ. 335/-

## Kleertone 'க்ளியர்டோன்' லாம்புகளும் உபகரணங்களும்

'க்ளியர்டோன்' எலெக்டிரிக் வாட்டர் ஹீட்டர்கள்: குழாயைத் திறந்ததும் உடனே வெந்நீர் கிடைக்கும். காலன்: 5 முதல் 15 காலன்கள் வரை



'க்ளியர்டோன்' ஸின்க்ரோனஸ் எலெக்டிரிக் கடிகாரங்கள்: மிகவும் நம்பகமானவை. 7 டிஸைன்களில் பல்வேறு நிறங்களில் கிடைக்கும்



'க்ளியர்டோன்' குக்கிங் ரேஞ்சு: தனித்தனியே கண்ட்ரோல்களுள்ள 2 'ஹாட் ப்ளேட்'களும் ஒரு அடுப்பும் கொண்டது. 5500 வாட்ஸ் வரை மின்சாரப் பளுவை தாங்கும்



'க்ளியர் டோன்' பல்புகள், ப்ளாரஸண்ட் ட்யூபுகள் மற்றும் உபகரணங்கள்: சிக்கனமானவை. பிரகாசமான ஒளியைப்பெற சிறந்த சாதனங்கள்



'க்ளியர்டோன்' வீட்டு இஸ்திரி பெட்டி: 7 ராத்தல் எடை. பலமான க்ரோமியம் மூலாம் பூசப்பட்டது. 230 வோல்ட்ஸ், 450 வாட்ஸ்



'க்ளியர்டோன்' எலெக்டிரிக் கெட்டில்: பலமான க்ரோமியம் மூலாம் பூசப்பட்டது. 3 பைன்ட் கொள்ளும்; 230 வோல்ட்ஸ், 450 வாட்ஸ்






ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையென்ஸெஸ் பிரைவேட் லிமிடெட்
ஆபெரா ஹவுஸ், பம்பாய் 4 • 3, மதன் ஸ்ட்ரீட், கல்கத்தா 13 • ப்ரேஸர் ரோடு, பாட்னா 1/18, மௌண்ட் ரோடு, மதராஸ் • 36/79, ஸில்வர் ஜூபிலி பார்க் ரோடு, பங்களூர் • ஜோர்ஜியன் காலனி, சாந்தினி சௌக், டில்லி • ராஷ்டிரபதி ரோட், செகந்திராபாத்

GRA 7773

சீமாவின் உடல் தெப்பமாகி விட்டது.

விஷயம் தெரிந்த இரண்டே நிமிஷங்களில், நாலு வீடு தள்ளியிருந்த வீட்டுக்காரர் வேகமாக ஓடி வந்தார்.

"என்ன சார்! கின்னம் காணுமாமே! நன்றாகத் தேடிப்பார்த்தேளா?" என்றபடியே உள்ளே நுழைந்தவரை, வெறுப்புடன் பார்த்தார் குடித்தனக்காரர்.

"என்ன சார்! அப்படிக் கேட்கிறேளே!... தேடிப் பார்க்காமல், உங்களுக்குச் சொல்லி அனுப்புவோமா? வீடு முழுவதும் பார்த்தாச்சு, ஒரே ஒரு இடம் தவிர!" என்றார் சற்று அழுத்தலாக.

"அது எந்த இடமோ?"

"இதோ, இவர் போர்ஷன்தான்!" சீமாவைச் சுட்டிக் காட்டினார் ரயில்வேக்காரர்.

வீட்டுக்காரரின் முகத்தில் அதிருப்தி நிலவியது.

"அதென்ன சார்! அப்படி வாய் கூசாமல் சொல்கிறீர்களே! உங்க வீட்டுப் பொருளை, இவர் வீட்டில் தேடிப் பார்ப்பதாவது......! என்ன அர்த்தம்?" சற்று உஷ்ணமாகவே வினவினார் அவர்.

"என்னவோ நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டேன்! அப்புறம்......"

ரயில்வேக்காரர் முடிக்கவில்லை. கிணற்றுக்குள் இறங்கிய ஆசாமி, நீர் சொட்டச் சொட்ட வெளியே வந்தான்.

"என்னங்க இது? எவ்வளவு சேறு சகதி தெரியுங்களா? என்னவோ இரண்டணா கூலிக்கு அரை மணி பேரம் செய்தீங்களே...? சொம்பு ஒண்ணு தான்னு சொன்னீங்க! இதோ, ஒரு கின்னமும் இருந்ததுங்க! கஷ்டம் பார்த்துக் கூலி கொடு, சாமி!" என்று கூறியபடியே, செம்பையும் கின்னத்தையும் கீழே வைத்தான் அவன்.

கல்லாய்ச் சமைந்து விட்டான் சீமா.

கண் கொட்டாமல் பார்த்தார் குடித்தனக்காரர். சந்தேகமில்லாமல் அது அவர் வீட்டுக் கின்னம்தான்.

விழித்த விழி எடுக்காமல், பார்த்தான் சீமா. சந்தேகமில்லாமல், சில மணி நேரங்களுக்கு முன்பு அவன் ஒளப்பி வந்து தன் வீட்டினுள் பதுக்கிய கின்னம்தான் அது.

விஷயம் அவன் மூளைக்கு எட்ட அதிக நேரம் ஆகவில்லை. விடியற்காலையில், தன்னை மறந்து அவன் உறங்கிக் கொண்டிருக்கும்போது, வழக்கம்போல் தன் திருவிளையாடல்களைத் தொடங்கியிருக்கிறான் நீலகண்டன். இருளில் வைக்கப்பட்ட கின்னம், அவன் பொல்லாத கண்களுக்குப்பட்டு விட்டது. அவன் கைக்குக் கிடைக்கும் பொருள் எங்கு போய்ச் சேருமோ, அங்கேதான் கின்னமும் போயிருக்கிறது—அதாவது கிணற்றுக்கு.

எந்த விஷமத்தனத்தைச் சாக்காக வைத்துக் கொண்டு இவ்வளவு நாட்கள் அவன் குழந்தையைக் கொடுமைப் படுத்தினானோ, இன்று அதே விஷமத்தனம் எவ்வளவு பெரிய ஆபத்திலிருந்து அவனைக் காப்பாற்றிவிட்டது! எவ்வளவு பெரிய அபவாதத்திலிருந்து அவனுக்கு விடுதலை அளித்துவிட்டது!

வாழ்விலேயே முதன் முறையாக, தான் பெற்ற குழந்தையிடம் பரிவு ஏற்பட்டது அவனுக்கு.

ரயில்வேக்காரரை, அலட்சியமாக நோக்கினார் வீட்டுக்காரர்.

"என்னவோ சொன்னீர்களே! பார்த்தீர்களா? அதுதான் வாய் அறியாமல் வார்த்தை பேசக் கூடாது? இப்போ உங்க பேச்சை நம்பி, இவர் அறையைச் சோதனை போட்டிருந்தால், இவருக்கு எவ்வளவு வருத்தமாக இருந்திருக்கும்......!" என்றார்.

அப்படியும், குடித்தனக்காரர் விட்டுக் கொடுக்கவில்லை.

"சரிதான் சார்! இவர் இல்லாட்டா, இவர் பிள்ளை செஞ்சிருக்கான். பிள்ளை செய்தால் என்ன, பெற்றவன் செய்தால் என்ன? எல்லாம் ஒன்றுதான்!" என்ற பதில் அவரிடமிருந்து எழுந்ததுதான் தாமதம், எட்டி நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த நீலகண்டனைப் பிடித்துக் கொண்டான் சீமா.

"டேய்! நீயாடா, கிணற்றிலே இதைப் போட்டே?" ஆக்ரோஷத்துடன் வினவினான்.

மௌனமாகத் தலையசைத்தது குழந்தை.

பளீரென்று அதன் முதுகில், நாலு அறை வைத்தான் சீமா, அலறியபடியே உள்ளே ஓடி விட்டது குழந்தை. இவ்வளவு நாட்கள் தன் வெறுப்புக்காகக் குழந்தையை நொறுக்கியவன், இன்று ஊருக்காக—உலகுக்காக—மனத்தில் உதிரம் சொட்ட, பிள்ளைமீது கை வைத்து விட்டான்.

"நல்ல கலாட்டா, போங்க! நீங்க எங்கேயாவது, ஞாபகமறதியா சாமானை வைத்திருப்பீர்கள். குழந்தைதானே அதுவும்? என்ன கண்டது, பாவம்? உங்களுக்கு ஏன் வீண் மனக்கசப்பு? இன்னும் பத்து நாட்களில் நான் இருக்கும் இடத்திலேயே, ஒரு சின்ன போர்ஷன் காலியாகிறது! நான் இவரை அங்கே அழைத்துக் கொள்கிறேன்!" என்று கூறியபடியே வெளியேறினார் வீட்டுக்காரர்.

மௌனமாகத் தன் அறையினுள் நுழைந்தான் சீமா.

தாயின் மடியில் தலையை வைத்துக் கொண்டு, விம்மிக் கொண்டிருந்தான் குழந்தை. அவன் உள்ளம் கரைந்தது.

ஓடிச் சென்று, ஒரு கையால் குழந்தையைத் தூக்கினான்.

"ஐயோ! வேண்டாமே! அடிச்சது போதாதா?" என்று வழக்கம் போல் நடுங்கினாள் மரகதம்.

ஆனால், இம்முறை அவள் எதிர்பார்த்தது நடக்கவில்லை.

இத்தனை நாட்கள், அடித்த கையாக இருந்தது, இன்று அணைக்கும் கையாக மாறியது. குழந்தையின் முதுகை மெல்ல வருடினான் சீமா. அவன் கண்களில் நீர் கசிந்தது.

"நீலகண்டா! உன் பெயருக்கேற்றபடி நடந்து கொண்டு விட்டாயடா, கண்ணே! தவறு செய்த தந்தையைத் திருத்த, தன் முதுகில் தண்டனை பெற்றாயே! சுவாமி சத்தியமாகச் சொல்கிறேன். இந்த உடம்பிலே உயிர் உள்ளவரை, இனிமேல் உன்னை அடிக்க மாட்டேன்! உன்னையும் அம்மாவையும் உலகத்தாரைப்போல் வைத்துக் கொள்வேனடா!"

குழந்தையின் காதிலே அரற்றியபடியே முணுமுணுத்தான் சீமா.

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs. Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10

**Managing Editor: T. Sadasivam**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




# ஹிமாலயா
# புக்கே
# டால்கம்
# பவுடர்




நாள் முழுதும்
புதுமலர்ச்சி
யுடன்
விளங்க



- நறுமண-
  மோங்குவது
- சிக்கனமிகுந்தது
- குடும்பத்தினர்
  அனைவருக்கும் உகந்தது

லண்டனிலுள்ள இராஸ்பிக் சார்பாக, ஹிந்துஸ்தான்
லீவர் லிமிடெட்டினால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

HBT. 19-50 TM